


# கேசரி பாலகிருஷ்ண பிள்ளை

கே.எம். ஜியார்ஜ்



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

*உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்தரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.*

*(நாகார்ஜுனமலைச் சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு. பட உதவி: நேஷனல் மியூசியம், புதுதில்லி.)*

*இந்திய இலக்கியச் சிற்பிகள்*

# கேசரி பாலகிருஷ்ண பிள்ளை

மூலம் : கே.எம். ஜியார்ஜ்

தமிழாக்கம் : சைதை சுந்தரமூர்த்தி



*சாகித்திய அக்காதெமி*

*Kesari Balakrishna Pillai* – Tamil Translation by
Saidai Sundaramurthy of K.M.George's monograph in English,
Sahitya Akademi, New Delhi, (1998) Rs. 25.


முதல் வெளியீடு 1998
ISBN–81–260-0595-5

சாகித்திய அக்காதெமி

தலைமை அலுவலகம்:
இரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை, புது தில்லி 110 001.

விற்பனை
'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி – 110 001.

'குணா பில்டிங்', 304–305, அண்ணா சாலை,
தேனாம்பேட்டை, சென்னை – 600 018.

ஜீவன் தாரா பில்டிங், 4வது மாடி,
டைமண்ட் ஹார்பர் சாலை, கல்கத்தா 700 053.

172, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை,
தாதர், மும்பாய் – 400 014.

109, ஜே.ஸி. சாலை, பெங்களூர் – 560 002.

விலை ரூ. 25

அச்சிட்டோர் : எமரெல்ட் அச்சிட்டகம், சென்னை – 600 029.

# உள்ளே

# முகவுரை

இந்திய இலக்கியச் சிற்பிகள் என்ற தொடரில் வெளியிட, கேசரி பாலகிருஷ்ண பிள்ளையைப் பற்றிய சிறு நூலொன்றை எழுத என்னைக் கேட்டுக் கொண்ட சாகித்திய அக்காதெமிக்கு நான் நன்றியுள்ளவனாக இருக்கின்றேன். இம்மாதிரியான தொடரில் நான் எழுதும் மூன்றாவது நூலாகும் இது. மற்றவை "குமாரன் ஆசான்" "ஏ.ஆர். ராஜராஜவர்மா" என்பவையாகும். புகழ்பெற்ற இம்மூவரும் ஒரே தலைமுறையைச் சார்ந்தவர்கள் இல்லையென்றாலும் அவர்கள் ஆத்மார்த்த உறவு என்று பிரசித்திப் பெற்ற குழுவைச் சார்ந்தவர்கள் — மலையாள இலக்கியத்தின் முன்னறிவிப்பாளர்கள் – மறுமலர்ச்சியாளர்கள்.

எனது கையெழுத்துப் பிரதியைப் படித்தும், உபயோகமான குறிப்புகளைக் கொடுத்தும் உதவிய திரு.பி. கோவிந்த பிள்ளை, டாக்டர் பி.வி. வேலாயுதன் பிள்ளை, பேராசிரியர் கே. சங்கரன் நம்பூத்திரி, டாக்டர் மாவேலிக்கரா அச்சுதன் ஆகியோருக்கு எனது நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

கே.எம். ஜியார்ஜ்

# 1. இளமைக் காலம்

கேசரி பாலகிருஷ்ண பிள்ளை யென்று பலராலும் அறியப்படும், அய்யப்பன் பிள்ளை பாலகிருஷ்ண பிள்ளை அல்லது ஏ. பாலகிருஷ்ண பிள்ளை, தற்கால மலையாள இலக்கியத்தில், கவர்ச்சியும், பிரசித்தியும் பெற்றவர்களுள் ஒருவராவார். அவர் ஒரு பெரிய புரட்சி எழுத்தாளரும், சிந்தனையாளருமாவார். அவருக்குப் பிரியமான காரண காரியங்களுக்காகத் தியாகத் தழும்புகளையும் துன்பங்களையும் ஏற்று வீரகாவ்யமாகத் திகழ்ந்தவர். அதிமுன்னேற்றமடைந்துள்ள உலகநாடுகளின் மத்தியில் சமூக, இலக்கிய கலாச்சார முன்னேற்றங்களுக்காகப் பாடுபடும் ஒரு பிராந்திய "உணர்வுக் கொம்பாக"ச் செயல்படுவது அவரது பங்காக இருந்தது. இதனால் வளர்ந்து வரும் மலையாள எழுத்தாளர்களால் குறிப்பாக இந்த நூற்றாண்டின் நாற்பது, ஐம்பதுகளில் இருந்த முன்னேற்ற இயக்கத்தவர்களால் அவர் ஒரு தத்துவவாதியாகவும், வழிகாட்டியாகவும் ஒப்புக் கொள்ளப்பட்டார். அவர் ஒரு எழுத்தாளராகவும், விமர்சகராகவும், பத்திரிக்கையாளராகவும், வரலாற்று ஆசிரியராகவும், அரசியல் சிந்தனையாளராகவும், ஆராய்ச்சியாளராகவும் இருந்தார். அவருக்கு இத்தகைய திறமைகளும், நல்ல கல்வியும் சமூக அந்தஸ்தும் இருந்த போதிலும், அவர் ஒரு படாடோபமற்ற அடக்கமான வாழ்க்கையை மேற்கொண்டு, எதிர்ப்புகளையும், பிணக்குகளையும், சவால்களையும் சந்தித்தார் —இவைகளெல்லாம் அவர் மனதில் கொண்டிருந்த குறிப்பிட்ட இலட்சியங்களுக்காகவே.

பாலகிருஷ்ணபிள்ளை திருவனந்தபுரத்தில் 1889—ம் ஆண்டு ஏப்ரல் 13ம் நாள் பிறந்தார். அவரது தாயார் பார்வதி அம்மா முன்னாள் திருவாங்கூர் சமஸ்தானத்தின் ஒரு பகுதியாக இருந்த நெய்யாடின்கரா தாலுக்காவிலிருந்த ஒரு கண்ணியமிக்க நாயர் குடும்பத்தைச் சார்ந்தவர்.

தென் திருவாங்கூரைச் சார்ந்த நாயர் இனத்தவர்கள், மகாராஜாக்களின் நம்பிக்கையான போர்வீரர்களாக இருப்பதில் பெருமை கொண்டவர்கள். அதனால் கணிசமான நிலங்களைச் சொந்தமாகப் பெற்றனர். பார்வதி அம்மாவும் அம்மாதிரியான குடும்பத்தைச் சார்ந்தவர்.

அவர் இளவயதினராக இருந்தபோது அவரது குடும்பம் திருவனந்தபுரத்துக்குக் குடிபெயர்ந்தது. பாலகிருஷ்ண பிள்ளையின் தந்தை தாமோதரன் கர்த்தா, குன்னத்து நாடு தாலுக்காவைச் சேர்ந்தவர். இது திருவனந்தபுரத்துக்கு 240 கி.மீ. தூரத்தில் உள்ளது. அவர் ஒரு புகழ்பெற்ற வடமொழிப் புலவர். எனவே அவர், மகாராஜாவின் குழந்தைகளுக்குப் பாடம் கற்பிக்கத் தனது இளவயதில் திருவனந்தபுரம் வந்தார். பின்பு, திருவனந்தபுரம் கோட்டைப் பகுதியில் உள்ள அரசினர் பெண்கள் பள்ளியில் வடமொழிப் பண்டிதராக நியமிக்கப்பட்டார். சிலநூல்களின் ஆசிரியரும், கவர்ச்சியை விரும்புபவருமான தாமோதரன் கர்த்தா, பார்வதி அம்மாவை 1888–ல் திருமணம் செய்து கொண்டார். குட்டப்பன், என்றழைக்கப்பட்ட பாலகிருஷ்ண பிள்ளை அவர்களது முதல் பிள்ளை. 1890–ம் ஆண்டு டிசம்பர் 17–ம் தேதி பிறந்த பாப்புண்ணி என்றழைக்கப்பட்ட பத்மநாபப் பிள்ளை அவர்களின் இரண்டாவது மகன். பின்பு தாமோதரன் கர்த்தா தனது சொந்தக் காரணங்களுக்காக, பார்வதி அம்மாவை விவாகரத்து செய்து விட்டார். பின்பு அந்த அம்மையார், நாயர் வம்சத்தில் வந்த பத்பநாபப் பிள்ளை என்பவரை மணந்து கொண்டார். குட்டப்பனுக்கு, இந்தத் திருமணத்தின் மூலம் சந்திரசேகரன் என்ற சகோதரன் 1907–ம் ஆண்டு ஏப்ரல் 16–ம் நாளில் பிறந்தான்.

பாலகிருஷ்ண பிள்ளையின் இளமைக் காலம் பற்றிய விவரங்கள் அதிகமாகத் தெரியவில்லை. ஏனென்றால் அவர் தனது சுயசரிதையை எழுதவில்லை. அவரைப் பற்றி வெளிவந்த நூல்களும் அவரது இளமைப் பருவம் பற்றிய குறைவான செய்திகளையே தருகின்றன. குட்டப்பன் ஒரு நோயாளியான குழந்தை. அவன் அடிக்கடி ஆஸ்துமாவின் தாக்குதலுக்கு ஆளானான். பலவிதமாக மருந்துகள் கொடுக்கப்பட்டாலும் அவை அனுகூலமான முன்னேற்றத்தைத் தரவில்லை. இறுதியில் தாமோதரன் கர்த்தா, அவனது நோயைப் போக்க ஏத்துமானூர் கோயிலுக்கு ஒரு தங்க விக்ரகம் அளிக்கத் தீர்மானித்தார். அவனும் அவனது தாயும், அப்போது அவனது மாமா வீட்டில் தங்கியிருந்தனர். அவன் மாமா கருநாகப் பள்ளியில் தாசில்தாராக இருந்தார். எனவே அவனும் அவனது பெற்றோர்களும் கருநாகப் பள்ளியிலிருந்து வைக்கத்துக்கு ஒரு பெரிய படகில் ஒரு சிப்பாயின் துணையுடன் சென்றனர். பின்பு அங்கிருந்து ஏத்துமானூர் செல்ல வேண்டும். வழியில் கொள்ளைக்காரர்கள் அவர்கள் சென்ற படகைத் தங்களது இருவிசைப்படகுகளுடன் நடு இரவில் நெருங்கினர். அபாயத்தை உணர்ந்த சிப்பாய் சமயோகிதமாக ஒரு நாடகம் நடத்தினான். அவன் உடனே தனது மூட்டையைப் பிரித்து அதிலிருந்த தனது சிப்பாய் உடையை அணிந்து கொண்டான். அவனது சிவந்த தலைப்பாகையையும் சிப்பாய் உடுப்பையும் கண்ட கொள்ளையர்கள் பயந்தனர். அவன் அவர்களை

நோக்கி, அவர்கள் உடனே அங்கிருந்து போகாவிட்டால், அவன், தலைவனையும், மற்ற சிப்பாய்களையும் எழுப்பப் போவதாகக் கூறினான். கொள்ளையர்கள் உடனே படகை விட்டுச் சென்றனர். தாமோதரன் கர்த்தாவும், நான்கு வயது குட்டப்பனும் தான் இந்த நாடகத்துக்குச் சாட்சிகள். இந்தச் சமயத்தில் தான் குட்டப்பன் முதன் முதலாக சாவின் பயத்தைச் சந்தித்தான். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு சாவைக் கண்டு அவன் அஞ்சியதேயில்லை. சிறுவனாக இருந்தபோது அவன், தனது இளைய சகோதரர்களுடன் சண்டை பிடிக்கும் இயல்பினனாக இருந்தான். அவனது தாய், அவர்களது தர்க்கங்களையும், சண்டைகளையும் தீர்த்து வைக்கப் பெரும்பாடு பட்டாள்.

பாலகிருஷ்ண பிள்ளையின் தாயை அவரது தகப்பனார் விவாகரத்து செய்து விட்டபின், அவரது தாயார் மறுமணம் செய்து கொண்டார். அதன் விளைவாக, பாலகிருஷ்ண பிள்ளை, தனது மாமன் அய்யப்பன் பிள்ளை வீட்டில் தனது இளமைக் காலத்தைக் கழிக்க வேண்டியதாயிற்று. திருவனந்தபுரம் ஒய்.எம்.சி.ஏ. விலிருந்து கல்லெறியும் தூரத்திலிருந்த காந்தாரி அம்மன் கோயிலில் இருந்த பள்ளிக்கூடம் அவரது முதற் பள்ளியாக அமைந்தது. பக்கத்திலிருந்த அந்த ஆரம்பப் பள்ளியில் அவர் படிக்கத் தொடங்கினார். அவருக்கு எட்டுவயதான போது, அவரது மாமா, தாசில்தாராக இருந்ததால், கொல்லத்துக்கு மாற்றப்பட்டார். எனவே அவரது படிப்பு கொல்லத்தில் தொடர்ந்தது. அங்கு அவர் ஆங்கிலத்தில் கற்கத் தொடங்கினார். ஓர் ஆண்டுக்குப் பின் அவரது மாமா மீண்டும் திருவனந்தபுரத்திற்கு மாற்றப்படவே குட்டப்பனும் திருவனந்தபுரத்துக்குத் திரும்ப வேண்டியதாயிற்று. அங்கு மகாராஜா உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்தார். அது தற்போது எஸ்.எம்.வி. உயர்நிலைப் பள்ளியாக உள்ளது. அங்கு அவர் மெட்ரிகுலேஷன் வரையில் படித்தார். 1904–ம் ஆண்டு தனது 14–ம் வயதில் அவர் மெட்ரிகுலேஷன் தேர்வில் வெற்றியடைந்தார்.

பாலகிருஷ்ண பிள்ளை உயர்நிலைப் பள்ளியில் இருந்தபோது அவருக்கு எம். ராமவர்மா தம்பான், பி.கே. நாராயண பிள்ளை, ஒ.எம்.செரியன், போன்ற அனுபவமிக்கக் கல்வியாளர்களிடம் கற்கும் வாய்ப்பு ஏற்பட்டது. பின்பு அவர் மகாராஜா கல்லூரியில் சேர்ந்ததும் இந்த அனுபவம் அவரது மனதின் எல்லைகளை விரிவாக்கியது. 1906–ல் அவர் தனது எப்.ஏ., தேர்வில், ஆங்கிலம், வரலாறு, ஆகிய பாடங்களில் முதல் வகுப்பில் தேர்ச்சியடைந்தார். பின் அதே கல்லூரியில் தொடர்ந்து படித்து 1908–ம் ஆண்டு, பி.ஏ., தேர்வில், வரலாறு பொருளாதாரம் ஆகியவற்றில் முதல் வகுப்பில் தேறினார். அவர் ஆங்கிலத்தை ஐரோப்பிய பேராசிரியர் ஹட்சனிடமும், வரலாற்றை பேராசிரியர் லெபர், பேராசிரியர் கே.வி. ரங்கசாமி ஐயங்கார்

ஆகியோரிடமும் கற்றார். அறிஞரும் இலக்கணப் புலவருமான பேராசிரியர் ஏ.ஆர். ராஜராஜ வர்மா, விமர்சகர் பி.கே. நாராயண பிள்ளை ஆகியோர் அவருக்கு மலையாளம் கற்பித்தனர். சட்டம், அரசியல், கல்வி ஆகிய துறைகளில் புகழ் பெற்ற, பட்டம்தாணு பிள்ளை, டி.எம்.வர்கீஸ், ஏ. கோபால மேனன் ஆகியோர் அவரது ஒருசாலை மாணாக்கர்களாக எண்ணப்படுகின்றனர்.

## கல்லூரியில் ஆசிரியர்:

பாலகிருஷ்ண பிள்ளை பி.ஏ. பட்டம் பெற்றதும் பெண்களுக்கான மகாராஜா கல்லூரியில் வரலாற்று ஆசிரியராக நியமிக்கப்பட்டார். அவர் அந்தக் கல்லூரியில் எட்டாண்டுக் காலம் பணிபுரிந்தார். ஆனால் போராசிரியர் கே.வி. ரங்கசாமி ஐயங்காரின் அறிவுரைப்படி ஆண்களுக்கான மகாராஜா கல்லூரியிலும் இடையிடையே வரலாற்று ஆசிரியராக (டியூட்டர்) அமர்த்தப்பட்டார். அவர் எங்குப் பணிபுரிந்தபோதிலும் அவரது புலமையையும், ஆங்கில மொழியில் அவருக்கிருந்த திறமையையும், மாணவர்கள் பாராட்டினார்கள். இக்காலகட்டத்தில்தான் அவர் திருவாங்கூர் வரலாற்றை மலையாளத்தில் எழுதினார். அந்த நூல் சென்னை லாங்க்மென்ஸ் கிரீன் அண்டு கம்பெனியால் வெளியிடப்பட்டது. இதுதான் அவரது முதல் நூல்.

புத்தகங்களைப் படிப்பதில் அதிக ஆர்வங் கொண்டிருந்த அவர் அடிக்கடி திருவனந்தபுரம் பொது நூலகத்துக்கு செல்வார். உயர்நிலைப் பள்ளி மாணவனாக இருக்கும் போதே அவர் அந்த நூலகத்தில் உறுப்பினராகச் சேர்ந்தார். அந்த நாட்களில் அவர் ஆங்கிலப் புதினங்களைப் படிப்பதில் ஆர்வங் கொண்டிருந்தார். என்றாலும் பொது அறிவை வளர்த்துக் கொள்ளவும், தொழிலில் முன்னேற்றங்காணவும், தன்னறிவை வளர்த்துக் கொள்வதில் முனைந்திருந்தார். அந்தச் சமயத்தில் திருவனந்தபுரத்திலிருந்த சட்டக்கல்லூரி பகுதி நேர வகுப்புகளில் சேர மாணவர்களுக்கு வாய்ப்பளித்தது. அரசு அலுவலகத்தில் பணிபுரியும் அதிகாரிகளும், கல்லூரிகளில் பணிபுரியும் ஆசிரியர்களும் தங்கள் சட்ட அறிவை வளர்த்துக் கொள்ள மாலை வகுப்புகளில் சேர்ந்து பயின்றனர். பாலகிருஷ்ண பிள்ளையும் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு 1913–ம் ஆண்டு பி.எல்., தேர்வில் மேல்தரமாணவனாக வெற்றி பெற்றார். அந்த ஆண்டுக்கான "கல்லன் சட்ட பரிசையும்" பெற்றார். என்றாலும் 1917–ம் ஆண்டுவரை அவர் ஆசிரியராகவே பணி புரிந்தார். பின்பு மாணவர்களின் ஏமாற்றத்துக்கிடையில் அவர் தமது ஆசிரியத் தொழிலை விட்டுவிட்டார். அவரது பல, மாணவர்கள் பிற்காலத்தில் புகழ் பெற்றவர்களாக விளங்கினார்கள். உலக நாடுகள் சபையில் பணி புரிந்த டாக்டர் பி.பி. பிள்ளை, மலையாள இலக்கிய ஆசிரியரும், 1954–ம் ஆண்டு

சாகித்திய அகாதெமி பரிசு பெற்றவருமான ஆர். நாராயண பணிக்கர், ஜவஹர்லால் பிரதம மந்திரியாக இருந்தபோது மத்திய அரசில் மந்திரியாகப் பணிபுரிந்த ஸ்ரீமதி லட்சுமி என். மேனன் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர் ஆவர்.

கல்லூரியில் மாணவராக இருந்தகாலத்திலேயே பாலகிருஷ்ண பிள்ளை, அவர் படித்த சில புத்தகங்களின் ஆதிக்கத்துக்குள்ளானார். அவைகளில் சிலவற்றை அநேக முறை படித்தார். சாகித்திய கர்த்தாவும் இசை வல்லுனருமான ஞானபூஷணம் டி. லட்சுமண பிள்ளை அவர்களின் மகனும் வகுப்புத் தோழனுமான வீரகுமார் அவர்களின் நட்பு அவரை ஆரம்ப காலத்தில் மிகவும் ஆட்கொண்டது. பாலகிருஷ்ண பிள்ளைக்கு பிரெஞ்சு இலக்கியத்தை அறிமுகம் செய்து வைத்தவரே இந்த வீரகுமார் தான். வீரகுமார் இளமையில் படிப்பு முடியுமுன்பே மறைந்து போனாலும், அவர் பிரெஞ்சு இலக்கியத்தின் மீது உண்டாக்கிய பற்று, பாலகிருஷ்ண பிள்ளையின் வாழ்நாள் பூராவும் இருந்தது. பிரெஞ்சு இலக்கியத்தின் மீது பாலகிருஷ்ண பிள்ளைக்கிருந்த கவர்ச்சியும், உறவும் எல்லாரும் அறிந்ததே.

வீரகுமார் அவர்களால் பரிசளிக்கப்பட்ட மாக்ஸ் நார்டா என்பவர் எழுதிய "டிஜெனரேஷன்" என்ற நூல் பாலகிருஷ்ண பிள்ளை விரும்பிப் படித்த நூல்களில் ஒன்றாகும். அவர் அந்தப் புத்தகத்தைப் பலமுறை படித்தார். ஆனால் அந்தப் புத்தகத்தின் ஆசிரியர் கூறியிருந்த பலவிஷயங்களை அவர் ஒத்துக் கொள்ளவில்லை. ஆனால் அந்தப் புத்தகத்தில் அமைந்திருந்த தர்க்கரீதியான போக்கு பிள்ளையின் எண்ணங்களைத் தூண்டிவிட்டது. இது நடைமுறையில் அவரது தனிப்பட்ட குணத்துக்கு ஒரு புதிய பரிமாணத்தை வகுத்துக் கொடுத்தது.

எமிலி எழுதிய ஜர்னல் – இன் – டைம் என்ற மற்றொரு நூல் அவரது ஆரம்ப கால மனவளர்ச்சிக்கு மிகவும் தூண்டுகோலாக அமைந்தது. ஃபிரடரிக் எமிலி என்பவர் ஸ்விஸ் நாட்டுத் தத்துவ ஞானியும், பிரெஞ்சு இலக்கியம், அழகியல் ஆகியவற்றில் பேராசிரியருமாவர். இந்த நூலிலிருந்து எடுக்கப்பட்டவைகளை, சரியான மேற்கோள்களாகத் தனது பத்திரிக்கையின் தலையங்கங்களில் பிள்ளையவர்கள் எழுதியுள்ளார். ஏறக்குறைய அதேகாலத்தில் பாலகிருஷ்ண பிள்ளை ஸிக்மண்ட் ஃபிராய்ட் அவர்களின் உளப் பகுப்பாய்வு பற்றிய விஷயங்களைப் படித்து வந்தார். இவைகளும் மற்ற நூல்களும் இளைஞரான பிள்ளையின் வளர்ச்சிக்குக் காரணமாயிருந்தன. இந்த மாதிரியான நூல்களைப் படித்ததன் விளைவாக, உணர்ச்சிமிக்க மனநிலையையும், மனோதத்துவ முக்கியத்துவத்தை அறியும் பாங்கையும், பிரச்சினைகளை அணுகும் முறையையும், அநீதி, சமூகக் கேடுகள் ஆகியவற்றை எதிர்த்துப் போராடும் மனஉறுதியையும் அவர் பெற்றார்.

பாலகிருஷ்ண பிள்ளையின் இளைய சகோதரர் பத்மநாபப் பிள்ளை (பாப்புண்ணி) ஓர் உல்லாசமான இளைஞர். அதிர்ஷ்டசாலி. இளைய தலைமுறையின் உன்னதத் தலைவர். அவர் புத்தகப் புழுவான தன் அண்ணனுக்கு எதிரிடையான குணமுள்ளவர். அவர் விளையாட்டுப் போட்டிகளில் வல்லவர்.

பாப்புண்ணி, இண்டர்மீடியேட் தேர்வில் வெற்றி பெற்றதும் அவருக்கு சென்னை மருத்துவக் கல்லூரியில் இடம் கிடைத்தது. சுமார் இரண்டு ஆண்டுகளுக்கு அவரது மாமா, அவரது படிப்புக்கான செலவுகளை ஏற்றுக்கொண்டார். அதன் பிறகு பாலகிருஷ்ணபிள்ளை செலவுகளை ஏற்க வேண்டியதாயிற்று. பிள்ளை, பி.எல்; பட்டம் பெற்றதும் உடனடியாக வழக்கறிஞராகப் பதிவு செய்து கொள்ளாமல், தாம் பார்த்து வந்த ஆசிரியத் தொழிலை விடாமல் பிடித்துக் கொண்டிருந்தார் என்பதற்கும் இதுவே காரணமாயிருந்தது எனலாம். வருமானம் நிச்சயம் இல்லாத வழக்கறிஞர் தொழிலை விட, ஒழுங்கான ஊதியம் கிடைக்கக் கூடிய வேலை நம்பக் கூடியதல்லவா?

பாலகிருஷ்ண பிள்ளை பாடபுத்தகங்கள் எழுதித் தனது வருமானத்தை உயர்த்திக் கொள்ள முயன்றார். "ஆதித்ய தீபிகா", "ராபர்ட் பிரபு" என்ற இரண்டு புத்தகங்களை எழுதினார். தேர்வுத் தாள்களைத் திருத்துவதிலும் வருமானம் அவருக்குக் கிடைத்தது, என்றாலும் அவர் கடனாகப் பணம் பெற வேண்டியிருந்தது. அவர் தன் சகோதரர் சென்னையில் மருத்துவக் கல்வியை முடிக்க இப்படியெல்லாம் பணம் சம்பாதித்து உதவி செய்தார்.

1915–ம் ஆண்டு பாப்புண்ணி, எம்.பி.பி.எஸ்., தேர்வில் வெற்றி பெற்றதாக அறிந்ததும், பிள்ளையவர்கள் தன் தம்பிக்கு, திருவாங்கூர் அரசாங்க வேலையில் சேர வேண்டாமென்றும், மாறாக, இந்தியாவில் பிரிட்டிஷ் அரசாங்க வேலையில் சேருமாறு அறிவுரை கூறினார். அதன்படி அறுவை மருத்துவத்தில் பரிசு பெற்ற பாப்புண்ணி (தற்போது டாக்டர் ஏ.பி. பிள்ளை) மதராஸ் மெடிக்கல் சர்வீஸில் சேர்ந்தார். முதல் உலகப் போரின்போது 1916–ல் டாக்டர் பிள்ளை, இந்தியன் மெடிக்கல் சர்வீஸில் பணியாற்றத் தேர்ந்தெடுக்கப் பட்டார். வட இந்தியா, வடபர்மா, மற்றும் பல இடங்களிலிருந்த இராணுவ முகாம்களில் அவர் பணியாற்றினார். ஆனால் சுதந்திரமான கருத்துக்களைக் கொண்டிருந்த அவரால் ஐரோப்பிய அதிகாரிகளுடன் ஒத்துப் போக முடியவில்லை. எனவே ஆஃப்கன் போரில், காலரா நோய் தடுப்புக்காகச் சீரிய முறையில் சேவை செய்ததற்காக அவருக்கு அளிக்கப்பட்ட ஒ.பி.இ. (ஆர்டர் ஆஃப் தி பிரிட்டிஷ் எம்பயர்) என்ற கௌரவமிக்க பட்டத்தைப் பெற்றுக் கொள்ள மறுத்து விட்டார். ஷோலாப்பூரில் இருந்த சமயம் அவர் ஒரு மராத்தி,

பிராடஸ்டென்ட் கிறிஸ்தவ மாதை மணம் செய்துக் கொண்டார். அவள் பம்பாய் மருத்துவக் கல்லூரி பேராசிரியர் ஜோஷி என்பவரின் விதவை.

பாலியல், திருமணம், போன்ற விஷயங்களைப் பற்றி தனிப்பட்ட கருத்துக்களை கொண்டிருந்த போதிலும், பாலகிருஷ்ண பிள்ளை, பெற்றோர் பார்த்த பெண்ணையே திருமணம் செய்து கொண்டார். அவரது மாமா அய்யப்பன் பிள்ளைதான் இந்தத் திருமணத்துக்கு ஏற்பாடு செய்தவர். அவர் வடதிருவாங்கூரில் உள்ள பரூரில் புகழ்பெற்ற குடும்பத்தில் திருமணம் செய்து கொண்டவர். திருவனந்தபுரத்திலிருக்கும் அய்யப்பன் பிள்ளையின் இல்லத்துக்கு அவரது மனைவியின் மூத்த சகோதரியின் மகள் செல்லம்மா வருவது வழக்கம். அவளைக் கண்டதும் பாலகிருஷ்ண பிள்ளையின் தாய்க்கு அவளைத் தனது மருமகளாக ஆக்கிக் கொள்ள வேண்டும் என்ற விருப்பம் ஏற்பட்டது. பாலகிருஷ்ண பிள்ளை, செல்லம்மாவை விட எட்டு வயது மூத்தவர். அவர் அவளைப் பார்க்காவிட்டாலும் அவள் அவரை அவ்வப்போது கவனித்ததுண்டு.

செல்லம்மாவின் உண்மையான பெயர் கௌரி அம்மா என்பதாகும். ஆனால் அவள் அவளது உறவினர்களால் செல்லம்மா என்று அழைக்கப்பட்டாள். அவளது மாமா அனந்தன் பிள்ளைதான் திருமணப் பேச்சை ஆரம்பித்தார். அவர்களது திருமணம் 1917–ம் ஆண்டு வடக்கு பரூரில் உள்ள மாதவனப்பரம்பு என்ற இடத்தில் நடைபெற்றது. அப்போது மாப்பிள்ளையின் வயது இருபத்தெட்டு. பெண்ணின் வயதோ இருபது. அந்தக் காலத்தில் மணமகனும், பெண்ணும் திருமணத்துக்கு முன் ஒருவரையொருவர் பார்த்துப் பேசி கொள்ளும் வழக்கம் இல்லை. ஆனால், திருமணத்துக்குப்பின் செல்லாமாவிடம் பேச வாய்ப்பு ஏற்பட்டதும் பாலகிருஷ்ண பிள்ளை, அவளிடம் தாம் அப்போது பார்த்து வந்த அரசாங்க வேலையை விட்டுவிட்டு, வழக்கறிஞராகத் தொழில் புரியப் போவதாகச் சொன்னார். கூடவே அந்தத் தொழிலில் வருமானத்துக்கு ஏற்பட இருக்கும் நிலையற்ற தன்மையையும் சொல்லி வைத்தார். அவள் கொஞ்சமும் தயக்கமின்றித் தனது கணவரின் விருப்பத்துக்கு ஒப்புதல் அளித்து அவருக்குத் துணையாக இருப்பதாகக் கூறினாள்.

திருமணத்துக்கு மறுநாள் கல்யாணமாப்பிள்ளையும், பெண்ணும், ஒரு பெரிய நாட்டுப் படகில் திருவனந்தபுரத்துக்குப் பயணமாயினர். உறவினர்களும் அதுபோன்ற மற்றொரு படகில் அவர்களுடன் சென்றனர். திருவனந்தபுரத்தையடைய ஒரு வாரம் ஆயிற்று. ஆனால் பாலகிருஷ்ண பிள்ளைக்கு அந்தப் பயணம் ஓர் இன்பச் சுற்றுலா மாதிரியிருந்தது. அவர்கள் திருவனந்தபுரம் அடைந்தபோது அங்கிருந்த நண்பர்களும் உறவினர்களும் மணமக்களுக்கு வரவேற்பளிக்கக் கூடியிருந்தனர். அவரது தந்தை தாமோதரன் கர்த்தாவும், அவர்களை வாழ்த்த அங்கு வந்திருந்ததைக் கண்ட பிள்ளை மிகவும் மகிழ்ச்சியடைந்தார்.

பாலகிருஷ்ண பிள்ளையின் குடும்ப வாழ்க்கையும் அவர் அவரது மனைவியிடம் கொண்டிருந்த உறவும் சற்று வழக்கத்துக்கு மாறாக இருந்தன. அவர் எப்போதும் தனது வேலையிலும், படிப்பதிலும் மூழ்கிப் போயிருந்தார். அவருக்குத் தனது மனைவியிடமும், அன்பானவர்களிடமும் ஓய்வாகப் பேசிக் களிக்க நேரமும் இல்லை. அதனால் அவர் பலரது விமர்சனங்களுக்கு ஆளானார். ஆனால் செல்லம்மா முணுமுணுக்கக்கூட இல்லை. 1918–ம் ஆண்டு பரூரில் அவள் ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அப்போது பிள்ளை திருவனந்தபுரத்தில் இருந்தார். ஆனால் அவர் மனைவியைப் பார்க்கப் போகவுமில்லை; தாய், சேய் நலன் பற்றிக் கவலைப்படவுமில்லை! அவரது இந்தப் போக்கு நண்பர்களாலும் உறவினர்களாலும் பிள்ளையின் இரக்கமற்ற அலட்சியத்தன்மையைக் குறிப்பதாகக் கருதப்பட்டது. பாலகிருஷ்ண பிள்ளை தமது மனைவியையும், குழந்தையையும் மிகவும் விரும்பினார். ஆனால் அவரது அன்பை மற்றவர்போல் வெளிப்படுத்த அவரால் முடியவில்லை. வெளிப்படையான அன்பையும், இளகிய மனதையும் அவரால் மற்றவர்களுக்குத் தெரியும்படி காட்ட முடியவில்லை! முதல் குழந்தைக்கு சாரதா என்று பெயரிட்டனர். அடுத்த ஆண்டு இன்னொரு பெண் குழந்தை பிறந்தது. ஆனால் அது பிறந்த பதிமூன்றாம் நாளிலேயே இறந்து போயிற்று.

பாலகிருஷ்ண பிள்ளை தன் மகள் சாரதாவிடம் ஆழ்ந்த அன்பைச் செலுத்தினார். அவரது பேச்சில் கொஞ்சமும் பரிவு இல்லாததால் அவரது அன்பு வெளிப்படையாகத் தெரியவில்லை. ஆதலால் அக்குழந்தை தந்தையிடம் அன்பு செலுத்துவதற்கு பதில் அவரைக் கண்டு பயந்தது! பிள்ளை தனது படிப்பிலும், நீதிமன்ற அலுவல்களிலும் சுறுசுறுப்பாக இருந்துவிட்டு இரவில் வெகு நேரங்கழித்து, தாயும் மகளும் தூங்கிக் கொண்டிருக்கும்போது வீட்டிற்கு வருவார். அவரது இந்தப் பழக்கம் சிறந்த எழுத்தாளர்களுக்குப் புதிதல்ல. செல்லம்மாள் அவரைப் புரிந்து கொண்டு அவருக்கு ஓர் அமைதியான துணையாக இருந்தாள். எனவே வாழ்க்கைப் படகு அமைதியாகச் சென்றது. கோபத்தையும், வெடுவெடுப்புத் தனத்தையும் அவர் தனது தந்தையிடமிருந்து பெற்றிருந்தார். மேலும் பழங்கால வரலாறு, தொல் பொருள் ஆராய்ச்சி மற்ற கல்வித் துறைகள் ஆகியவற்றில் அவருக்கிருந்த ஆழ்ந்த ஈடுபாடு எல்லாமாகச் சேர்ந்து அநேக சமயங்களில் அவரை வேறு உலகத்திற்கே அழைத்துச் சென்றன. செல்லம்மாள் தன் கணவரின் கோபத்தையும் எரிச்சல்படும் தன்மையையும் நன்கு அறிந்திருந்தாள். அவைகள் வெறும் மேற்போக்கானவை என்பதும் அவளுக்குத் தெரியும். ஆனால் உள்ளத்தில் அவர் மிக்க அன்பும் மரியாதையும் உள்ளவர் என்பதையும் அறிந்திருந்தாள்.

பாலகிருஷ்ண பிள்ளை உடல் ஆரோக்கியமானவர் அல்ல. ஆஸ்த்துமா வியாதி அவரது தோழனாகக் கடைசி நாட்கள் வரை அவருடன் இருந்தது. தன்னுடைய தம்பியைப் போன்று விளையாட்டுகளில் அவருக்கு விருப்பம் இருந்ததில்லை. தன்னுடைய குருவான பேராசிரியர் ஹட்சன் அவர்களின் அறிவுரையின்படி அவர் மாலை நேரங்களில் சிறிதளவு பிராந்தி அருந்தினார். அதுவும் அவரது ஆஸ்த்துமாவைத் தணிக்கும் அளவுக்குத்தான் எடுத்துக்கொள்வார்.

ஆனால் திருமணத்துக்குப் பின் அவர் மதுவைத் தொடவேயில்லை. அங்குப் பரவலாகக் காணப்பட்ட தாய் வழிச் சமுதாய வழக்கம் பாலகிருஷ்ண பிள்ளையால் வெறுக்கப்பட்டது. கற்றறிந்த அவரது தந்தை, தம்முடைய மனைவி, குழந்தைகள் ஆகியோரை விட்டு விட்டு மற்றொரு மாதைத் திருமணம் செய்துக் கொள்ள இந்த வழக்கந்தான் ஓரளவு காரணமாயிருந்தது என்று அவர் எண்ணினார். இந்த வழக்கத்துக்குப் பெற்றோரின் அன்பும் இரக்கமும் இருக்கவேண்டும் என்பதில்லை. அப்படி இருந்தால் அது ஒரு விதிவிலக்கு. ஒரே சமயத்தில் பல கணவர்களை மணத்தல் அல்லது பல மனைவியர்களைக் கொள்ளுதல் ஆகிய வழக்கங்கள் அப்போது சர்வ சாதாரணமாக இருந்தன. இதனால் வாழ்க்கையில் பல கஷ்டங்களும், பிணக்குகளும் ஏற்பட்டன. தன்னைச் சுற்றியுள்ள இந்த வழக்கம் மாற்றப்படவேண்டுமென்று பிள்ளை தீவிரமாக எண்ணினார்.

1922—ல் தாமோதரன் கர்த்தா அவரது இரண்டாம் மனைவி வீட்டில் இறந்துபோனார். பாலகிருஷ்ண பிள்ளைக்கு இச்செய்தி அறிவிக்கப்பட்டது. அவர் இறுதிச் சடங்கில் கலந்து கொள்வதாக ஆள் மூலம் சொல்லியனுப்பிய போதிலும் அவர் அங்கு போகவேயில்லை. "அவர் உயிருடன் இருந்தபோது நான் அவரைப் பார்க்க அங்கு செல்லவில்லை. இப்போது அவரது உடலைப் பார்க்க நான் ஏன் அங்கு போக வேண்டும்?" — இது அவரது வாதம். சில நாட்களுக்குப் பிறகு அவர் தன்னுடைய ஆத்மார்த்த நண்பர்களிடத்தில் தான் செய்த மேற்படி காரியத்துக்காக மிகவும் வருந்தினார்.

பெற்றோர்களின் கண்மணி போன்ற குழந்தை சாரதா அவளது ஒன்பதாவது வயதில் இறந்து போனாள். இது பாலகிருஷ்ண பிள்ளைக்கு ஒரு பேரிடியாக இருந்தது. அவரது வருத்தம் வழக்கமானதாக இல்லை. "இவருக்கென்ன நேர்ந்து விட்டது" என்று அவரது நண்பரும் புகழ்பெற்ற எழுத்தாளருமான ஈ.வி. கிருஷ்ண பிள்ளை வியப்புற்றார். ஏனென்றால் வருத்தத்தின் பிடியில் இருந்த நாட்களிலும், பாலகிருஷ்ண பிள்ளை, புதுப்புது அறிவாற்றல்களைப் பெறுவதில் முனைந்திருந்தார். ஒருவேளை

அவர் தனது கவலையை மறக்க அவராக ஏற்படுத்திக் கொண்ட வழியாக இருக்குமோ? எது எப்படியிருந்தாலும் தன் மகளிடத்தில் அவர் கொண்ட அன்பின் தரத்தில் குறைவு என்ற பேச்சுக்கே இடமில்லை. பிற்காலத்தில் அவர் அமைத்த அச்சகத்திற்கு அவரது மகள் சாரதாவின் பெயர் சூட்டப்பட்டது.

## கல்வி தொடர்பான ஆர்வங்கள்

பாலகிருஷ்ண பிள்ளை ஏராளமான புத்தகங்களை ஆர்வத்துடன் படிப்பவர் என்பதை நாம் அறிவோம். அவரது ஆர்வம் அசாதாரணமானது. புதினங்களிலிருந்து பழைய வரலாற்று நூல்கள் வரை எல்லாவற்றையும் படித்தார். மானுடவியலையும் அவர் விட்டு வைக்கவில்லை. நாளாவட்டத்தில் அவர் புத்தகங்களைச் சீர்தூக்கித் தேர்ந்தெடுக்கும் பழக்கத்தை வளர்த்துக் கொண்டார். பிள்ளை ஆரம்பத்தில் ஃபிரெஞ்சு இலக்கியத்தில் ஆர்வங்கொண்டிருந்தார். பிறகு அந்த ஆர்வம் ஐரோப்பிய இலக்கியம் மீது திரும்பியது. குறிப்பாக ஐரோப்பிய நாடக ஆசிரியர்களையும் அவர்களது நூல்களையும் மேற்கத்திய அறிஞர்களின் தத்துவ நூல்களையும் அவர் விரும்பிப் படித்தார். கல்லூரி நாட்களில் அவர் ஆங்கில இலக்கியத்தில் மிக்க ஆர்வங்கொண்டிருந்தார்.

நாளடைவில் புதினங்களில் அவருக்கிருந்த ஆர்வம் குறையவே அவர் புத்தகங்களைத் தேர்ந்தெடுத்துப் படிக்கலானார். ரஷ்ய புதினப்படைப்பாளர்களில், டால்ஸ்டாய், டோஸ்டோவஸ்கி நூல்களையும், ஃபிரெஞ்சு இலக்கியத்தில் ஸ்டான்தால், மாப்சான் ஆகியோரது நூல்களையும் அவர் தேர்ந்தெடுத்து படித்தார். பிள்ளையவர்கள் இந்த நூலாசிரியர்கள் பாத்திரப் படைப்புகளில் கையாண்ட உளவியல் அணுகுமுறையால் மிகவும் கவரப்பட்டார். மாபெரும் ஐரோப்பிய இலக்கிய கர்த்தாக்களின் சாதனைகளைக் காணும்போது மலையாளப் புதினங்கள் மிகவும் தரங்குறைந்தவைகளாகவே அவருக்குக் காணப்பட்டன. இந்த நோக்கில் பார்த்தால் ஐரோப்பிய மொழி நூல்களை மலையாளத்தில் மொழிபெயர்க்க வேண்டியிருந்தது. அப்போதுதான் மலையாள எழுத்தாளர்களுக்கும், நூல்களைப் படிப்போர்க்கும் ஐரோப்பிய மொழிகளில் உள்ள இலக்கிய கர்த்தாக்களின் ஆழ்ந்த அறிவு புலப்படும். நன்கு வளர்ந்துள்ள மேலைநாட்டு மொழிகளில், வேற்று மொழிகளிலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட செய்திகள் வேண்டிய அளவு இருப்பதைப் பாலகிருஷ்ண பிள்ளை அறிவார். மொழிபெயர்ப்பால் அம்மொழிகள் பல வகைகளில் வளர்ச்சியடைந்துள்ளன. எனவே அதே முறையைப் பின்பற்றி உலக இலக்கிய மொழி பெயர்ப்புகளை வரவேற்று, மலையாள இலக்கிய வளர்ச்சியை உறுதிப்படுத்தலாம் என்று அவர் நம்பினார்.

# 2. ஆசிரியரும் வழக்கறிஞரும்

கேரளத்து மக்களால், பாலகிருஷ்ண பிள்ளை, ஒரு பத்திரிக்கை ஆசிரியராகவும், விமர்சகராகவும், படிப்பாளியாகவும் எண்ணப்படுகிறார். அவர் தனது தொழிலைத் தானே தேர்ந்தெடுத்துக் கொண்டார். அவர் இது குறித்து யாரையும் கலந்தாலோசிக்க வில்லை. 1922–ல் "சமதர்சி" இதழின் ஆசிரியராகப் பணியாற்றிய போதுதான் தனது தொழில் பற்றிய முடிவைத் தீர்மானித்தார். அதுவரையிலும் அவர் பலதரப்பட்ட வேலைகளை ஏற்றுக் கொண்டார். அந்தத் தொழில்கள் அவரது குடும்பச் சூழ்நிலை காரணமாகவும், மக்களுடன் தொடர்பு கொள்ளும் போது ஏற்படும் அனுபவம் காரணமாகவும், அமைந்தது எனலாம். அவரது வாழ்க்கை வரலாற்றை எழுதிய கே.வி. சங்கர மேனன் அவர்களிடம், பிள்ளையவர்கள் கூறியபடி, "சமதர்சி" இதழின் ஆசிரியராகப் பொறுப்பேற்ற பின் அவருக்கு முழுமையான தோர் மனமாற்றம் ஏற்பட்டது. விவகாரங்கள் பெரிய அளவில் இருந்தாலும் அல்லது சிறிய அளவில் இருந்தாலும், சொந்தம் அல்லது சமூகம் பற்றியவைகளாக இருந்தாலும் அவர் மனச்சாட்சி என்ன சொல்கிறதோ அதன்படி அவர் நடந்தார். எந்த வேலையை எடுத்துக் கொண்டாலும், அதை, அவரால் முடிந்தவரையில் முழுமையாகச் செய்து முடித்தார். மற்றவர்களைத் திருப்திப் படுத்த, தன் மனச்சாட்சிக்கு எதிராக நடக்க அவர் மிகவும் சங்கடப்பட்டார்.

"என் இயற்கையான மனப்போக்கு" என்ற தலைப்பில் சுமார் 1500 வார்த்தைகள் கொண்ட ஒரு கட்டுரையை பாலகிருஷ்ண பிள்ளை எழுதினார். அவரது அபூர்வமான அறிவின் முத்திரையாக அக்கட்டுரை அவரது வாழ்க்கை வரலாற்றை எழுதும் ஆசிரியர்களுக்கு அமைந்தது. "சமதர்சி" என்ற இதழுக்கு ஆசிரியராகப் பொறுப்பேற்கும் போது அவருக்கு 33 வயது. அவர் பி.ஏ., தேர்வில் வெற்றி பெறும் போது அவரது வயது 19 என்று முன்னமே கூறியுள்ளோம். பின்பு அவரது நிதிநிலை காரணமாக அவர் திருவனந்தபுரம் பெண்கள் கல்லூரியில் ஆசிரியராகப் பொறுப்பேற்றார். அதனால் அவரது முதுநிலைப் பட்டப் படிப்பும் தடைப்பட்டது. அவர் எட்டாண்டுகள் கல்லூரி ஆசிரியராகவும், ஐந்தாண்டுகள் வழக்கறிஞராகவும் பணியாற்றினார் (1917–22). இந்தப் பதிமூன்றாண்டு காலத்தை அவரது வாழ்க்கையைப் பரிசோதனை செய்து

கொண்ட காலம் எனலாம். பாலகிருஷ்ண பிள்ளையின் இந்த மனோபாவத்தின் மதிப்பீடு அவரைப் பற்றிய ஆவணங்களில் குறிக்கப்பட்டுள்ளது, ஒரு சிறு சுருக்கம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது;

"நான் 'சமதர்சி'யில் நுழைவதற்கு முன், கனவுகாணுதல், கற்பனையில் ஆழ்ந்து போதல், சுதந்திர மனப்பான்மை, படிப்பதில் விருப்பம், தனிமையில் மோகம் – ஆகியவை எனது இயல்பாக இருந்தன. நான் 'சமதர்சி' யின் ஆசிரியரானவுடன் நான் இந்தக் குணங்களுடன் ஒரு சிந்தனையாளனாகவும் ஆகிவிட்டேன். மேலும் கொள்கையளவில் புரட்சியாளனாகவும், பொதுவில் மனிதத் தன்மையை நேசிக்கும் மனிதனாகவும் மாறிவிட்டேன்"..

அந்த அப்பிராயத்தின் கடைசிப் பாகமான அவரது மனித நேய விருப்பத்தின் சிறப்புத் தன்மையை அவர் மேலும் விளக்குகிறார். அதனுடைய பக்கவிளைவுகளையும் அவர் விளக்கமாகக் கூறுகிறார். "ஒவ்வொருவருக்கும் விசுவாசமாக இருப்பவன் யாருக்கும் விசுவாசமாக இருக்கமாட்டான்" என்ற டிலாவின் கூற்றை அவர் மேற்கோளாகக் காட்டுவார். இந்த மாதிரியான கொள்கை அவரை யாரிடத்திலும் அன்பில்லா மனிதராக எடுத்துக் காட்டியது என்பதை அவர் உணர்ந்தார். சுயசோதனை செய்து கொள்ளும் மனிதராகப் பிள்ளை காணப்பட்டார். ஆனால் பெண்கள் கல்லூரியில் வேலை செய்த போது அவர் இப்படிப்பட்ட சுயசோதனையாளராகத் தென்படவில்லை. மாறாக வளமும் வனப்பும் மிக்க கற்பனை உள்ளம் நிரம்பிய காளையாகக் காணப்பட்டார்.

அவரது ஆங்கிலப் பேச்சு சிறப்பாக இருக்கும். அதேபோல் அவர் வரலாற்றுப் பேராசிரியராக இருந்தபோது அவர் தனது பாடங்களை எளிமையாகவும் இனிமையாகவும் எடுத்துக் கூறுவார். எனவே பெண்கள் மத்தியில் அவர் ஒரு கவர்ச்சிப் பொருளாக இருந்தார். ஆனால் தனது கௌரவத்தைப் போற்றிக் காத்துக் கொண்டார். நல்ல பெயரும் எடுத்தார். அவரது மாணவிகள் யார் மீதாவது அவர் காதல் கொண்டதாகக் கதை கூட இல்லை. அவர் எப்போதும் படிப்பில் மூழ்கிப் போயிருந்ததால், பெண்களின் பெற்றோர்கள் எடுத்துக் கொண்டுவரும் திருமணப் பேச்சுகளை அவர் வரவேற்கவில்லை. அவர் ஆசிரியர் தொழிலை விட்டுவிட்டுப் பெண்கள் கல்லூரிக்கு விடைகொடுத்தபோது அவரது மாணவிகள் ஒரு திறமையான விரிவுரையாளரை இழந்துவிட்டதாக வருந்தினார்கள். அவரது வகுப்பில் பல கெட்டிக்கார மாணவிகள் இருந்தனர். பிற்காலத்தில் அவர்கள் பொதுவாழ்க்கையில், மிகவும் பிரபலமாகி விளங்கினர். கல்லூரியில் நடந்த விடைபெறு விழாவில், அவருக்கு அவர் பெயர் பொறித்த விலையுயர்ந்த பேனாவொன்றையும் தங்கக் கடிகாரப் பட்டையொன்றையும் அவரது மாணவிகள் பரிசாக அளித்தனர்.

முன்பு கூறியது போன்று, பாலகிருஷ்ண பிள்ளை 1913–ல் பி.எல்., பட்டம் பெற்ற போதிலும், அவர் தன் குடும்பச் செலவுகளுக்கும், தம்பியின் மருத்துவப் படிப்புக்கான செலவுகளுக்கும் வேண்டிய நிரந்தர வருமானம் தந்து வந்த ஆசிரியத் தொழிலை விட்டு விட வில்லை. ஆனால் 1917–ம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் வழக்கறிஞர் தொழிலை ஏற்றுக் கொள்ள அவர் தீர்மானித்தார். இந்த முயற்சியில் இருந்த ஆபத்து அவருக்குத் தெரியாமலில்லை. என்றாலும் அவர் அந்த முயற்சியில் ஈடுபடத் தீர்மானித்தார். அது அவரது வழக்கமான வாழ்க்கை முறையை மாற்றுவதாக இருந்தது. அவர் புகழ்பெற்ற பி.கே. கேசவப்பிள்ளை என்பவரிடம் இளநிலை வழக்கறிஞராகச் சேர்ந்து, கீழ் நீதிமன்றங்களிலும், மாவட்ட நீதி மன்றங்களிலும் பணிபுரிந்தார். கேசவப்பிள்ளை புகழ் பெற்ற வழக்கறிஞர் மட்டுமல்ல, அவர் சமூக அரசியல் வாழ்க்கையிலும் ஒரு பெரும் புள்ளி. உயர்நீதி மன்றம், மாவட்ட நீதி மன்றம் ஆகியவற்றில் முக்கியமான சிவில் வழக்குகளுக்கு மட்டும் அவர் வாதாடுவார். மற்ற வழக்குகளை அவரது ஜூனியர்களிடம் விட்டுவிடுவார்.

## வழக்கறிஞர் தொழில்:

பாலகிருஷ்ண பிள்ளை மாவட்ட நீதிமன்றங்கள் முன்சீப் கோர்ட்டுகள் ஆகியவற்றில் வழக்குகளை நடத்தினார், என்றாலும் அவருக்கு அதிக நேரம் ஓய்வாகக் கிடைத்தது. வருமானமும் குறைவாகவே இருந்தது. அவர் ஒரு புத்தகப்புழுவாக இருந்த போதிலும், சட்டபுத்தகங்களையும், சட்ட அறிக்கைகளையும் படிப்பதில் அவருக்கு விருப்பமில்லை. இந்தத் தொழிலில் வெற்றி பெற வேண்டுமென்றால் சாட்சிகளை நன்றாக மனச்சாட்சியில்லாமல் பொய் சொல்லப் பழக்கத் தெரிந்திருக்க வேண்டும். இதை அவர் நன்கு அறிவார். ஒருசமயம் கொல்லம் நீதிமன்றத்தில் ஒரு கொலை வழக்கில் தனது மூத்த வழக்கறிஞர்களுக்கு அவர் உதவ வேண்டியிருந்தது. அப்போது அங்கு நிலவிய நீதியற்றத் தன்மையைக் கண்ட அவர் பெரும் அதிர்ச்சி அடைந்தார். இதுவே அவர் வாழ்க்கையில் அவர் அடைந்த பெரும் அதிர்ச்சி. நேர்மையாளரான அவர் இந்த அனுபவத்தால் விரக்தியடைந்தார். தனது மூத்த வழக்கறிஞருக்கு ஒரு பெரிய கும்பிடு போட்டுவிட்டுத் திருவனந்தபுரம் வந்து சேர்ந்தார். இதுதான் பாலகிருஷ்ண பிள்ளை வாதாடிய மிகவும் முக்கியமான வழக்கு. அதற்குப் பிறகு அவர் கிரிமினல் வழக்குகளை எடுத்துக் கொள்ளவில்லை.

நாளடைவில் பிள்ளையவர்கள் வழக்கறிஞர் தொழிலில் வெற்றிபெற மிக மோசமான வழிமுறைகளைப் பயன்படுத்த வேண்டியிருப்பதை அறிந்து கொண்டார். அதனால் அவருக்கு வெறுப்பு ஏற்பட்டது. அநேக வழக்கறிஞர்கள் நீதிபதிகளின் தயவுக்காக அவர்களைச் சுற்றிவருவது அவருக்குப் பிடிக்கவில்லை. அவர் தந்திரசாலியாகவோ, அல்லது

வேலையில் களைத்துப் போனவராகவோ இல்லை. அவர் கண்ணியமாகவும், நிதானத்துடன் தயக்கமாகவும் பேசுவார். எனவே அவர் வழக்கறிஞராக வாழ்க்கையில் வெற்றிபெறவில்லை. ஆகவே அவரது வருமானம் குறைந்தது. அந்த நேரத்தில் மெசபடோமியாவிலிருந்து அவரது தம்பி ஏ.பி. பிள்ளை அனுப்பிய பணம் அவருக்கு மிகவும் உதவியாக இருந்தது. அவர் தினமும் நீதிமன்றத்துக்குப் போவதில்லை. ஆனால் வழக்காடவோ, அல்லது எதிர் வழக்காடவோ வேண்டியிருந்தால் மட்டும் அவர் நீதிமன்றத்துக்குப் போவார். எனவே பிள்ளைக்கு அதிகப்படியான ஓய்வு நேரம் கிடைத்தது. அந்நேரத்தில் அவர் தாம் விரும்பிய புத்தகங்களைப் படிப்பதில் முனைந்தார். இந்தச் சமயத்தில் தான் அவருக்குச் சோதிடம் பார்த்தல், கைரேகை பார்த்தல், தொல்பொருள் ஆராய்ச்சி செய்தல் ஆகியவற்றில் விருப்பம் ஏற்பட்டது.

அவருக்குச் சோதிடக்கலையில் ஆர்வம் ஏற்பட்டதற்கு மூலகாரணமாகிய கதையொன்றுள்ளது. அவருடைய தம்பியின் ஐரோப்பிய நண்பர் 'லியூ ஸ்மைல்ஸ்' என்பவர் ஒருமுறை அவர் தம்பியுடன் திருவனந்தபுரம் வந்தார். அவர் ஓர் இராணுவ அதிகாரி. அவர் தமது சாதகத்தை உள்ளூர் சோதிடர் ஒருவர் மூலம் கணிக்கச் செய்தார். பாலகிருஷ்ண பிள்ளை அதிலிருந்த விவரங்கள் ஒவ்வொன்றையும் அந்த அதிகாரிக்கு ஆங்கிலத்தில் விளங்க வைக்க உதவி புரிந்தார். அறிவுப் பசி கொண்ட பிள்ளைக்குச் சாதகத்தில் ஆழ்ந்த பற்று ஏற்பட இது போதுமே! அவர் அப்பொழுது பழங்கால எழுதுகலையைக் கற்றிருந்தார். அந்த ஆர்வம் விரிவடைந்தது. அந்த அறிவுடன் தோழமை கொண்ட கல்வெட்டு சாசனங்களைப் படித்தறியும் கலையிலும் அவர் திறமை பெற்றிருந்தார். ஃபிராய்டின் உளப் பகுப்பாய்வு முறை பற்றிய விஷயங்களையும், அவரைப் போன்றோரது கருத்துக்களையும் ஆராய்வதில் இறங்கினார்!

பாலகிருஷ்ண பிள்ளை ஆரம்பத்தில் சிறு அளவில் எழுதத் தொடங்கினார். திருவனந்தபுரம் மனாகாட், பதிப்பாளர் ஒருவருக்காக சில சிறு வாழ்க்கைச் சரித்திர நூல்களை எழுதித் தந்தார். அதன்படி, "லார்ட் கிட்சனர்", யுவான் சுவாங், மற்றும் நான்கு ஆப்பிரிக்கப் பயணிகள் ஆகியோர் பற்றிய நூல்கள் வெளிவந்தன. "நினேவா", "பாபிலோன்" பற்றிய சரித்திர நூல்களும் வெளிவந்தன. "பால்சாக்", என்ற ஃபிரெஞ்சு நாவலாசிரியரைப் பிள்ளைக்கு மிகவும் பிடிக்கும். "யூஜின் கிரண்டே" (1823) என்ற அவரது புதினத்தைத் தழுவி, பிள்ளையவர்கள் "சான்டில்யா" என்ற சமூகப் புதினத்தை எழுதினார். தாமஸ்பால் என்ற புகழ்பெற்ற பதிப்பாளர் அதனை வெளியிட்டார். பி.வி. டெப்போ என்ற மற்றொரு வெளியீட்டு நிறுவனமும் பிள்ளையைச் சில புத்தகங்களை எழுதித் தருமாறு வேண்டிய ஒப்பந்தம் செய்தது.

உயர்நிலைப் பள்ளி மாணவராக இருந்தபோது பிரெஞ்சு மொழியைக் கற்ற பிள்ளை, தற்போது தமிழையும் கற்க ஆரம்பித்தார். சிலப்பதிகாரம் என்ற தமிழ் இலக்கியநூல் அவரை மிகவும் கவர்ந்தது. இந்த நூலின் சில பகுதிகளையும், புறநானூறு என்ற நூலின் பாடல்களில் சிலவற்றையும் அவர் மலையாளத்தில் மொழி பெயர்த்தார். வழக்கறிஞராகப் பணியாற்ற முடியாமல் போனதால், பிள்ளையவர்கள் ஒரு நல்ல இலக்கிய கர்த்தாவாக மலர்ந்தார்.

# 3. பத்திரிக்கை ஆசிரியரும் அரசியல் சிந்தனையாளரும்

பாலகிருஷ்ண பிள்ளை இயற்கையில் வழக்கறிஞர் வேலைக்குத் தகுதி யற்றவராக இருந்தார். அவரது சுபாவம் அப்படி. அவர் ஒரு கல்வியாளர், சிந்தனையாளர், சமூகப் புரட்சியாளர் எனலாம். அவரது தொழில் இலக்கியம் பத்திரிக்கை ஆகியவற்றைச் சார்ந்தது என்பதை அவர் உணரச் சிறிது காலமாயிற்று. இந்த இரண்டு தொழில்களிலும் அவர் முன்னேற்றம் மற்றும் புரட்சிக் கருத்துக்களை நுழைத்தார். உண்மையில் இந்த இரண்டு துறைகளில், இளைஞர் சமுதாயத்தின் மதிப்பு மிக்கத் தலைவராக அவர் இருந்த போது, மனச்சாட்சியில்லாத அதிகாரிகளுக்கும், கொள்கையில்லாத அரசியல்வாதிகளுக்கும் அவர் ஓர் அச்சத்தை விளைவிக்கும் நபராக இருந்தார்.

பத்திரிக்கை துறையும், இலக்கியமும் ஒன்றையொன்று சார்ந்திருப்பவை அல்ல. மாறாக அவைகள் ஒன்றால் மற்றொன்றை முழுமையாக்கும் இயல்புள்ளவை. நம்முடைய எழுத்தாளர்களில் சிலர் புகழ் பெற்ற இதழ்களின் ஆசிரியர்களாகத் திகழ்ந்திருக்கின்றனர். ஒரு மொழியின் வளர்ச்சி, இந்த இரண்டு துறைகளில் தர வளர்ச்சியைப் பொருத்துள்ளது. பத்திரிக்கை துறையை விட இலக்கியத்துறை நீடித்த தாக்கத்தை ஏற்படுத்துமென்று நாம் சொல்லலாம். ஆனால் புதுமையான கலாச்சாரப் பரிமாற்றங்களாலும், கருத்து ஊடுருவல்களாலும், இந்த நவீன உலகத்தில் பத்திரிக்கையாளர்கள் பாதுகாப்பான நிலையில் உள்ளனர். பத்திரிக்கையாளர்களில், செய்தித்தாள் துறையில் உள்ளவர்கள்தான் முன்வரிசையில் உள்ளனர். நல்லது என்றாலும், கெட்டது என்றாலும் அவர்களுக்குத்தான் முதல் அடி! வார, மாத இதழ்களை நடத்தும் பத்திரிக்கையாளர்கள் அம்மாதிரியில்லை. இவர்களுக்குப் பிறகு தான் அறிமுகமான எழுத்தாளர்கள், வருகின்றனர். அதன் பின் விமர்சகர்களும், கற்றறிந்த வல்லுனர்களும், இலக்கணப் புலவர்களும் வருகின்றனர். இலக்கணப் புலவர் மரபு நிலைகளையும் இலக்கண விதிகளையும் கட்டிக் காப்பாற்ற இருந்தாலும் அவர் எல்லாரையும் விட கடைசி வரிசையில் நிற்கின்றார். மற்றவர்களுக்குப் பின் வருகிறார். இலக்கண விதிகளைப் பொறுத்த வரையில் மற்றவர்களுக்குத் தான்

ஒரு வழிகாட்டி என்ற எண்ணத்துடன், இலக்கணப் பிழைகளால் ஏற்படும் தர்ம சங்கடமான நிலையிலிருந்து மற்றவர்களைக் காப்பதாக நினைத்துக் கொண்டாலும் அவர் மற்றவர்களுக்குப் பின்னால்தான் வருகிறார். ஆனால் இலக்கணப் புலவர்களின் முயற்சியில்லாவிட்டாலும் மொழி வளருகின்றது. அதே போன்று பழைய முறைகளைப் பின்பற்றும் விமர்சகர்கள் இல்லாவிட்டாலும் இலக்கியம் வளரத்தான் செய்கிறது.

பத்திரிக்கையாளராகவும், பத்திரிக்கை ஆசிரியராகவும் இருப்பது பற்றி பாலகிருஷ்ண பிள்ளை தனிப்பட்ட கொள்கையைக் கொண்டிருந்தார். அதே போன்று மலையாள இலக்கியம் வளர்ச்சி பெற்று மலர வேண்டும், என்பது பற்றியும் அவர் தனிப்பட்ட கருத்தைக் கொண்டிருந்தார். இந்த அத்தியாயத்தில் மலையாளப் பத்திரிக்கை துறைக்கு அவர் ஆற்றிய பெரும் பணியைக் காணலாம். அவர் மலையாளத்தில் மூன்று இதழ்களுக்கு ஆசிரியராக இருந்தார். மற்ற இதழ்களுக்கு மலையாளம், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் தனது படைப்புக்களைக் கொடுத்து வந்தார். பத்திரிக்கை ஆசிரியர் தொழிலில் மிக்க ஈடுபாடு கொண்ட அவர் தம்மை ஒரு பத்திரிக்கை ஆசிரியர் என்று சொல்லிக் கொள்வதில் பெருமிதங்கொண்டார். பத்திரிக்கை ஆசிரியராகப் பணிபுரிவதை நிறுத்தி விட்ட போதிலும் தன்னைக் "கேசரியின் ஆசிரியர்" என்று அழைப்பதை அவர் பெரிதும் விரும்பினார். "கேசரி", அவர் ஆசிரியராகப் பணியாற்றிய கடைசி இதழ். அதன் உரிமையாளரும் அவரே!

மலபாரில் அமைந்திருந்த "பாசெல் மிஷன்" தனது மதத்தைப் பரப்புவதற்கு வேண்டிய பணத்துக்காக "ராஜ்ய சமாசாரம்" என்ற மாத இதழை 1847–ம் ஆண்டு ஜூன் மாதத்தில் துவக்கியது. அப்போதுதான் மலையாளப் பத்திரிக்கைத் துறையில் பரிசோதனைகள் ஆரம்பித்தன எனலாம். இதனைத் தொடர்ந்து 1847–ம் ஆண்டு அக்டோபரில் "பச்சி மோதயம்" என்ற இதழ் அதே "மிஷனால்" ஆரம்பிக்கப்பட்டது. அந்த இதழ் வரலாறு, நிலநூல், சோதிடம் முதலியன பற்றிய செய்திக் கட்டுரைகளை வெளியிட்டது. அந்த நூற்றாண்டின் பின் அரைப்பகுதியில் சுமார் பதினைந்து இதழ்கள் வெளிவந்தன.

அவைகள் கேரள மக்களுக்குச் சொந்தமானவை. அவைகள் பெரும்பாலும் உலகச் செய்திகளுக்கும், மதசார்பற்ற செய்திகளுக்கும் முக்கியத்துவம் கொடுத்தன. அவைகளில் "தீபிகா" என்ற இதழும், "மலையாள மனோரமா" என்ற இதழும் இன்றும் வெளிவருகின்றன. மற்றவை மறைந்து போயின.

"மலையாள மனோரமா" நிறுவனரும் ஆசிரியருமான கண்டத்தில் வர்கிஸ் மாப்பிள்ளா (1858–1904) "கேரள பத்திரிக்கா"வின் ஆசிரியரான சென்குளத்து வலிய குஞ்சுராம மேனன், "மலையாளி" யின் துறையில்

முன்னோடிகளாவர். அவர்கள் அக்காலத்தில் வளர்ந்து கொண்டிருந்த மேற்கத்திய பத்திரிக்கைத் துறையின் தரத்தை வழிகாட்டியாகக் கொண்டு செயல்பட்டனர். இம்மாதிரியான இதழ்களின் நோக்கம், வாசகர்களுக்கு உலகத்தில் என்ன நடக்கிறது என்பதை அறிவிப்பதேயாகும்.

## சுதந்திரமான பத்திரிக்கைத் துறை:

மக்களுக்குச் செய்திகளைக் கொடுப்பதோடல்லாமல், பிரமுகர்களையும், நிறுவனங்களையும் விமர்சனம் செய்வதும் அவர்களைப் பற்றிய செய்திகளை வெளிப்படுத்துவதும் பத்திரிக்கையின் வேலையாகும். இக்கருத்து மலையாளப் பத்திரிக்கையின் வளர்ச்சியில் இரண்டாவது கட்டத்தில் உணரப்பட்டது. இந்தச் சிலுவைப் போரில் முக்கியமானவர், சுவதேசாபிமானி கே. ராமகிருஷ்ண பிள்ளை (1878–1916). அவர் அப்போதிருந்த திருவாங்கூர் அரசாங்கத்தில் நடந்த இழி செயல்களை எழுதி வெளிப்படுத்தியதற்காக நாடுகடத்தப்பட்டவர். அவர் எழுதிய அநேக புத்தகங்களில் நமது கவனத்தைக் கவர்வது "விரித்தாந்த பத்திர பிரவர்த்தனம்" என்பதாகும். இது பத்திரிக்கை துறையின் நோக்கங்களையும், நடைமுறைகளையும் அறிவிக்கின்றது.

இதுதான் இந்திய மொழிகளில் பத்திரிக்கை துறைப் பற்றி வெளிவந்த நூல்களில் முதன்மையானதாகக் கருதப்படுகின்றது.

தேசீய இயக்கத்தினால் உண்டான புயலும் கஷ்டங்களும் இந்திய மொழிப் பத்திரிக்கைகளில் அதிக அளவில் வெளியிடப்பட்டன. கேரளா மட்டும் வித்தியாசமான நிலையில் இருந்தது. ஏனென்றால் திருவாங்கூரும், கொச்சியும் தனி ராஜ்யங்களாக இருந்தன. மலபார் பகுதி மட்டும் ஆங்கிலேயரால் ஆளப்பட்டது. "காமுதி" 1911–ம் ஆண்டும் "சமதர்சி" 1918–ம் ஆண்டும் திருவாங்கூரில் ஆரம்பிக்கப்பட்டன. தேசவிடுதலைப் போராட்டத்தில் "மாத்ருபூமி" 1928–ல் மலபாரில் (கள்ளிக்கோட்டை) ஆரம்பிக்கப்பட்டது. அப்பத்திரிக்கை, அரசாங்கக் கொள்கைகளை மிகவும் வெளிப்படையாகவும் தெளிவாகவும் விமர்சனம் செய்ததால், அதனுடைய புகழ்பெற்ற ஆசிரியர் கே.பி. கேசவ மேனன் மிகவும் துன்பத்திற்கும் வறுமைக்கும் ஆளானார். அதன் பிறகு பொறுப்புள்ள அரசாங்கம் அமைய வேண்டித் திருவாங்கூரிலும், கொச்சியிலும் ஆர்பாட்டங்கள் நடந்தன. சர்.சி. பி. ராமசாமி ஐயர் திவானாக இருந்த போது திருவாங்கூர் அரசால், கோட்டயத்திலிருந்த "மலையாள மனோரமா" அச்சகம் பூட்டப்பட்டது. 1939–ல் அதனுடைய அனுபவ மிக்க ஆசிரியர் கே.சி. மம்மன் மாப்பிள்ளா சிறை தண்டனை பெற்றார். அந்த நாட்களில் பத்திரிக்கைகளும், மேடைகளும் வெடிமருந்து போல் செயல்பட்டன. அநேக அரசியல் தலைவர்கள் தங்களைக் கைது செய்யும்படி வேண்டினர். அவர்களில் சில பத்திரிக்கை ஆசிரியர்களும் அடங்குவர். பாலகிருஷ்ண பிள்ளை

போரிடும் குணத்தைப் பெற்ற உணர்ச்சிமிக்க பத்திரிக்கை ஆசிரியர். அவர் அநேக விதங்களில் துன்பங்களை அனுபவிக்க நேர்ந்தது. அவரது கற்றறிந்த பத்திரிக்கைத் தொழில் பற்றியும், பேனாவின் எழுத்துக் கூர்மையின் தன்மையையும் சுறுக்கமாகக் காண்போம்.

அவரது முக்கிய கொள்கைகள் யாவை?

சுதந்திரச் சிந்தனையாளரும், பத்திரிக்கைத் துறையில் பழக்கப்பட்டவருமான பாலகிருஷ்ண பிள்ளை மேற்கத்திய நாடுகளில் வளர்ச்சியடைந்தது போன்று இங்கும் முழு பத்திரிக்கைச் சுதந்திரத்தை விரும்பினார். மேற்கத்திய இலக்கியத்தினால் அவர் மிகவும் ஆட்கொள்ளப் பட்டிருந்தார். பத்திரிக்கை சுதந்திரந்தான் மக்களுக்கு வெளிப்படையான உரிமைகளை அளிக்க முடியும் என்பதை உணர்ந்திருந்தார். பத்திரிக்கைத் துறை தனிப்பட்டவருக்கு உரிமையான தொழிலாக இருந்தாலும் அது ஒரு பொது சேவையாக இருக்க வேண்டும் என்பது அவரது எண்ணம்.

"எல்லா விதமான சுதந்திரங்களுக்கும்
மேலாக மனசாட்சியின்படி அறிந்து
கொள்ளவும், பேசவும், தடையின்றி
வாக்குவாதஞ் செய்யவும், சுதந்திரம்
கொடுங்கள்"

என்று ஜான் மில்டன் கூறிய கருத்தைப் பிள்ளை அப்படியே ஏற்றுக் கொண்டார். பத்திரிக்கைச் சுதந்திரம், குடியாட்சியை நிலை நிறுத்த அவசியம் தேவை. பாலகிருஷ்ண பிள்ளை குடியாட்சி அரசாங்கத்தில் உறுதியான நம்பிக்கை கொண்டவர். அவர் ஆங்கிலேயர் மட்டும் இந்தியாவை விட்டுப் போக விரும்பவில்லை. இந்திய சமஸ்தான அரசர்களும் தங்கள் அதிகாரங்களை விட்டுவிட வேண்டும் என்று விரும்பினார். அவரைப் பொறுத்த வரையில் இந்தியச் சமஸ்தானங்கள் பிரபுத்துவ முறையின் நினைவுச் சின்னங்களாகும். திருவாங்கூர் போன்ற சமஸ்தானங்களில் நல்ல அரசு அமைய வேண்டிப் போராட்டங்கள் நடத்தியவர்கள் கூட, மகாராஜாக்களின் அதிகாரத்தை எதிர்த்து நிற்கவில்லை. ஆனால் பிள்ளையவர்கள் அரசாங்கத்தை எதிர்த்தபோது அவர் வழவழவென்று பேசவில்லை. அரசர்கள் தங்கள் மான்யங்களை விட்டுக் கொடுத்து விட்டு சாதாரண குடிமக்கள் போன்று வாழ வேண்டும் என்று விரும்பினார். உயர்ந்தவர், தாழ்ந்தவர்களிடையே இருந்த வேறுபாடு நீங்க வேண்டும். எல்லா இந்துக்களும் சாதி, மத வேறுபாடின்றி கோயிலுக்குள் நுழையும் சுதந்திரம் பெற வேண்டும். நாட்களைக் கடத்தாமல் வயது வந்தோருக்கு வாக்குரிமை அளிக்கப்பட வேண்டும். பத்திரிக்கைத்துறை இம்மாதிரியான உரிமைகளுக்கு உத்திரவாதம் பெற ஒரு கருவியாக இருக்க வேண்டும். இம்மாதிரியான கொள்கைகளைத்

தம்முன்னே வைத்துக் கொண்டு பிள்ளையவர்கள், தமது பத்திரிக்கைத் தொழிலைத் தொடங்கினார்.

**சமதர்சி**

'சமதர்சி' என்றால் எல்லாவற்றையும் சமத்துவக் கொள்கையுடன் பார்க்கும் ஓர் அமைப்பு என்று பொருள். இந்த மலையாள மொழிப் பத்திரிக்கை 1918–ல் திருவனந்தபுரத்தில் ஆரம்பிக்கப்பட்டது. குலக்குன்னத் ராமன் மேனன் என்பவர் இதன் நிறுவனர். குன்னத்து ஜனார்தன மேனன் என்பவர் இப்பத்திரிக்கையின் முதல் ஆசிரியர். 1922–ல் அவர் பத்திரிக்கை உரிமையாளரிடம் கருத்து வேற்றுமை கொண்டதால், ஆசிரியர் பதவியிலிருந்துத் தன்னை விடுவித்துக் கொண்டார். அந்தச் சமயத்தில் பாலகிருஷ்ணப் பிள்ளை வழக்கறிஞர் தொழிலை விட்டுவிட்டுத் தனது காலத்தைப் படிப்பதிலும், எழுதுவதிலும் செலவிட்டுக் கொண்டிருந்தார். அப்போது சமதர்சி ஆசிரியர் பொறுப்பை ஏற்க அவருக்கு அழைப்பு வந்தது. அவரது நண்பரொருவர், ராமன் மேனன் அவர்களின் அழைப்பை ஏற்றுக் கொள்ள வேண்டினார். நீண்ட யோசனைக்குப் பிறகு பிள்ளையவர்கள், தலையங்கம் எழுதும் உரிமையிலும், மற்ற பொறுப்புகளிலும் குறுக்கீடு ஏதும் இல்லாமல் இருந்தால் அழைப்பை ஏற்றுக் கொள்வதாகக் கூறினார். இந்த நிபந்தனைகளுக்கு ஒப்புதல் கிடைத்ததும் பிள்ளையவர்கள் 1922–ம் ஆண்டு மே மாதத்தில் 'சமதர்சி' யின் ஆசிரியராகப் பொறுப்பேற்றார்.

அவருடைய சொந்தக் கொள்கைகளும், புத்தக அறிவும் ஒரு பக்கம் இருந்த போதிலும், அவருக்குப் பத்திரிக்கை ஆசிரியராகப் பணிபுரிவது ஒரு புது அனுபவமாக இருந்தது. அவர் பொறுப்பேற்ற பிறகு, வாரம் ஒன்றாக வெளிவந்த அந்த இதழ் வாரம் மூன்றாக, செவ்வாய், வியாழன், சனிக்கிழமைகளில் வெளிவரத் தொடங்கியது. இந்த உழைப்புக்கு அவருக்கு மாதம் ரூ. 75/– சம்பளமாகத் தரப்பட்டது. ஆனால் அவர் அதைப்பற்றிக் கவலைப்படவில்லை. சில மாதங்களில் அத்தொகை ரூ.85/– ஆக உயர்ந்தது. அந்தக் காலத்தில் வழக்கறிஞர் தொழிலை விட்டுவிட்டுப் பத்திரிக்கை ஆசிரியராக ஆவது நியாயமற்றதாகக் கருதப்பட்டது. எனவே அவரது நண்பர்கள், சிலர், இந்தப் புதுமுயற்சியைக் கைவிட வேண்டினர். ஆனால் பாலகிருஷ்ண பிள்ளை பத்திரிக்கைத் தொழிலை சமூக சேவைக்கும், முழு உற்சாகத்துடன் வேலை செய்வதற்கும் வாய்ப்பு இருப்பதாக எண்ணினார். பொது ஜனக்கருத்தை உருவாக்குவதிலும், அதன் மூலம் நாட்டுக்குத் தொண்டு செய்வதையும் அவர் தமது நோக்கமாகக் கொண்டார். இரண்டாவதாக, சாதாரண மக்களின் உண்மையான உணர்ச்சிகளையும், அவர்களது தேவைகளையும் பத்திரிக்கையில் வெளியிடுவதின் மூலம், அவைகளை அரசாங்கத்துக்கு

அறிவிக்கலாம் என்றும் அவர் நம்பினார். அதனால் அரசாங்கம் நியாயமாக நடக்கும் என்றும் அவர் எண்ணினார். இந்த இரண்டு கொள்கைகளின் அடிப்படையில் பாலகிருஷ்ண பிள்ளை ஒரு முன் மாதிரியான பத்திரிக்கை ஆசிரியராக விளங்கினார்.

ஆரம்பத்தில் அவர் அரசாங்கத்து திவான், உள்ளிட்ட அதிகாரிகளின் நேர்மையற்ற இழிவானப் பழக்கங்களைப் பத்திரிக்கையில் வெளிப்படுத்தினார். நாளடைவில் தேசிய உணவர்வைப் பரப்ப, அவர் மகாராஜாக்களின் சர்வாதிகாரத்தன்மை பற்றி எழுதினார். இதனால் அவர் ஒரு பயமற்ற பத்திரிக்கை ஆசிரியராகவும், தைரியமான போராளியாகவும் ஆனார்.

பாலகிருஷ்ண பிள்ளையின் வாழ்க்கையில் ஒரு பெரு மாற்றம், அவர் 'சமதர்சி' யின் ஆசிரியரான பிறகு ஏற்பட்டது என்பதை முன்பு கூறினோம். அவர், ஆரம்பத்திலிருந்தே தமது மனசாட்சி என்ன கூறுகிறதோ அதன்படி நடந்து காரியங்களைச் செய்வதில் மிகவும் ஜாக்கிரதையாக இருந்தார். அவர் எதைச் செய்தாலும், அதனை ஓர் அர்ப்பண உணர்வோடு செய்வார். மற்றவர்களைத் திருப்திபடுத்த அவர் ஒருபோதும் காரியங்களைச் செய்ததில்லை. அவரைப் பொறுத்தவரையில் பத்திரிக்கை ஆசிரியர் தொழில் ஒரு கௌரவமானத் தொழிலாக இருந்தது; பொறுப்பு மிக்கது. ஒரு காரியத்தைச் செய்யும்முன் அவர் பலமுறை அதிலிருக்கும் நன்மை தீமைகளைப் பற்றிச் சிந்திப்பார். பிறகு அவர் பணியாற்றும் நிறுவனம் எவ்வாறு பாதிக்கப்படும் என்பதையும் கருத்தில் கொண்டு செயல்படுவார். தலையங்கம் எழுதும்போது, அவர் எழுதப்போகும் விஷயம் பற்றிய முக்கிய விவரங்களையும், நம்பத் தகுந்த குறிப்புகளையும் நடு நோக்கோடு சீர்தூக்கிப் பார்ப்பார். அதனால் அவர் ஒரு நேர்மை தவறாதப் பத்திரிக்கை ஆசிரியர் எனவும், ஆழ்ந்த சிந்தனையாளர் எனவும் கருதப்பட்டார். வாழ்க்கையின் குழப்பமான விவகாரங்களை, அவர் மிக்க ஊக்கத்துடனும், அக்கறையுடனும் அணுகுவார். பார்வையாளர்கள் அவரது சிந்தனை அவரது காலத்துக்கு முப்பது அல்லது நாற்பது ஆண்டுகள் முன்னோக்கியிருந்தது என்று கூறுவார்கள். வரவு செலவு திட்டம் போன்ற ஆர்வமற்ற விஷயங்களை அவர் மிக்க ஜாக்கிரதையாகவும், எளிமையாகவும் விமர்சிப்பார்; விவாதிப்பார்.

'செக்ஸ்' வாழ்க்கை அவருக்குச் சபிக்கப்பட்டதல்ல. ஒருவருக்குப் பாலுணர்வு அவரது தேவைகளில் ஒன்று. அது அவரது முழுவளர்ச்சியின் ஒரு பகுதியாகும். எனவே அதுபற்றி யாரும், வெட்கப்படத் தேவையில்லை. அவர் பாலியல் அறிவு மக்களுக்குத் தேவையென்று கூறினார். அந்த அறிவு பாலுணர்வு சம்பந்தப்பட்ட பல சிக்கல்களைத் தடுக்கும். எனவே

அவர் பாலியல் சம்பந்தப்பட்ட பல நூல்களை மலையாளத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டார். பாலுணர்ச்சி இயற்கையானது. அது கலைகள் மூலமாய் நெறிப்படுத்தப்பட வேண்டும். பத்திரிக்கை நிறுவனம் ஒரு கூட்டுறவு சங்கம் போன்றது. அதில் பொதுமக்களுக்கு ஏற்ற பங்குண்டு. எந்தவொரு பத்திரிக்கை ஆசிரியரும் இதை உணர்ந்து செயல்பட்டால் அது அவருடைய பரிமாணத்தைத் தங்கத்தால் எடைபோட வைக்கும். பிள்ளையவர்கள் வெளிப்படையாகவே பழமை விரும்பிகளான வாசகர்கள் மீது தமது புரட்சிகரமான கருத்துக்களைத் திணிப்பார். அதனால் அவர்களுக்கு ஏற்படும் முகச் சுளிப்புகளைக் கண்டு ரசிப்பார். அவர் எப்போதும் ஆக்கபூர்வமான விமர்சனங்களையே கொடுப்பார். அந்த ராஜ்யத்தில் அப்போது ஏற்பட்ட சில சமூக அரசியல் பிரச்சினைகளையும், அவைகளை அவர் எப்படிக் கையாண்டார் என்பதையும் இப்போது காணலாம்.

இந்திய தேசிய காங்கிரஸ் தனது விவகாரங்களை, ஸ்ரீமூலம் திருநாள் அவர்களது ஆட்சிக் காலத்தில் திருவாங்கூரில் தொடங்கியது. 1919–ல் திருவனந்தபுரத்தில் காங்கிரஸ் காரியக் கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. அதற்கு ஏ.கே. பிள்ளை, வி. அச்சுத மேனன் போன்ற இளைஞர் களிடமிருந்து ஆக்கபூர்வமான ஆதரவு கிடைத்தது. 1922–ம் ஆண்டு வரலாற்றில் பொறிக்கப்பட வேண்டியதோர் ஆண்டாக ஆயிற்று. அப்போதுதான் திருவாங்கூரில், கல்விக் கட்டணத் தொகை அதிகமாக்கப்பட்டதை எதிர்த்து மாணவப் போராட்டங்கள் தொடங்கின. கட்டண உயர்வுக்குக் காரணமாயிருந்தவர் திவான் ராகவையா அவர்கள், அரசாங்கம் தனது இரும்புக்கரத்தால் போராட்டத்தை அடக்கிவிட்டது. பாலகிருஷ்ண பிள்ளை இதைக் குறித்துக் கோபமான தலையங்கத்தை எழுதி வெளியிட்டார். ராகவையா அவர்கள் திவானாகி மூன்றாண்டு காலம் நிரம்பியதும், திவானால் நாட்டுக்கு ஏற்பட்ட நாசத்தை மூன்று கட்டுரைகளில் எழுதினார். அந்தக் கட்டுரைகள் மிகவும் கடுமையாக இருந்ததால், அந்த ராஜ்யத்தில் நிலிவிய நேர்மையற்ற அரசியல் சூழ்நிலையை மிகவும் பாதித்தது. அக்காலத்தில் மகாராஜாவை, விமர்சனம் செய்வதை ஒரு பாவமாக மக்கள் கருதினர். ஆனால் பிள்ளைக்கோ, மகாராஜா ஒரு சாதாரண குடிமகனாகவே காணப்பட்டார். குடியாட்சி முறைக் கொள்கைகள் பரவாத அந்தக் காலத்திலேயே பிள்ளையவர்கள் ஒரு ஜனநாயக வாதியாக இருந்தார்.

வைக்கம் சத்தியாகிரகம் (1924–25) அப்போது இந்தியா முழுவதும் விளம்பரமானதோர் போராட்டம், அது புகழ் பெற்ற வைக்கம் கோயிலைச் சுற்றியுள்ள இடங்களில் தோன்றிய இயக்கம். அந்தச் சத்தியாகிரகப் போராட்டத்தின் முக்கிய அம்சம் "சவர்ன ஜாதா" என்பதாகும். அப்போராட்டம் மன்னத்து பத்மநாபன் அவர்களது சீரிய தலைமையில்

இயங்கியது. பிறகு கே.பி. கேசவ மேனன், செங்கனாசேரி பரமேஸ்வரன் பிள்ளை, சி.வி . குன்னி ராமன் போன்றோர் அப்போராட்டத்தில் கலந்து கொண்டனர். "சவர்ன ஜாதா" எனும் அப்போராட்டம், உயர்ஜாதி இந்துக்களால் உருவாக்கப்பட்டது. அது தீண்டாமை ஒழிப்புத் திட்டத்தின் ஒரு பாகமாகும். அத்திட்டத்தின்படி இந்து மதத்தில் இருக்கும் அனைவரும் வேறுபாடில்லாமல் வைக்கம் கோயிலைச் சுற்றியுள்ள தெருக்களை உபயோகிக்கவும், அக்கோயிலுக்குள் சென்று வழிபடவும், அவர்கள் வேண்டினர். அந்தப் போராட்டத்தில் ஈடுபட்ட சத்தியாகிரகிகள் கைது செய்யப்பட்டு, இருபது மாதங்களுக்கு மேலாகப் பலவிதங்களில் துன்புறுத்தப்பட்டனர். பிறகு மகாத்மா காந்தி அவர்களின் கோரிக்கையின்படி அந்தப் போராட்டம் 1925–ல் திருப்பிப் பெறப்பட்டது. பொதுவில் அப்போராட்டத்தின் பெரும் பகுதி வெற்றி பெற்றது எனலாம். ஆனால் தீண்டாமையை ஒழிப்பதில் அது பெரும் பங்கு பெற்றது. மக்களுக்குத் தீண்டாமை பற்றிய விழிப்புணர்வு ஏற்பட்டது. சமூக, அரசியல் முன்னேற்றத்தில் அதுவொரு முக்கியமானதோர் எல்லைக்கல்லாக விளங்கியது.

திருவாங்கூர் அரசு அமைதியான முறையில் நடத்தப்பட்ட சத்தியாகிரகத்தை அடக்க எடுத்துக் கொண்ட வழிமுறைகளை 'சமதர்சி' ஆசிரியர் வெகுவாக விமர்சித்தார். 1924–ம் ஆண்டு ஏப்ரல் பத்தாம் தேதியில் எழுதப்பட்ட தலையங்கத்தில், மகாராஜாக்களின் சிற்றின்ப விளையாட்டுகளையும், அதிகாரத்தோரணைகளையும் அவர் வெளிப்படுத்தினார். இந்தத் தலையங்கம் அமைதியான கேரள அரசியலில் ஒரு குழப்பமான அமைதியற்ற நிலையை ஏற்படுத்தியது. அவரால் எழுதப்பட்டத் தலையங்கத்திலிருந்து ஒரு பகுதி கீழே தரப்பட்டுள்ளது.

"யார் அதற்குப் பொறுப்பேற்றாலும் வீடு தீ பற்றியெரிகிறது – . திருவாங்கூர் அரசியல் அந்த நிலைக்கு வந்திருக்கிறது. இதற்குக் காரணமான திவான் கட்டாயம் விலக வேண்டும். அவரது பணிக்காலத்தை நீடிக்கக் கூடாது, ................ பழைய காலம் மலையேறிவிட்டது என்பதை திருமேனி மகாராஜா உணரவேண்டும். காரணம் எதுவானாலும் நாற்றமடிக்கும் திருவாங்கூர் அரசின் நிலை உலகம் முழுவதுக்கும் தெரிந்துவிட்டது. தேசாபிமானிகள் அகிம்சை முறையில் நாட்டைக் காப்பாற்றத் தீவிரமாகச் சிந்திக்க வேண்டும். நாம் கேட்பதெல்லாம் அவர்கள் அதற்குத் தயாராக இருக்கிறார்களா என்பதே".

அரசாங்கத்தையும், மகாராஜாவையும் இம்மாதிரியான கடுமையான வார்த்தைகளால் தாக்கியெழுதும் தைரியம் அக்காலப் பத்திரிக்கைகளுக்கு இருந்ததில்லை. திருவனந்தபுரத்திலிருந்து வெளிவந்த "வெஸ்டர்ன் ஸ்டார்" என்ற ஆங்கிலப் பத்திரிக்கை அரசரையும் அரசாங்கத்தையும்

அவதூறாக எழுதிய பாலகிருஷ்ண பிள்ளையின் துணிச்சலைக் கண்டித்து எழுதியது. மற்றும் சிலபத்திரிக்கைகள், பிள்ளையவர்கள், அவருக்கு முன்பிருந்த ஆசிரியர் கே. ராமகிருஷ்ண பிள்ளை வகுத்துக் கொண்ட எல்லையை மீறி விட்டதாகக் கருத்து தெரிவித்தது மட்டுமின்றி, எதிர்காலத்தில் எச்சரிக்கையாக இருக்க வேண்டியும் அறிவுரை செய்தன. இம்மாதிரியான எதிர் நடவடிக்கைகளைக் கண்டு பாலகிருஷ்ண பிள்ளை புன்னகை புரிந்தது மட்டுமின்றித் தனது காரியத்தில் உறுதியாகவும் இருந்தார். உண்மையில் அவரது அம்பு குறித்த இலக்கைத் தாக்கியது குறித்து அவர் உவகை கொண்டார்.

பாலகிருஷ்ண பிள்ளை எந்தவொரு தனி நபர் அல்லது நிறுவனத்தைக் கண்டும் அஞ்சியோ அல்லது அவர்களது தயவைப் பெறவோ தனது பேனாவை மென்மையாக்கிக் கொண்டதில்லை. இதற்குப் பின்வரும் நிகழ்ச்சியை உதாரணமாகக் கூறலாம். கே.வி. ரங்கசாமி ஐயங்கார், பிள்ளையவர்களின் பேராசிரியர். அவர்தான் பிள்ளைக்கு மகாராஜா ஆண்கள் கல்லூரியில் வேலையும் வாங்கிக் கொடுத்தவர். பிள்ளையவர்களுக்குப் போதிய அனுபவம் இல்லாதிருந்த போதிலும் அவருக்குச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் விடைத்தாள்களைத் திருத்திமதிப்பிடும் பணிக்குச் சிபாரிசு செய்து அவ்வேலையை வாங்கிக் கொடுத்தவரும் அவரே. ஆனால் அவரைப் பற்றி விமர்சனம் செய்து தண்டிக்கும் காலம் நேர்ந்தபோது, பிள்ளையவர்கள் சிறிதும் பச்சாதாபப்படாமல், "தகுதியற்ற கல்லூரி முதல்வர்" என்ற தலைப்பில் ஒரு கட்டுரையைத் தனது பத்திரிக்கையில் எழுதினார். எழுத்துரிமை நோக்கங் கொண்ட பாரபட்சமற்ற பத்திரிக்கையாளர் ஒருவரால் தான் இப்படிப்பட்ட கட்டுரையை எழுத முடியும்!

வைக்கம் சத்தியாகிரகப் போராட்டம் தொடங்கிய இரண்டு நாட்கள் கழித்து அவர் ஒரு தலையங்கம் எழுதினார். அது அந்தப் போராட்ட இயக்கத்தை விளக்கும், எளிய வார்த்தைகளால் எழுதப்பட்ட உறுதியான ஆவணமாக இன்றும் கருதப்படுகின்றது. போராட்டம் நடத்தும் முறையாக, 1924–ம் ஆண்டு மார்ச் மாதம் 30–ம் நாள் நாயர், ஈழவர், புலையர், இனங்களைச் சேர்ந்த ஒவ்வோர் நபர் வைக்கம் கோயில் தெருவில் நடந்தனர். அப்போது அவர்கள் உடனே கைது செய்யப்பட்டனர்.

இதைப் பற்றி அவரது முக்கியமான கட்டுரை கீழ்கண்டவாறு கூறுகிறது. "இப்படிப்பட்ட கைதுகளால், வைக்கம் சத்தியா கிரகம், உலக மக்களால் கவனிக்கப்பட்டுள்ளது, கவரப்பட்டுள்ளது, ................ கேரளத்தில் அதிகமாகப் பரவியிருக்கும் இந்தத் தீண்டாமைக் கொள்கையே, இந்தியா சுதந்திரம் பெற முட்டுக்கட்டையாக இருக்கிறது. இந்தப் "பிசாசை" நாட்டின் இப்பகுதியிலிருந்துத் துரத்திவிட்டால், மற்றப் பகுதிகளிலிருந்து

அது சுலபமாக நீங்கிவிடும். பிரிட்டிஷ் அரசாங்கத்தையே அசைக்கக் கூடிய மகாத்மா காந்தியவர்களின் ஆசிகள் இந்தச் சத்தியா கிரகத்துக்கு உண்டு". 1924–ம் ஆண்டு ஏப்ரல் பதினைந்தாம் நாள் இதழில் திருவாங்கூர் அரசைத் தாக்கி "பைசாகியம் பைசாகியம்" என்ற தலையங்கத்தைப் பிள்ளையவர்கள் எழுதினார். இதன் பொருள் "பிசாசுத்தனம், பிசாசுத்தனம்" என்பதாகும். இதற்குப் பின்பு ஏப்ரல் இருபத்தாறில் வெளிவந்த இதழில். "இந்தத் தூய்மையற்ற நிலைக்கு, நியாயமற்ற மிக்க ஆசாரத்தில் மூழ்கிப்போன மகாராஜாதான் காரணம்" என்று அவர் குற்றஞ்சாட்டியிருந்தார். பத்திரிக்கையாளர் என்ற முறையில் பாலகிருஷ்ண பிள்ளை மாநிலச் சட்டப் பேரவைக்குத் தவறாமல் செல்வார். தமது பத்திரிக்கையில் அங்கு நடக்கும் விவாதங்களைப் பற்றி எழுதினார். அதிகாரப் பிரியர்களையும், நியாயமற்ற அதிகாரிகளையும் பயமின்றி அவர் சாடினார். மக்களது நன்மையே அவரது முதல் நோக்கமாக இருந்தது.

1925–ம் ஆண்டு எம்.ஈ . வாட்ஸ் என்பவர் திவானாக வந்தார். அப்போது ஆட்சி பீடத்தின் வாரிசாக இருந்த ஸ்ரீசித்திர திருநாள் சிறுவராக இருந்ததால் லட்சுமிபாய், ராஜப்பிரதிநிதியாக ஆட்சி நடத்தினார். புதிய திவான் ராஜப்பிரதிநிதியின் ஒப்புதலோடு சில புதிய சட்ட திட்டங்களைக் கொண்டு வந்தார். பாலகிருஷ்ண பிள்ளையைப் பொறுத்தவரையில் அவைகள் பொதுமக்கள் நலனுக்கு எதிராக இருந்தன. அவைகளில் 1928–ம் ஆண்டின் பத்திரிக்கைச் சட்டம் மிகவும் எரிச்சலூட்டுவதாக இருந்தது. இதன்படி ஒவ்வொரு பத்திரிக்கையும் ஐந்நூறு ரூபாய் செலுத்தி உரிமம் பெற வேண்டும். ராஜப் பிரதிநிதியையோ அல்லது அரச குடும்பத்தாரையோ எதிர்த்து விமர்சனம் செய்து பத்திரிக்கையில் எழுதினால் எந்தவிதமான முன்னறிவுப்புமின்றி அந்த உரிமம் பறிக்கப்படும். இதுபற்றி எந்த நீதி மன்றத்திலும் முறையிட முடியாது.

பாலகிருஷ்ண பிள்ளை இந்தப் புதிய திட்டத்தைக் கேட்டதும் வெகுண்டெழுந்தார். அடுத்த நாளே தமது பத்திரிக்கையில் இதுபற்றி எதிர்ப்பு தெரிவித்து காரசாரமாக எழுதினார். தலையங்கத்தின் தலைப்பு "புலிவருன்னு". அதாவது "ஓ. புலி வருகிறது" என்று பொருள். அவர் இந்தப் புதுப் பத்திரிக்கை சட்டம், பத்திரிக்கை சுதந்திரத்தைப் பறிக்க வந்ததாகும் என்று அதில் விளக்கியிருந்தார். ராஜப் பிரதிநிதிக்கு இந்தச் சட்டத்தை அமுலாக்க அறிவுரை கூறிய வாட்ஸின் அரசாங்கம் பொது மக்களுக்கு அளவில்லாத தீங்கிழைத்து விட்டது. எனவே சரித்திர ஆசிரியர்கள் இதனை இரத்த எழுத்துக்களால் பொறிக்க வேண்டும் என்றார். விசுவாசமற்ற திறமையில்லாத திவானைத் திருவாங்கூரின் "முசோலினி" என்று வர்ணித்து, அவரை உடனே ராஜ்யத்திலிருந்து

அனுப்பிவிட வேண்டும் என்று வாதிட்டார். தமது பத்திரிக்கையில் பெரிய எதிர்ப்பைத் தெரிவித்தது மட்டுமின்றி அந்த அருவருப்பானப் பத்திரிக்கைச்சட்டத்துக்கு எதிராகப் பொது மக்களின் ஆதரவைத் திரட்டினார். திருவனந்தபுரத்தில் இப்பத்திரிக்கைச் சட்டத்துக்கு எதிராகக் கூட்டப்பட்ட பொதுக்கூட்டத்திற்கு பலதரப்பட்ட தலைவர்களும் அரசியல் பிரமுகர்களும் வந்திருந்தனர். எல்லாரும் ஒரே குரலில் அச்சட்டத்துக்கு எதிர்ப்பைத் தெரிவித்தனர்.

பாலகிருஷ்ண பிள்ளையவர்கள் பத்திரிக்கை ஆசிரியராக ஆற்றிய பெரும் பணியை, அப்போதிருந்த பழம்பெரும் பத்திரிக்கையாளரும், அரசியல் சிந்தனையாளருமான சி. நாராயணபிள்ளை, நடுநிலை தவறாது பாராட்டினார். "பாலகிருஷ்ண பிள்ளை சமதர்சியில், குற்றம்புரியும் அதிகாரிகளைக் கண்டித்து எழுதியதால் அப்பத்திரிக்கை அந்த ராஜ்யம் முழுவதும் பிரபல்யமாயிற்று. இதனால் அந்த அதிகாரிகள் குழம்பிப் போனார்கள். சிலருக்குப் பைத்தியமே பிடித்து விட்டது" என்று கூறினார்.

பாலகிருஷ்ண பிள்ளை பத்திரிக்கையில் இந்தச் சட்டத்துக்கு எதிர்ப்பு தெரிவித்து எழுதியது மட்டுமின்றி, எதிர்ப்புக் கூட்டங்களையும் கூட்டினார். இவைகளுக்கும் மேலாக சட்டசபையில் இதுபற்றி விவாதம் எழுப்பி ஒத்திவைப்புத் தீர்மானம் கொண்டுவரும் அளவுக்கு ஏற்பாடு செய்தார். ஆனால் இதற்கு அனுமதி கிடைக்கவில்லை. அதன்பிறகு சமதர்சியில் திவானின் எதேச்சதிகாரப் போக்கைப் பற்றிக் கடுமையான தலையங்கம் ஒன்றை எழுதினார். இந்த மாதிரியான விவகாரங்களால் பத்திரிக்கையின் உரிமம் பறிக்கப்படுமென்று பத்திரிக்கையின் உரிமையாளர் அஞ்சினார். எனவே அவர் பாலகிருஷ்ண பிள்ளைக்கு, சட்டதிட்டங்களின்படி பத்திரிக்கை நடத்த முடியாவிட்டால் ஆசிரியர் பதவியை விட்டுவிட வேண்டிக் கடிதம் ஒன்றை எழுதினார். இதைக் கண்டதும் பிள்ளையவர்கள் சீற்றங்கொண்டார். 1926–ம் ஆண்டு ஜூன் மாதம் 15–ம் தேதி, பிள்ளையவர்களுக்கு இக்கடிதம் கிடைத்தது. அந்தத் தினத்திலேயே அவர் பத்திரிக்கை ஆசிரியர் பொறுப்பிலிருந்து விலகிக் கொண்டார். அவர் அப்படிச்செய்யும் போது கீழ்கண்ட உறுதியான சபதத்தை எடுத்துக் கொண்டார்.

1) ஏழ்மை நிலைக்கும், முடிவில்லாதத் துயரத்துக்கும் அழைத்துச் செல்லும் பத்திரிக்கை வேலையைத் தவிர்த்து வேறு தொழிலை நான் மேற்கொள்ள மாட்டேன்.

2) எந்தவொரு பத்திரிக்கை உரிமையாளரிடமும் சம்பளம் பெறும் ஊழியனாக இருக்க மாட்டேன். மாறாக நான் என் மனசாட்சி யின்படியும், விருப்பப்படியும், என் கட்டுப்பாட்டில் இருக்கும் பத்திரிக்கையை நடத்துவேன்".

அவர் தமது சபதத்தைத் துன்பத்திலும், சோதனைகளிலும், ஏழ்மையிலும், நோயுற்ற போதிலும் காத்து வந்தார். இதனால் அவரது நெஞ்சைப் பிளக்கும் சரித்திரத்தில் அவர் ஓர் உன்னதப் புருஷராக விளங்கினார்.

**பிரபோதகன்:**

சமதர்சிக்குப் பிறகு பாலகிருஷ்ண பிள்ளை ஆசிரியராகப் பணியாற்றிய வார இதழ் "பிரபோதகன்" என்பதாகும். "கற்பிப்பவன் அல்லது மனதில் பதியவைப்பவன்" என்பது இதன் பொருளாகும். திருவனந்தபுரத்தில் அவரால் அமைக்கப்பட்ட "சாரதா" அச்சகத்திலிருந்து 1930–ம் ஜூன் மாதம் பதினான்காம் தேதியிலிருந்து இது வெளிவரத் தொடங்கியது. இதிலிருந்து சமதர்சி இதழை அவர் விட்டதற்கும், இதைத் தொடங்கியதற்கும் நான்காண்டு காலம் இடைவெளி இருந்துள்ளது என்பது புலனாகிறது. இக்காலம் பிள்ளைக்குத் துன்பமிக்க காலமாகவே இருந்தது. பணமுடையும், ஆஸ்த்துமா நோயும் அவர் உடலை மிகவும் பல வீனப்படுத்தின. ஆனால் அவரது மனம் உறுதி தளராமல் உற்சாகத்துடன் இருந்தது. இந்த இடைப்பட்ட காலத்தில் அவர் என்ன செய்தார்?

**மூலதனம் சேகரித்தல் – ஒரு வருத்துகின்ற அனுபவம்:**

அவரது உண்மையான அந்தரங்க நண்பர்கள் அவரை அடிக்கடி சந்தித்து அவரது எதிர்காலம் பற்றிப் பேசினர். அவர் சொந்தமாக ஒரு பத்திரிக்கை தொடங்குவதில் முனைப்பாக இருந்தார். ஆனால் அவரிடமோ பணம் இல்லை. அவருக்குச் சொந்தமாக ஓர் அச்சகம் அமைந்துவிட்டால், பத்திரிக்கையால் ஏற்படும் நஷ்டத்தை அதன் வருமானம் சரிகட்டி விடும் என்று அவர் எண்ணினார்.

மேலும் பிள்ளை பத்திரிக்கைச் சுதந்திரத்துக்கான போரைத் தொடர்ந்து நடத்துவதில் கண்ணாக இருந்தார். எனவே நெருக்கமான நண்பர்களைக் கலந்தாலோசித்ததில் ஒரு நல்ல அச்சகத்தைத் தொடங்குவதற்கு வேண்டிய பணத்தைத் திரட்ட முடிவு செய்யப்பட்டது.

ஆரம்பத்தில் தெற்குத் திருவாங்கூரில் இருக்கும் அவரது நண்பர்களையும் அபிமானிகளையும் அவர் சந்தித்தார். அவரது நெருக்கமான நண்பர் டி. கொச்சு கிருஷ்ண பிள்ளையும் அவருடன் சென்றார். அவர் "மலையாள ராஜ்யம்" என்ற பத்திரிக்கையில் பிள்ளையுடன் ஆசிரியர் குழுவில் வேலை செய்தவர். நண்பர்கள் பலரும் உற்சாகமூட்டினர். அவர்கள் பிறகு மத்திய திருவாங்கூர், வடக்குத் திருவாங்கூர், பிரதேசங்களில் பயணஞ்செய்து நிதி திரட்டினர். ஒவ்வொரு நாளும் பதினைந்து மைல் தூரம் நடந்தனர். தேவைப் பட்டபோது அவர்கள்

கடை வராந்தாக்களில் படுத்து உறங்கினர். நிர்பந்தம் இல்லாமல் கொடுக்கப்பட்ட சிறிய அல்லது பெரிய தொகைகள் பெற்றுக் கொள்ளப்பட்டன. பாலகிருஷ்ண பிள்ளைக்கும் அவரது நண்பருக்கும் இம்மாதிரி அலைந்து திரிந்து பணம் திரட்டுவது ஓர் உற்சாகமான அனுபவமாக இருந்தது. இப்படியாக அவர்கள் சுமார் ஐயாயிரம் ரூபாயை அந்த ராஜ்யத்தின் பல பாகங்களிலிருந்துத் திரட்டினர்.

இம்மாதிரியான பொதுஜன ஆதரவு பிள்ளையவர்களை மலேசிய நாட்டிலும் (எஃப், எம். எஸ்) பணம் திரட்ட ஊக்குவித்தது. அங்கு சமதர்சி மிகவும் பிரபல்யம் அடைந்திருந்தது. ஆனால் அவரது நெருங்கிய உறவினர்கள் அவரது தேக நிலையைக் கருத்தில் கொண்டு, கடல் கடக்கும் கடினமான பிரயாணத்தைத் தனிமையாக மேற்கொள்ளாதவாறு தடுத்தனர். எனவே சமதர்சியின் திருவனந்தபுரம் நிரூபரான என்.ராமச்சந்திரன் தம்பி, அவருடன் எஃப்.எம்.எஸ். செல்ல இசைந்தார்.

தம்பியின் சகோதரர் சிங்கப்பூரில் ஓர் உயர் அதிகாரியாக இருந்தார். எனவே அவர்கள் 1928–ம் ஆண்டு நவம்பர் 24–ம் தேதியன்று தங்கள் பயணத்தைத் துவங்கினர். அவர்கள் சென்னையிலிருந்து கப்பலில் சென்றனர். சிங்கப்பூரிலிருந்த மலையாளிகள், திருவாங்கூரிலிருந்து வரும் அனுபவமிக்க பத்திரிக்கையாளரைப் பற்றிக் கேள்விப்பட்டனர். எனவே அவர் அங்கு உற்சாகத்துடனும், உற்றன்புடனும் வரவேற்கப்பட்டார். அப்போது கே.பி. கேசவ மேனனும் சிங்கப்பூரில் இருந்தார். எனவே இருவரும் மலாக்கா, குலாலம்பூர், இன்னும் மற்ற இடங்களுக்குச் சென்றனர். சுமார் நாலாயிரம் ரூபாய் வரையில் திரட்டினர்.

எஃப்.எம். எஸ்ஸிலிருந்து திரும்பியதும் பாலகிருஷ்ண பிள்ளை நேரத்தை வீணாக்காமல் சென்னைக்குச் சென்றார். அங்கு டபுள் ஸிலிண்டர் அச்சு இயந்திரம் ஒன்றையும் மற்றும் தேவையானவற்றையும் வாங்கினார். 1930–ம் ஆண்டு ஏப்ரல் 22–ம் நாள் திருவனந்தபுரத்தில் உள்ள "புலிமூட் சந்திப்பில்" "சாரதா பிரிண்டிங் ஒர்க்ஸ்" என்ற பத்திரிக்கை அச்சகம் நிறுவப்பட்டது. ஏற்கனவே "சாரதா" என்பது அவரது மகளின் பெயர் என்று குறிப்பிட்டுள்ளோம். அச்சகம் நன்றாக நடக்கவும் பாலகிருஷ்ண பிள்ளை ஒரு வார இதழைத் துவக்கத் தீர்மானித்தார். அதன்படி 1930–ம் ஆண்டு ஜூன் மாதம் 4–ம் தேதி முதல் 'பிரபோதகன்' என்ற வார இதழ் புதன் கிழமைகளில் வெளிவரத் தொடங்கியது. அதிருப்தியடைந்திருந்த அரசாங்கம், அவசரப்பட்டு எந்தவொரு கொடுமையான நடவடிக்கையையும் எடுக்காது என்றும், பெரியதாகக் கெடுதல் எதையும் செய்யாது என்றும் அவர் நம்பினார். ஆனால் அரசாங்கத்தின் தயவுக்காக அதற்குத் துதிபாட அவர் விரும்பவில்லை.

முதல் இதழிலேயே பத்திரிக்கை ஆசிரியர் தமது கொள்கைகளை தெளிவான மொழியில் பின் வருமாறு வெளிப்படையாக எழுதினார்: "அரசியல் இலக்கிய விஷயங்கள் மனவேறுபாடு இன்றியும் பாரபட்சமின்றியும் உணர்ச்சிவசப்படாமல் விமர்சிக்கப்படும். ஓர் இலக்கிய எழுத்தாளன் வழக்கறிஞர் போலல்லாமல் ஒரு நீதிபதிபோல அணுகப் பழகிக் கொள்ள வேண்டும். ஆனால் பத்திரிக்கையாளர் என்ற முறையில் ஒருவர் லார்ட் மெக்காலே அவர்களின் கூற்றுபடி ஒரு வழக்கறிஞர் மாதிரி செயல்படவேண்டும். ஆனால் நாம் மக்களின் வழக்கறிஞராகவே பணியாற்றுவோம் என்று உறுதியளிப்போம்".

உணர்வு, அணுகுமுறை மற்றும் பத்திரிக்கை நோக்கு, கொள்கை முதலியவற்றால் "பிரபோதகன்" இதழ் "சமதர்சி" இதழின் தொடர்ச்சியாகவே இருந்தது. முதல் இதழின் தலையங்கமே "சுவர்கமா அல்லது நரகமா" என்ற தலைப்பில் எழுதப்பட்டிருந்தது. இதுவே 'தொடர்ச்சி' என்று கூறுவதற்குப் போதுமான சாட்சி.

"...................... ராஜப்பிரதிநிதியின் ஆட்சியில் நாடு நரகம் போலிருந்தது என்பதை "வாஞ்சி நாட்டில்" (திருவாங்கூர்) வசித்தவர்கள் அறிவார்கள். பொதுசாலைகளை உபயோகிக்கச் சுதந்திரம் வேண்டி ஏற்பட்ட வைக்கம் போராட்டத்தின் போது தான் ராஜப்பிரதிநிதியின் ஆட்சி துவங்கியது. சுசீந்திரம் போராட்டம், அரசாங்கம் மற்ற போராட்டத்தை நேர்மையான முறையில் அணுகவில்லை என்பதைத் தெளிவாகக் காட்டுகிறது. புதிய பத்திரிக்கை ஒழுங்குமுறைச் சட்டம் என்ற பெயரில் எழுத்துச் சுதந்திரத்தின் கழுத்தில் கோடாலியை வைத்ததும் இந்த ராஜப்பிரதிநிதியின் ஆட்சியில்தான்.

"...................... இப்படிப்பட்ட அரசாங்கத்தின் ஆட்சியில் தேசம் ஒரு நரகமாயிற்று என்று கூறுவது மிகையாகாது".

பிரபோதகன் கொள்கை விளக்கக் கட்டுரைகளுக்கு மட்டும் முக்கியத்துவம் தராமல், இலக்கிய கட்டுரைகள், படிக்கக்கூடிய விஷயங்கள், ஆகியவற்றைத் தேர்ந்தெடுப்பதிலும் கவனமாயிருந்தது. இதனால் தன் பெயருக்கேற்றாற்போல் அது ஒரு தெளிவான பத்திரிக்கையாக விளங்கியது. ஒவ்வொரு வார இதழிலும், ஒன்றிரண்டு கவிதைகள் சிறுகதைகள் தொடர்கதைகள், உலகப்புகழ்பெற்ற கதைகளின் மொழிபெயர்ப்புகள், அறிஞர்களின் விமர்சனக் கட்டுரைகள் ஆகியவைகள் வெளிவந்தன. ஈ.வி. கிருஷ்ண பிள்ளை, ஜி. சங்கர குரூப், போதேஸ்வரன் ஆகியோர் அப்பத்திரிக்கையில் தொடர்ந்து எழுதிவந்தனர். ஒவ்வொரு கட்டுரையும், நேர்மையற்ற அதிகாரிகளைத் தாக்கும் அம்பாகவே வெளிவந்தது. அதிகாரிகள் பத்திரிக்கையாசிரியரைக் கண்டு பயந்தனர், அவரது நிரந்தர விரோதிகளாகவும் ஆனார்கள்.

ஒரு கட்டுரை திருவாங்கூரின் புதிய திவானாக வந்த வி.எஸ். சுப்பிரமணிய ஐயரைப் பற்றியது. திருவாங்கூர் திவானுக்கு, லண்டனில் நடக்கப்போகும் வட்ட மேஜை மகாநாட்டுக்குச் செல்ல ஒரு வாய்ப்பை வைஸ்ராய் அளித்தார். ஆனால் ஆசாரமுள்ள திவான் கடல் கடந்து மகாநாட்டுக்குப் போகக் கூடாது என்று முடிவெடுத்துவிட்டார். அந்த மகாநாட்டில்தான் இந்தியர்களின் உரிமை பற்றியும், எதிர்கால அரசாங்கத்தை உருவாக்கும் திட்டங்கள் பற்றியும் தீர்மானிப்பதாக இருந்தது. அற்ப காரணத்துக்காக திவான் மகாநாட்டுக்குப் போக மறுப்பதைக் கண்ட பிள்ளை மிகவும் கோபங்கொண்டார். அவரது கோபம், அவர் எழுதிய வசைமழை போன்ற தலையங்கத்தில் வெளிப்பட்டது.

> "தீட்டு நிறைந்த மக்கள் நடத்தும் மகாநாட்டுக்கு சுப்பிரமணிய ஐயர் தமது ஆசாரங்களை மீறிப்போக அவரது மனசாட்சி மறுத்தால், அவர் அப்படி மனவுறுத்தல் இல்லாத வேறொருவரைத் தனக்குப் பதிலாகப் போக நியமித்திருக்க வேண்டும். அவர் பொறுப்புள்ள திவானாக இருந்தால் இதைச் செய்திருக்க வேண்டும். அதுதான் ராஜவிசுவாசமுமாகும். திருவாங்கூர் சரித்திரத்திலேயே இம்மாதிரி அரசருக்கும், ராஜ்யத்துக்கும் துரோகியான திவான் இருந்ததில்லை. ராஜ்யத்துக்குத் துரோகம் செய்த திவான்கள்தான் இருந்தனர். ஆனால் அவர்கள் அரசருக்கு விசுவாசமாக நடந்து கொண்டனர். திருவாங்கூருக்கு இவர் புதுமாதிரியான திவான். உடனடியாக இவர் பணிநீக்கம் செய்யப்பட்டால்தான் மக்களும் அரசரும் பயனடைவார்கள்".

இப்படிப்பட்ட கட்டுரைகளைப் படிக்கும்போது அதிகாரிகளின் எதிர்ப்பு எப்படி இருக்கும் என்பதை ஒருவர் கற்பனை கூட செய்ய முடியாது. எதற்குப் பிள்ளையவர்கள் பயந்தாரோ அது நடந்தது . பிரபோதகன் பதினான்கு வாரங்களே உயிருடன் இருந்தது. பத்திரிக்கை ஒழுங்குமுறைச் சட்டம் தனது வேலையைச் செய்தது. பத்திரிக்கையின் "உரிமம்" பறிக்கப்பட்டது. இருபத்தைந்து ரூபாய் கட்டணத்தையும் அரசாங்கம் எடுத்துக் கொண்டது. ஆனால் பாலகிருஷ்ண பிள்ளை அமைதியாக இருக்கவில்லை. அவர் அரசாங்கத்துக்கு மீண்டும் விண்ணப்பித்தார். அதில் அவர், தமது தலையங்கத்தில் ராஜப்பிரதிநிதியாகிய மகாராணிக்கு எதிராகவோ அல்லது திருவாங்கூர் அல்லது பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு எதிராகவோ, மறைமுகமாகவோ அன்றி நேரிடையாகவோ தாக்கி எழுதவில்லை என்று கூறியிருந்தார். எனவே உத்திரவை மறு பரிசீலனை செய்யும் படியும் அல்லது திருவாங்கூர் உயர்நீதி மன்றத்தில் மேல்முறையிடவும் அனுமதி கேட்டிருந்தார்.

அந்த மனு உயர்நீதி மன்றத்துக்கு அனுப்பப்பட்டது. பின்பு அது மறுக்கப்பட்டது. எனவே அரசாங்கத்தின் தீர்மானமே இந்த விஷயத்தில் சரி என்பது போலாயிற்று. அரசாங்கமும் பாலகிருஷ்ண பிள்ளையின் துணிச்சலான கட்டுரைகள் இத்துடன் நிறுத்தப்படும் என்று எண்ணியது. ஆனால் அப்படி நடக்கவில்லை.

## "கேசரி"

பாலகிருஷ்ண பிள்ளை அடுத்து என்ன செய்யப் போகிறார் என்று அந்த ராஜ்யத்து மக்கள் ஆர்வத்துடன் எதிர்பார்த்திருந்தனர். அவரைப் பற்றித் தெரிந்தவர்கள் அவர் ஓர் அடி பட்ட பாம்பு போன்று சந்தர்ப்பம் கிடைத்தவுடன் பழிக்குப்பழி வாங்கிவிடுவார் என்பதை அறிவார்கள். அரசாங்கமும் இதனை அறியும். சிலர் கே. ராமகிருஷ்ண பிள்ளை போன்று இவரும் நாடு கடத்தப்படுவார் என்று நினைத்தனர்.

பிரபோதகனின் உரிமம் பறிக்கப்பட்டு ஒரு வாரம் கூட ஆகவில்லை. அதற்குள் பாலகிருஷ்ண பிள்ளையை ஆசிரியராகக் கொண்ட ஒரு பத்திரிக்கை எல்லாரது எதிர்நோக்குகளுக்கிடையே ஆரம்பிக்கப்பட்டது. 'கேசரி' என்று அப்பத்திரிக்கைக்குப் பெயர். சொல்லப் போனால் இந்த இரண்டு பத்திரிக்கைகளும் கொள்கையளவில் வித்தியாசமில்லை. பிள்ளையின் தீர்க்கதரிசனமும், தம்பியின் உடனடியான செயற்பாடும் இம்மாதிரியான எதிரிடைச் செயலுக்குக் காரணங்களாக இருந்தன. பாலகிருஷ்ண பிள்ளையிடமிருந்து வரும் புதிய பத்திரிக்கைக்கு உரிமம் கோரிவரும் விண்ணப்பம் அரசாங்கத்தால் தள்ளப்படும் என்று எல்லாரும் எண்ணினார்கள்.

எனவே அவர், கேசரி பத்திரிக்கையின் உரிமத்தைத் தமது நண்பர் ஆர். நாராயண பிள்ளையிடமிருந்து தம் பெயருக்கு மாற்றிக் கொண்டார். அதற்கு உரிமம் ஏற்கனவே 1930–ம் ஆண்டு ஏப்ரல் மூன்றாம் தேதி வழங்கப்பட்டிருந்தது. இந்த விற்பனை சமாசாரத்தில் தம்பி ஒரு முக்கிய நபராக இருந்தார். சாரதா அச்சகம் இருக்கிறது. கேசரியின் உரிமமும் கைக்கு வந்து விட்டது. எதிர்ப்பு குணங்கொண்ட பிள்ளை மூன்றாம் பத்திரிக்கையின் ஆசிரியரானார்.

கேசரியின் முதல் இதழ் 1930–ம் ஆண்டு செப்டம்பர் 18–ம் தேதி வெளிவந்தது. கல்கத்தாவிலிருந்து வெளிவந்த 'அமிர்த பஜார்' பத்திரிக்கையின் உரிமத்தை பிரிட்டிஷ் அரசாங்கம் பறித்து விட்ட பின்பு இருபத்தினான்கு மணி நேரத்தில் மோதிலால் கோஷ் மற்றொரு பத்திரிக்கையை அரசாங்கத்தைத் தோற்கடிப்பது போன்று ஆரம்பித்தார். கேசரி இதழ் வெளிவந்ததும் எவருக்கும் இந்த நிகழ்ச்சிதான் நினைவுக்கு வரும். பிரபோதகன் என்ற பத்திரிக்கையின் ஆசிரியர் என்ற முறையில்

பிள்ளை நிர்வாக வேலைகளையும் கவனிக்க வேண்டியிருந்தது. ஆனால் கேசரி பத்திரிக்கை தோன்றியதும் அவரது அபிமானிகளில் சிலர், அவரை அம்மாதிரியான வேலைகளிலிருந்து விடுதலையளித்தனர். அவர்களுள் இளைஞர்களான சி. நாராயண பிள்ளை, கே.ஏ. தாமோதர மேனன், தகழி சிவசங்கர பிள்ளை, எம்.என். கோவிந்தன் நாயர், கே.பி. சங்கர மேனன் முக்கியமானவர்கள் இவர்கள் பிற்காலத்தில் இலக்கியத் துறையிலும், அரசியலிலும் புகழ்பெற்று விளங்கினர். எதிர்கால நூலாசிரியர்களை வளர்த்த கேசரி சதாஸ் (சங்கம்) தோன்றியது எனலாம். இதுபற்றி பிறகு கூறுவோம். கேசரியின் முதல் இதழில் அது பிரபோதகனின் தொடர்ச்சி என்ற குறிப்பே இல்லை. ஆனால் 'மாப்சான்' எழுதிய 'ஒரு பெண்ணின் வாழ்க்கை' என்ற நாவலின் மலையாள மொழி பெயர்ப்பு புதிய பத்திரிக்கையில் தொடர்ந்து வந்தது. பாலகிருஷ்ண பிள்ளை பத்திரிக்கையின் கொள்கை பற்றி முதல் இதழில் பின்வருமாறு எழுதினார்.

"வாழ்க்கைத் தத்துவங்கள், அரசியல் சமூகம், இலக்கியம் பற்றிய விவரங்கள், பயமின்றியும், விருப்பு வெறுப்பின்றியும் விவாதிக்கப்படும். செய்திகளைத் தருவதை விட, இலக்கியம், கலை, விஞ்ஞானம் பற்றிய செய்திகளைத் தரம் பார்ப்பதிலும், பரப்புவதிலும் கேசரி விருப்பம் கொண்டுள்ளது. இலக்கிய முன்னேற்றமும் கவனிக்கப்படும் .............. . கேரள மக்கள் மனப்பண்பாடு பெற வேண்டும் என்று நாம் உணர்கிறோம். அரசியலை விட, இலக்கியமும் பண்பாடும் சமமான முக்கியத்துவம் இப்பத்திரிக்கையில் தரப்படும். கேசரி, கேரளத்தை ஐக்கியமாக்குவதற்கு முயற்சியெடுக்கும் ............................"

முதல் இதழில் வெளிவந்த மிக முக்கியமான கட்டுரை வி.எஸ். சுப்பிரமணிய ஐயரின் திவான் உத்தியோக முறையைப் பற்றிய விமர்சனமாக இருந்தது. ஒரு பொறுப்புள்ள திருவாங்கூர் அரசாங்கத்தை மக்களுக்கு வழங்கும் பொறுப்பிலிருந்துத் தப்பிக்க முடியாத அதிகாரிகள் பற்றிய செய்திப் பகுதியும் அதிலிருந்தது. திவானை நீக்க எடுக்கப்படும் நடவடிக்கையை உருவாக்கும் நல்ல சூழ்நிலையைப் பற்றிய குறிப்பும் காணப்பட்டது. பாலகிருஷ்ண பிள்ளையின் தர்க்கரீதியான, தைரியமானத் தலையங்கங்கள் அரசாங்கத்தைத் திருத்தியமைக்கக் கூடிய நிலையை உருவாக்கின.

நாடு முழுவதும் மகாத்மா காந்தியின் தலைமையில் தேசிய சுதந்திரப் போராட்ட இயக்கம் வலு பெற்றுக் கொண்டிருந்தது. அப்போது இந்த நாட்கள் மிக முக்கியமானவைகளாக இருந்தன.

கேசரி பத்திரிக்கையும் தடங்கலில்லாமல் ஐந்தாண்டுகள் தொடர்ந்து வந்து கொண்டிருந்தது. இந்த நாட்களில் பாலகிருஷ்ண பிள்ளை எழுதின

கட்டுரைகள் மிகவும் ஜாக்கிரதையாகப் படிக்கப்பட்டன. அவைகளைப் படிப்போர் பிள்ளையவர்களை ஒரு பெரிய சீர்திருத்தவாதியெனவும், சமூக, அரசியல், இலக்கியம் ஆகிய துறைகளில் புரட்சியாளர் எனவும் நிச்சயம் ஏற்றுக் கொள்வார்கள். பிள்ளையவர்களின் சுருக்கென்று குத்தும் கட்டுரைகள் அவரது ராஜ்யத்துப் பிரச்சினைகளைப் பற்றியல்லாமல் உலகத்துப் பிரச்சினைகள் பற்றியும், மனித தத்துவம் பற்றியும் இருந்தன.

காந்தி – இர்வின் ஒப்பந்தத்துக்குப் பிறகு வெளிநாட்டுத் துணிகளைப் பகிஷ்கரித்தல் சட்டபூர்வமாக்கப்பட்டபோது திருவனந்தபுரத்தில் பல இடங்களில் மறியல் நடந்தது. அந்த ராஜ்யத்திலிருந்த மற்ற பத்திரிக்கையாசிரியர்கள் அது பற்றிக் கண்டு கொள்ளாமல் இருந்த போது, பாலகிருஷ்ண பிள்ளை தைரியமாக மறியல் நடத்தியவர்களை ஊக்குவித்தும் வாழ்த்தியும் தமது ஆதரவைத் தெரிவித்து எழுதினார். இளைஞரான ஸ்ரீசித்திரத் திருநாள் மகாராஜாவுக்கு சட்டம், மற்றும் அரசியலமைப்பின் ஆலோசகராக சர்.சி.பி. ராமசாமி ஐயர் நியமிக்கப்பட்ட போது, அதனை எதிர்த்து, ஏ.கே. பிள்ளையின் தலைமையில் ஒரு பொதுக் கூட்டம் நடந்தது. பாலகிருஷ்ண பிள்ளை அதற்கு ஏற்பாடு செய்தவர்களின் அரசியல் அறிவையும் திறமையையும் பாராட்டினார். மேலும் அவர் திருவாங்கூர் ராஜ்யத்தில் "ஆப்ஸ்டென்ஷன் மூவ்மென்ட்" என்ற இயக்கம் உருவாகக் காரணமாக இருந்தார் எனலாம். அந்த இயக்கம் சமகுடியுரிமையைப் பெற்றுத் தரும் என்று அவர் விளக்கினார். "ஆப்ஸ்டென்ஷன்" என்பதற்கு மலையாளத்தில் "நிவர்த்தனம்" என்ற வார்த்தை உருவாக்கப்பட்டது. அது ஒத்துழையாமை இயக்கம் போன்றது. வேலை செய்யாத நிலை என்று பொருள் கொள்ளப்பட்டது. சட்ட சபையிலும், அரசாங்க உத்தியோகத்திலும், சிறுபான்மையோருக்கும் பிற்படுத்தப்பட்டோருக்கும் போதுமான பிரதிநிதித்துவம் கோரும் இயக்கமாக அது விளங்கியது.

1931–ல் நேரு திருவனந்தபுரத்துக்கு வந்தபோது அவருக்குப் பொது மக்களாலும், அரசாங்கத்தாலும் இரண்டுவிதமாக வரவேற்பளிக்கப்பட்டது. இந்நிகழ்ச்சி பிள்ளைக்கு அரசாங்கத்தைக் கண்டிக்க ஒரு வாய்ப்பாக அமைந்தது. 1931–ம் ஆண்டு மே மாதம் 24–ம் நாள் நேருவும் அவரது மனைவியாரும் கன்யாகுமரிவழியாக, இரவு 9 மணிக்கு கோட்டை வாயிலிலிருந்து 2 கி.மீ. தூரத்திலிருந்த கில்லிபாலம் என்ற இடத்தை அடைந்தபோது பொதுமக்களால் அவர்களுக்கு உற்சாகமான வரவேற்பு அளிக்கப்பட்டது. கூட்டம் அதிகமாக இருந்ததால் அவரது கார் சாலை பஜார் வழியாகப் போக முடியவில்லை. எனவே நேருவும் அவர்களுடன் வந்தவர்களும் தங்களுடைய வரவேற்பாளரின் இடத்துக்கு நடந்து போகத் தீர்மானித்தனர். கூட்டமும் அவரைப் பின் தொடர்ந்தது. அவர் கிழக்குக் கோட்டை வாயலை அடைந்த போது திருவாங்கூர் பட்டாலியனைச்

சார்ந்த போர் வீரர்களால் கோட்டைப் பகுதியில் செல்ல முடியாதபடி, அவர்கள் தடுக்கப்பட்டனர். அப்போது இரவு மணி பதினொன்று. நேரு கோபமோ, வருத்தமோ படவில்லை. தன்பின்னால் வந்த பொதுமக்களின் இனிய உணர்வுகளுக்கு நன்றி கூறி அவர்களைக் கலைந்து போக வேண்டினார். அடுத்தநாள், மாநகராட்சி அவருக்குச் சிறப்பான வரவேற்பளித்தது. வரவேற்புப் பத்திரமும் வாசித்தளித்தது. நேரு, அவரது வருகையைத் தடுக்க ஏன் அவ்வளவு எண்ணிக்கையில் போர்வீரர்களைப் போட வேண்டும் என்று வியந்து கூறினார். அதனைச் செய்ய ஒருவர் போதுமே என்றார். இந்தச் செய்தி, பாலகிருஷ்ண பிள்ளையால் தமது பத்திரிக்கையில் வெளியிடப்பட்டது. இந்தியாவின் தவப்புதல்வரை இப்படி அவமானப்படுத்திய அரசாங்கத்தை அவர் மிகவும் கண்டித்தார்.

பாலகிருஷ்ண பிள்ளை தமது பத்திரிக்கையில் அந்த ராஜ்யத்திலிருந்த பல வகைப்பட்ட மக்களின் வாழ்க்கை முறைபற்றி வினாவியும், அவர்கள் எப்படி நல்ல முறையில் தங்களது வாழ்க்கையை அமைத்துக் கொள்ளலாம் என்பதையும் தமது பத்திரிக்கையில் எழுதினார். அந்த ராஜ்யத்தின் சட்டசபையில் "நாயர் ரெகுலேஷன்" பற்றிய விவாதம் நடந்த போது அவர் திருமணம், மணமுறிவு பற்றிய விஷயங்களைத் தமது பத்திரிக்கையில் எழுதினார். அவர் தாய்வழி முறைக்கு எதிரான கொள்கையுடையவர். "பிள்ளையைப் பெற்றெடுக்கும் உரிமை" என்ற தலைப்பில் 1934–லேயே அவர் கர்பத்தடையை ஆதரித்தார். 1930–ல் வெளிவந்த ஜனத்தொகை பற்றிய கணக்கெடுப்பை ஆதாரமாகக் கொண்டு தமது வாதத்தை முன்வைத்தார். செயற்கைமுறையில் பிறப்பைத் தடுக்க முயற்சிக்காவிட்டால் ஆரோக்கியம், மகிழ்ச்சி நிறைந்த வாழ்வைப் பெற முடியாது என்று எழுதினார். இது அந்த நாளில் புரட்சிகரமானதாகக் கருதப்பட்டது. மகாத்மாக்களால் மட்டுமே முடியக்கூடிய சுயக்கட்டுப்பாடு, நடைமுறைக்கு ஏற்றதன்று என அவர் வாதிட்டார். ஏழைப் பெற்றோர்களுக்கு அதிகமான குழந்தைகள் பிறக்கின்றன. அவர்களுக்கு சுயக்கட்டுப்பாடு தேவை என்று போதிப்பவர்களுக்கு மனோதத்துவம் பற்றி புரியாது என்றார். பரோபகாரியான அவரது அடிமனதில் மக்களின் நலம் பற்றிய எண்ணமே இருந்தது.

பிள்ளையவர்கள் நாயர் வகுப்பைச் சேர்ந்தவர். அந்த வகுப்பைச் சார்ந்தவர்கள் பிள்ளையவர்கள் "ஆப்ஸ்டென்ஷன் மூவ்மென்டை" ஆதரித்து எழுதியதால் அவர் மீது கோபங்கொண்டனர். அந்த இயக்கம் அவர்களது சமூக வளர்ச்சிக்கு எதிரானது என்று அவர்கள் கருதினார்கள். அதனால் அவருடைய பத்திரிக்கைக்கு அவர்கள் சந்தா கட்டவில்லை. எனவே பிள்ளை பல சந்தாதாரர்களை இழக்க நேரிட்டது. பொருளாதாரக் கஷ்டங்களுக்கிடையில் அவர் பத்திரிக்கையைத் தொடர்ந்து நடத்தினார்.

ஒருசமயம், அவர் பத்திரிக்கை நடத்த வேண்டி, 2000 ரூபாய்க்குத் தனது அச்சகத்தை அடகுவைக்க நேரிட்டது. இதுப்பற்றி அவரது மனைவி கீழ்கண்ட விவரத்தைத் தருகிறார்.

"அதிகாரிகள் கேசரி பத்திரிக்கைக்குச் சந்தா செலுத்தப் பயப்படுகின்றனர். ஏனென்றால் அது அரசாங்கத்துக்கு எதிராக இருக்கிறது. "ஆப்ஸ்டென்ஷன் மூவ்மென்டை" ஆதரித்ததால் நாயர் வகுப்பினர் பத்திரிக்கையை ஆதரிக்கவில்லை. எனவே பணக்கஷ்டத்தை அவர் முழுவதுமாக ஏற்கவேண்டியிருந்தது. பகல் பூராவும் செய்திகள் தயாரிப்பதில் செலவழிந்தது. இரவில் பிழைதிருத்தம், மற்ற வேலைகள் ஆகியவற்றிலிருந்து நேரம் சரியாக இருந்தது. அடிக்கடி ஏற்படும் ஆஸ்துமா நோயும், புளூரசி நோயும் அவரைப் படுக்கையில் அவ்வப்போது கிடத்திவிடும். படுக்கையில் இருந்தாலும் அவர் பத்திரிக்கைக்கான விஷயங்களை எழுதுவார். அந்த நேரங்களில் எங்களுக்குச் சரியாகச் சாப்பிடக் கூட முடியாமல் போய்விடும். என்றாலும் பத்திரிக்கை தொடர்ந்து வெளிவந்தது."

அரசாங்கம், ஒருவர், மற்றவருக்கு தனது உரிமத்தை விற்க, ஆயிரம் ரூபாய் கட்ட வேண்டும் என்ற விநோத உத்திரவை ஒப்புக் கொண்டது. பாலகிருஷ்ண பிள்ளையைத் தண்டிக்க வேண்டும் என்பதே அதன் முக்கிய நோக்கம். அரசாங்கத்தின் நீதியற்ற இந்த உத்தரவுக்கு எதிர்ப்பு தெரிவிக்க அவர் கேசரி பத்திரிக்கையை நிறுத்திவிடத் தீர்மானித்தார். நண்பர்களிடமிருந்து பணம் சேகரித்துப் பத்திரிக்கையை நடத்துமாறு சிலர் யோசனை கூறினர். அது கஷ்டமான காரியம் அல்ல. ஆனால் இம்மாதிரி செய்வதற்கு அவர் விரும்பவில்லை. ஏனென்றால் அரசாங்கம், அவரது கழுத்தை நெறிக்க இம்மாதிரியான மற்றொரு உத்திரவைப் போடும் என்பதை அவர் அறிவார்.

இது பற்றி சி. நாராயண பிள்ளை பின்வருமாறு சொன்னார்: "பாலகிருஷ்ண பிள்ளை பிரச்சினைகளை அரசியல் வாதிபோலல்லாமல், படிப்பாளி, சிந்தனையாளர் போல் அணுகுவார், அரசியல்வாதிபோன்று அவர் வாய்ப்பேச்சில் வல்லவர் இல்லை. பேனாதான் அவரது பலமான ஆயுதம். அவரது உறுதியை, உலகத்தில் உள்ள எந்தச் சக்தியாலும் சிறிதுகூட அசைக்க முடியாது."

பத்திரிக்கை ஆசிரியர் வேலையை விட்டு விட்ட பிறகு அவர் அரசியலை விட்டு விட்டார். அவர் தமது "கேசரி" பத்திரிக்கையை "பிரபோதகனுக்கு" மேலாக நேசித்தார். அவர், அதை, ஐந்தாண்டுகள் நடத்தினாலும், தாம் இறக்கும் வரையில் "கேசரி பாலகிருஷ்ண பிள்ளை"

என்று தம்மை அழைத்துக் கொள்ளும் அளவுக்குப் பொதுமக்களிடையே தனது புகழை நிலை நாட்டியிருந்தார். கேரளத்தில் மூன்று பேர்கள்தான், அவர்கள் நடத்திய பத்திரிக்கைப் பெயர்களுடன் அவர்களது பெயர்களையும் இணைத்துக் கொண்டவர்கள். "சுவதேசாபிமானி ராமகிருஷ்ண பிள்ளை", "சகோதரன் ஐயப்பன்", "மித்தாவாதி கிருஷ்ணன்" என்பவர்களே அவர்கள். மலையாளப் பத்திரிக்கையாளர் மத்தியிலும், விமர்சகர்களிடையேயும், பாலகிருஷ்ண பிள்ளையை, "கேசரி" என்ற ஒரே வார்த்தையால் குறிப்பிடும் வழக்கம் இருந்தது.

### மற்ற இதழ்களுக்கு எழுதுதல்:

பாலகிருஷ்ண பிள்ளை ஆங்கில இதழ்களுக்கும் தன்னுடைய படைப்புகளை அனுப்புவார். அவரது ஆங்கிலப் புலமையை வெளிப்படுத்த, அவர் எழுதியவற்றிலிருந்து சில பாகங்களை இங்கே தருகிறோம். 'ஸ்வராஜ்யா' என்ற பத்திரிக்கையில் வெளிவந்த சில பகுதிகள்:

திருவாங்கூரின் கொடுங்கோலன்,
அரசியல் பிரதிநிதியைத் திருப்பியழைக்கவும்.

"திருவாங்கூர் அரசியல் பிரதிநிதியின் அதிகாரம் அதிகமாகியிருக்கிறது. அதிகமாகிக் கொண்டே இருக்கிறது. அது குறைக்கப்படவேண்டும். தற்போதுள்ள சூழ்நிலையில், தேசபக்தியும், சிந்தனையும் கொண்ட திருவாங்கூர்வாசி, – தீவிரவாதியானாலும், மிதவாதியானாலும், அல்லது தாராளமனப்பான்மை கொண்டவராக இருந்தாலும், அவரது அடிமனதில் அடக்கிவைக்கப்பட்டிருக்கும் விஷயம் இது. ரஷ்யாவின் ஜார்மன்னராக இருந்த ரோமனோவ்வின் செழுமையான காலத்தில் இருந்த சர்வாதிகாரம் கூட தற்போது திருவாங்கூரில் இருக்கும் அரசியல் பிரதிநிதியின் அடக்குமுறைகளை விட அதிகமாயிருந்ததில்லை. தற்போது திருவாங்கூரில் அரசியல் பிரதிநிதியாக இருக்கும் திரு. காட்டன், திறமைக்கும், பேராசைக்கும் சூரியனைப் போல் தனியாக ஆள வேண்டும் என்ற எண்ணத்திற்கும் பேர்போனவர். அவரது மிகப்பெரிய ஆசைகளினால், ராஜ்யத்தில் நடக்கும் எல்லாவிவகாரங்களிலும் அவர் தலையிடுகிறார். அவருடைய தற்பெருமையுடன் கூடிய பேராசையால் அவர் அரசின் பக்கத்தில் யாரையும் நெருங்கவிடுவதில்லை. எவரையும் பொறுத்துக் கொள்ள அவருடைய அகங்காரம் அவரை விடுவதில்லை. ஆனால் அடிமைகளும், புகழ்ந்து பேசுபவர்களும் அவரது அருகில் உள்ளனர். அவரது ராஜதந்திரத்தால் ஒரு கட்சியினருக்கும்,

மற்றவருக்கும் இடையே பகையை மூட்டி, அதன் மூலம் தனக்கு வேண்டியதைப் பெறுகிறார். ஆனால் சம்பந்தமில்லாத விஷயங்களில் அவர் கூறும் புத்திமதிகளை, எதிர்த்துப் பேச முடியாத அளவுக்குப் பலவீனமாக, தூய்மையான நல்ல குணம் கொண்ட மகாராணி இருக்கிறார்."

ராஜப்பிரதிநிதி பற்றிய வசைமாரி தொடர்ந்து செல்கிறது. திவானின் திருவிளையாடல்களை முழுவதுமாகக் கூறிவந்த கட்டுரை பின்வருமாறு முடிகிறது:

"எனவே திரு. காட்டன் அவர்களைத் திருப்பி அழைத்துக் கொள்ளுதல் மிகவும் அவசியமாகிறது. இந்திய அரசாங்கம் இதனை எவ்வளவு சீக்கிரம் செய்ய முடியுமோ அவ்வளவு சீக்கிரம் செய்யும் என்று நம்புகிறோம். இதனால் திருவாங்கூர் மக்களின் நன்றி இந்திய அரசுக்கு உரித்தாகும்".

இதுவரையிலும் பாலகிருஷ்ண பிள்ளை கூர்மையான பேனாவையுடைய அரசியல் எழுத்தாளர், பத்திரிக்கை ஆசிரியர் என்ற கண் கொண்டு பார்த்தோம். ஆனால் அவர் ஒரு சுயசிந்தனையாளரும், படிப்பாளியும் கூட. 1929–ம் ஆண்டு டிசம்பர் மாதம் 17–ம் நாளன்று திருவாங்கூரில் நடந்த "இளைஞர் அவையின்" தொடக்க விழாவில் அவர் மிகவும் சிறப்பாகப் பேசினார். "இளைஞர்களுக்குத் தலைமைப் பதவி" என்பதே அவர் அன்று பேசிய பேச்சின் தலைப்பு. முதலில் தர்க்க ரீதியில் அவர் இளைஞர் என்போர் யார் என்று விளக்கினார். பின்பு, இளைஞர் அவை, மன உடல் வளர்ச்சி, பொருளாதார மறு உற்பத்தி, சமூக சமத்துவம், மதுவிலக்கு, ரசிகத்தன்மையின் வளர்ச்சி, என்று பல விஷயங்களைக் கோர்வை படுத்திப் பேசினார்.

இப்போது அவர் தமது பேச்சை எப்படி ஆரம்பித்தார் என்பதையும் 'இளைஞர்' என்பதற்கு என்ன விளக்கம் கொடுத்தார் என்பதையும் காணலாம்:

"இந்நாட்டின் எதிர்காலம் இளைஞர்கள் கையிலே இருக்கிறது. சீனநாடு இதற்கு உதாரணம். "இளைஞர்" என்றால் என்ன? நீங்கள் அதற்குக் கீழ் வயது வரம்பைப் பதினாறு என்று நிர்ணயித்து வெகு புத்திசாலித்தனமாக மேல் வரம்பை விட்டு விட்டீர்கள். மனத்தளவில் இளைஞராக இருக்கும் ஆண், பெண் யாவரும் உங்களது "இளைஞர் அவையில்" சேர்த்துக் கொள்ளப்படுவர். அப்படி மனப்பக்குவம் இல்லாதவர்கள் நீக்கப்படுவர். இளைஞர் என்பவரின் சால்புகள் எவை? – சக்தி, முன்னேற்றம், விரைவான வளர்ச்சி, உணர்ச்சி

> வசப்படுதல், மதக் கொள்கை, மற்றவர் பற்றிய நினைப்பு, விளம்பரத்தில் விருப்பம், பச்சாதாபம், சரி என்று தோன்றியதைச் செய்தல், வயது வந்தபோது ஏற்படும் இயற்கையான பாலுணர்வு, தவறு என்று மற்றவர் நினைக்கும் இளைஞர் செய்யும் பாவங்கள் – ஆகியவைகள் தான். 'பிரெஞ்சுப் புரட்சியின் வரலாறு' என்ற நூலை எழுதிய டைன் என்பவர் இளைஞர்களின் புரட்சி மனப்பான்மைக்கான காரணங்களை விளக்குகிறார். இளைஞர்களது ஒப்புதலின்றி அமைக்கப்பட்ட, சமூக அமைப்பின் குளறுபடிகள், அதிகார வர்க்க அமைப்பு முதலியன அப்புரட்சிகளுக்குக் காரணங்களாகின்றன. இளைஞரைத் தர்க்க ரீதியில் காண டைன் தவறி விட்டார். அவர்கள் உண்மையில் விஷயங்களைத் தர்க்க ரீதியில் அறியாதவர்கள். தர்க்கம் நல்ல விஷயங்களை வெறுப்பாக்கி விட்டு விடும். இளைஞருக்கு மனம் இருக்கிறது. அதன் மீதுதான் இளைஞர்களின் போராட்ட எண்ணமும், சமூகத்தின் மதிப்பீடும் அமைக்கப்பட்டுள்ளன. எல்லாவிதமானப் பெரிய விஷயங்களும் மன உணர்ச்சியின் விளைவால் வெளிவருபவைகளே."

இந்தச் சிறிய விளக்கத்திலிருந்து பாலகிருஷ்ண பிள்ளைக்கிருக்கிற விஷய ஞானத்தை அறியலாம். பெரும் சிந்தனையாளர்களின் கொள்கைகளைக் கூட அவர் எதிர்த்தார். அவரது சுயசிந்தனைப் போக்கே இதற்குக் காரணம்.

அவரது கற்பனைத்திறத்தின் அளவை அறிய "பொருளாதார புனருத்தாரணம்" என்ற தலைப்பில் அவரால் வாதிக்கப்பட்ட விஷயத்தின் ஒரு பகுதி இங்கே கொடுக்கப்பட்டிருக்கிறது:

> "அடுத்த விஷயமான பொருளாதார புனருத்தாரணத்தை நோக்கும்போது, நமது பொருளாதார மீட்பு நம்முடைய கயிறு, கதர், குடும்பக்கட்டுப்பாடு ஆகியவற்றைப் பொறுத்துள்ளது எனலாம். விவசாயமே மீட்புக்கு வழியென்பதில் எனக்கு நம்பிக்கையில்லை. முதலாளித்துவ தத்துவப்படி, கடன்படும் நிலை, திவால் ஆகும் நிலையைக் கொண்ட ஏதாவது ஒரு தொழில் அல்லது வியாபாரம் போன்று விவசாயம் இல்லை. வேண்டுமானால் விவசாயத்தில் அதிகமாக உழைக்கலாம். கேரளத்தில் கதர்த் தொழிலைவிட கயிறு தொழில் முக்கியமானது. உலகச் சந்தையில் இத்தொழில் தனி உரிமம் பெற்றுள்ளது. கேரளத்தில் உள்ள ஒவ்வொரு வீட்டிலும் இத்தொழிலைச் செய்ய வசதி இருக்கிறது. ஜப்பானையும், ஸ்விட்ஜர்லாந்தையும் இங்கு உதாரணத்துக்கு எடுத்துக்

கொள்ளுங்கள். உங்களுக்காக ஒரு வங்கியை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். ஜப்பானுக்கும், ஸ்விட்ஜர்லாந்துக்கும் போய் அறிந்து வர உங்கள் உறுப்பினர்களுக்கு அந்த வங்கி மூலம் கடன் கொடுங்கள்............................... . உழைக்கும் மக்களின் நிலையை உயர்த்துங்கள். – முயற்சி செய்யுங்கள். முடிந்தவரையில் அரசாங்க உத்தியோகத்துக்குப் போகாதீர்கள். அந்த வேலை பொருளாதார ரீதியிலும், ஒழுக்க ரீதியிலும் உங்களை அழித்து விடும்."

இவைகளெல்லாம் 1929–ல் பிள்ளையவர்களுக்கு நாற்பது வயதாகும் போது அவரால் எழுதப்பட்டவையாகும். எனவே அவரது எண்ணங்கள் இருபத்தைந்து ஆண்டுகள் முன்னோக்கியிருந்தன என்றால் அது பெரிதுபடுத்திக் கூறிய கூற்று இல்லை. அவர் அப்படிப்பட்ட சிந்தனையாளரும், பத்திரிக்கை ஆசிரியரும் ஆவார்.

## 4. எழுத்தாளரும் விமர்சகரும்.

முந்தைய அத்தியாயத்தில் பாலகிருஷ்ண பிள்ளைக்கு வாழ்க்கையின் தொழிலாக இலக்கியமும், பத்திரிக்கைத் துறையும் இருந்தன என்று கண்டோம். அவர் அந்த இரு துறைகளிலும் முன்னேற்றமும், புரட்சிகரமும் கொண்ட கொள்கைகளைப் புகுத்தினார் என்பதையும் அறிவோம். மற்றபடி அவர் ஆசிரியராக வாழ்க்கையைத் தொடங்கி, பின்பு சிலகாலம் சட்டத்துறையில் இருந்தார் என்றும் பார்த்தோம். அவர் வழக்கறிஞர் தொழிலிலிருந்து பத்திரிக்கைத் துறைக்கு வந்த போது ஒருவிதமான நிம்மதி அவருக்கு ஏற்பட்டது. அவரது பத்திரிக்கை ஆசிரியர் வாழ்க்கை திடீரென்று முடிவுக்கு வந்ததற்குக் காரணம் அவரது தொழிலில் அவருக்கேற்பட்ட வெறுப்பல்ல, ஆனால் அவரது கனவுகள் தொடர்ந்து சித்தி பெறாமல் போனதேயாகும். "சமதர்சி" க்குப் பிறகு "பிரபோதகன்" என்ற பத்திரிக்கையை நடத்தினார். பிறகு சொந்தமாக "கேசரி" என்ற பத்திரிக்கையை நடத்தினார். ஆனால் அவர் ஒரு மூன்றாம் மனிதரை, எரிச்சலூட்டுவதும் துன்பப்படுத்துவதுமான பத்திரிக்கைத் துறையில் சிக்கவைக்க விரும்பவில்லை. என்னதான் தர்க்க ரீதியிலும் நியாயமாகவும் எழுதினாலும் அரசாங்கம், அதனைக் குறை கூறும் பத்திரிக்கைகளை நசுக்குவதிலேயே குறியாக இருந்தது. கடைசியில் எழுத்துச் சுதந்திரமே கேள்விக் குறியாகிவிடுகிறது. அவரது அநேக நண்பர்கள் பத்திரிக்கை நடத்தப் பணம் கொடுக்க முன்வந்தனர். ஆனால் கேசரியோ நண்பர்களின் தயவில் கண்டனக் குரல் எழுப்ப விரும்பவில்லை. அரசாங்கமும் அப்படிப்பட்ட பத்திரிக்கைகளை நசுக்கத் தருணம் பார்த்துக் கொண்டிருந்தது. "மலையாள மனோரமா"வின் ஆசிரியரும் உரிமையாளருமான கே.சி. மாம்மென் மாப்பிள்ளை, அவரைத் தமது பத்திரிக்கையின் திருவனந்தபுரம் நிரூபராக செயல்பட வேண்டினார். அது நல்ல வருமானத்தைக் கொடுக்கும். ஆனால் பிள்ளையவர்களின் கொள்கைகளுக்கு அந்தப் பத்திரிக்கையின் செயற்திட்டங்கள் எந்த அளவுக்கு ஒத்துப்போகும் என்று அவருக்குத் தெரியாது. எனவே நீண்ட ஆலோசனைக்குப் பிறகு பத்திரிக்கைத் தொழிலுக்கே முழுக்குப் போடப் பிள்ளையவர்கள் தீர்மானித்தார். அவரது சக்தி முழுவதையும் தமது மற்றொரு காதலியான இலக்கியத் துறையில் செலுத்த முனைந்தார்.

அந்தக் காலத்தில் பத்திரிக்கை நடத்துவது லாபகரமான தொழில் அல்ல. ஆரம்ப காலத்தில் மிகவும் கஷ்டம் சந்தாதாரர்களைச் சேர்க்க வேண்டும். விளம்பரங்களும் குறைவாகவே இருக்கும். கேசரியின் உரிமையாளரும் ஆசிரியருமான பாலகிருஷ்ண பிள்ளை, காகிதம் வாங்கவும், தொழிலாளர்களுக்குச் சம்பளம் கொடுக்கவும், கடன் வாங்க வேண்டியிருந்தது. அச்சக வேலையைச் செய்வதின் மூலம் மட்டும், அச்சகத்தை நஷ்டமின்றி நடத்த முடியாது. ஆகவே அவர் சாரதா அச்சகத்தை விற்று விடத் தீர்மானித்தார். அது சுலபத்தில் முடிந்ததும் அவர் தமது கடன்களைத் தீர்த்து விட்டார், கணக்கொல்லாம் தீர்ந்து மூன்று நாட்களாயின, அப்போது அவரது நண்பர் கே.பி. சங்கரமேனன் அவரைக் காண வந்தார். அவர் மேனனிடம் "எனக்கும் பட்டினிக்கும்" இன்னும் ஐம்பது ரூபாய் பாக்கியிருக்கிறது" என்று உள்ளர்த்தம் தொனிக்கக் கூறினார். பின்பு தமது இருப்பிடத்தையும் அச்சகத்திற்குப் பக்கத்திலிருந்த சிறிய வீட்டிற்கு மாற்றி விட்டார்.

கேசரி பாலகிருஷ்ண பிள்ளை சிறிய வீட்டில் தான் குடியிருந்தார். ஆனால் தனிமையாகக் கைவிடப் படவில்லை. முன்பு மாதிரி அதிகம் பேர் அவரைக் காண வருவதில்லை. அவர் அரசாங்கத்துக்கு எதிராக இருந்ததால் அடிக்கடி பார்க்க வருபவர்களில் அநேகம் பேர் இப்போது வருவதை நிறுத்திவிட்டனர். அவர் பத்திரிக்கை நடத்திய ஏழு ஆண்டுகளில், மிகவும் புகழ்பெற்று விட்டார் பத்திரிக்கையின் பலம் இதுதான். அவர் எப்படிப்பட்ட பத்திரிக்கையின் ஆசிரியர்? அவர் நடத்திய பத்திரிக்கையின் தரந்தான் என்ன?

அவரது அரசியல், சமூக அந்தஸ்து கோணம் பற்றியும் அவைகளை அவர் விமர்சனம் செய்யும் விதம் பற்றியும் நாம் முன்பே பார்த்தோம். அரசியல் சமூகம் பற்றி மட்டும் எழுதிய பத்திரிக்கை ஆசிரியர் அவர் அல்ல. இலக்கியம், கலை, வரலாறு, பண்பாடு ஆகியவைகளில் அவர் ஈடுபாடு கொண்டவர். முன்னேற்ற எண்ணமும் சிந்தனையும் கொண்ட பத்திரிக்கை ஆசிரியர். அவர் ஆசிரியராக இருந்த பத்திரிக்கைகளில் இவைகளைப் பற்றிய கருத்தாழங் கொண்ட கட்டுரைகளை வெளியிட்டார். உலகில் புதுமையான கருத்துக்கள் எங்கிருந்தாலும் அவைகளைக் கவர்ந்து இழுத்துக் கொள்ளும் ஆற்றல் கொண்டவர். மறுமலர்சிக் கனிகள் அதிகமாக இருந்த மேற்கத்திய நாடுகளின்மீது அவரது நாட்டம் இருந்தது. அவர் குறிப்பாக ஃபிரெஞ்சு இலக்கியங்களிலும், புகழ்பெற்ற ஃபிரெஞ்சு பத்திரிக்கைகளிலும் அவரது கவனத்தைச் செலுத்தினார். அவர் மாணவராக இருந்தபோதே அவர் ஃபிரெஞ்சு பத்திரிக்கைகளிலும் அவரது கவனத்தைச் செலுத்தினார். அவர் மாணவராக இருந்தபோதே அவர் ஃபிரெஞ்சு நூல்களால் கவரப்பட்டதை நாம் அறிவோம். பிற்காலத்தில் ஃபிரெஞ்சு இலக்கியத்தில் இருந்த மோகம் அதிகமாயிற்று. பத்திரிக்கை

ஆசிரியர் என்று பாலகிருஷ்ண பிள்ளையை அழைக்கும்போது அந்த வார்த்தைக்கு ஒரு தனிப் பெருமை இருந்தது. அவருக்குத் தினசரி நடக்கும் விஷயங்களில் மட்டும் ஈடுபாடு இருந்ததில்லை. இந்திய எதிர்காலம் பற்றியும் அவர் அக்கறை கொண்டிருந்தார். குறிப்பாக அவரது மொழியான மலையாளத்தைப் பேசுகிறவர்கள் பற்றியும் சிரத்தை கொண்டிருந்தார். மக்களிடையே சமத்துவம், நல்வாழ்வு, முன்னேற்றம் ஆகியவை ஏற்பட வேண்டும் என்பதில் அவர் முனைப்பாக இருந்தார். இவைகளுக்காகப் பத்திரிக்கை எழுத்துக்களும், இலக்கிய எழுத்துக்களும் பயன்பட வேண்டும் என்பது அவரது கொள்கை. இவைகள் தான் அதிக நாட்கள் மக்கள் மத்தியில் இருப்பவை. எனவே அவரது பத்திரிக்கையில் நல்ல கட்டுரைகளை வேண்டிய அளவில் பிரசுரித்தார். அதேபோல் எழுச்சியூட்டும் இலக்கிய சிந்தனைகளும் வெளியிடப்பட்டன. இவைகளெல்லாம் எதிர்காலச் சந்ததியார்களுக்குப் பயன்பட வேண்டி நூல்களாக வெளியிடப்பட்டன. அவைகளெல்லாம் நன்றாக மெல்லப்பட்டு, ஜீரணிக்கப்பட வேண்டிய நூல்கள். அவரது பேனாவும் வேண்டிய அளவில் எழுதிக் குவித்தது. தமது தலையங்கக் கட்டுரைகளில், பிளேட்டோ, ஃபிராய்டு, ஊங் ஆகியோரது கருத்துக்களை மேற்கோளாகக் காட்டி அவர் எழுதினார். உலகில் நடக்கும் முக்கிய நிகழ்ச்சிகளையும், புதுக்கருத்துக்களையும் அவைகளது விளைவுகளையும் தமது பத்திரிக்கையில் குறிப்பிட்டுக் காட்டுவார். எனவே பத்திரிக்கைத் துறையிலிருந்து மாறி, இலக்கியம் செய்திப் படைப்பு, விமர்சனம், ஆகியவை பற்றி எழுதுவது பாலகிருஷ்ண பிள்ளைக்கு இயற்கையானதொன்றாக இருந்தது.

அவருடைய எழுத்துக்களில் 'சமத்துவ உணர்வு' பிரதிபலித்தது. அது அவரது வாழ்வில் ஒன்றிவிட்டதொன்று. மதம் எதுவானாலும், ஜாதி எதுவானாலும், தொழில் எதுவானாலும், மனிதர் என்ற முறையில் எல்லாரும் சமமே. அவர் அடிப்படையில் ஒரு மனிதநேயவாதி. அக்காலத்தில் கேரளத்தில் இம்மாதிரியான அணுகுமுறையில் மக்களைக் கவர முயற்சிப்பது தேவையற்றதாக இருந்தது. உதாரணத்துக்கு, இளையவரான மகாராஜா ஸ்ரீசித்திர திருநாள் அவர்களது கவனத்தைக் கவர வேண்டி பாலகிருஷ்ண பிள்ளை எழுதிய கட்டுரையை இங்குக் குறிப்பிடுகிறோம்.

> "இங்கிலாந்து நாட்டின் எட்டாம் எட்வர்ட் அரசர் பயப்பக்தியுடன் தன்னைக் காணவந்த ஒருவரைப் பார்த்து "இதுதான் ஜான் பர்ன்ஸ் (லேபர் கட்சித் தலைவர்) வழக்கமாக உட்காரும் நாற்காலி" என்று சொன்னார். அதே போல் நம்முடைய ஸ்ரீசித்திர திருநாள் அரசரும் தம்மைக் காண வரும் எளிமையானவர்களுக்கு "இதோபாருங்கள் இதுதான் புலையர்களின் தலைவர் ஐயன்கலி உட்கார்ந்த நாற்காலி"

என்று காட்டிப் பேச முடிந்தால், சீரழிக்கும் பழக்க வழக்கங்கள் நீக்கப்பட்டு விடும்".

இது மாதிரி தைரியமுள்ள பத்திரிக்கை ஆசிரியர்களை எங்கும், எப்போதும் காண்பதரிது. பாலகிருஷ்ண பிள்ளை ஓர் ஒப்பற்ற மனிதர் என்பதால் அவர் ஓர் ஒப்பற்ற பத்திரிக்கை ஆசிரியராகவும் எழுத்தாளராகவும் விளங்கினார். தமது வாழ்க்கை முறையில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்திக் கொண்டபோது அவருக்கு வயது நாற்பத்தைந்து தான். இதற்குள் அவர் பதினாறு நூல்கள் எழுதிவிட்டார். அவைகளில் பெரும் பான்மை இளைஞருக்குத் தேவையான வாழ்க்கை வரலாற்று நூல்களாகவும், வரலாற்று நூல்களாகவும் இருந்தன.

இலக்கிய நோக்கங்கொண்ட மூன்று அல்லது நான்கு, நூல்கள் அவற்றில் அடங்கும். அவைகளில் ஒன்று காமுகன் (1931) என்ற தலைப்பில் வெளியிடப்பட்ட மாப்சானின் பெல்—அமி என்ற மலையாள மொழிபெயர்ப்பு நூலாகும். மற்றொன்று, பிராஸ்பர் மெரிமே எழுதிய கார்மென் (1833) என்ற மொழிபெயர்ப்பு நூல். "நவலோகம்" (1935—புது உலகம்) என்ற நூலும் முக்கியமானது. எப்படி இருந்த போதிலும் பாலகிருஷ்ண பிள்ளை அடுத்த இருபத்தைந்து ஆண்டுகளில் பதினெட்டு முக்கிய நூல்களையும் அநேக கட்டுரைகளையும் எழுதிப் பிரசுரித்தார். அவைகளை நெருக்கமாகப் பார்ப்பதற்கு முன் அவரது எழுத்துத் துறையின் முக்கிய நிலை பற்றிக் குறிப்பிட வேண்டும். அதுவே ஓர் இலக்கியக் குழுவாக விளங்கியது. அதற்கு முக்கியமான தூண்டுகோலும் அவரே.

## கேசரி குழு:

பாலகிருஷ்ண பிள்ளை 'பிரபோதகன்' பத்திரிக்கையின் ஆசிரியராக இருந்தபோது அவரது அலுவலகத்தில் அவருக்கு உதவியாக இருவர் இருந்தனர். எனவே, பிழைதிருத்தம் செய்யவும், விஷயங்களைத் தயாரிக்கவும், செய்திகளை மொழிபெயர்க்கவும், ஆசிரியர் இரவு வெகு நேரம் வேலை செய்ய வேண்டியிருந்தது. ஆனால் தமது சொந்தப் பத்திரிக்கையான 'கேசரி' அச்சாகும் போது அவரது உதவியாளர் விஷயத்தில் பெருத்த மாற்றம் ஏற்பட்டது. ஒவ்வொரு மாலையும், நன்கு படித்த இளைஞர்கள் ஆசிரியரிடம் வருவார்கள். அவர்களில் சிலர் வளரும் கவிஞர்கள், மற்றுஞ் சிலர் இலக்கியம் பண்பாடு ஆகிய துறைகளில் ஆர்வமுடையவர்கள். இன்னும் சிலர் கல்லூரி மாணவர்கள். எனவே எல்லாரும் தங்களுடைய அறிவை விருத்தி செய்துக் கொள்வதில் ஆர்வமுடையவர்களாக இருந்தனர். தங்களது நண்பரும் வழிகாட்டியுமாக இருந்த ஆசிரியருக்கு உதவுவதிலும், அதனால் இலக்கியத்தை அனுபவிப்பதிலும் அவர்கள் ஊக்கமாயிருந்தனர். அவர்களில் சிலர் பிற்காலத்தில் நூலாசிரியர்களாகவும் பொது ஜன சேவகர்களாகவும்

ஆயினர். மாலையில் அவர்கள் எல்லாரும் பாலகிருஷ்ண பிள்ளை முன்பு கூடி, கலை, இலக்கியம், கல்வி, பண்பாடு முதலியனபற்றி அவரது அறிவுரைகளைக் கேட்பார்கள். இந்தத் தோழமை உணர்வுக் கூட்டம் "கேசரி குழு" என்று அழைக்கப்பட்டது. இப்படிப்பட்ட சந்திப்புமுறை இங்கிலாந்தில், டாக்டர் ஜான்சன் அவர்களைச் சுற்றியிருந்த கூட்டம் போன்றும், அல்லது கேம்பிரிட்ஜில் இருந்த "புளூம்ஸ்பரி" கூட்டம் போன்றும் காணப்பட்டது. அவர்கள் ஒன்று கூடி பலதரப்பட்ட விஷயங்களை விவாதித்தனர். இலக்கியம், கலை, பண்பாடு, அரசியல், விஞ்ஞானம், என்ற பலதரப்பட்ட விஷயங்கள் விவாதிக்கப்பட்டன. பாலகிருஷ்ண பிள்ளை பலதரப்பட்ட கருத்துக்களை வரவேற்று அந்தந்த குழுக்களுக்கு ஏற்ற அறிவுரைகளை வழங்கினார். மற்றவர்களிடமிருந்த திறமையைக் கண்டறியும் தன்மை அவருக்கு இயல்பாக வே இருந்தது. எனவே அவர், அவர்களது திறமைகளை வளர்த்துக் கொள்வதில் உதவி புரிய முடிந்தது. அவர்களுக்கு ஐரோப்பிய மொழி இலக்கியங்களை அறிமுகப்படுத்தினார். அவர்களது எழுத்துத் துறையில் அவர்கள் முன்னேற அவர் ஆவன செய்தார்.

புகழ்பெற்ற மலையாள எழுத்தாளரும் விமர்சகருமான சி. நாராயண பிள்ளை, "மாத்ரு பூமி" ஆசிரியரும், அரசியல்வாதியும், கேரள அரசாங்க மந்திரியுமாக இருந்தவரான கே.ஏ. தாமோதர மேனன், "சிந்தரமான்" என்ற புனைப் பெயரில் கவிதைகள் எழுதிய பி.ஸ்ரீதரன் பிள்ளை, வழக்கறிஞரும், எழுத்தாளருமான எம்.என். கோவிந்தன் நாயர், பாலகிருஷ்ண பிள்ளையின் வாழ்க்கை வரலாற்றை எழுதிய கே.பி. சங்கரமேனன், பேராசிரியரும் மிகச்சிறந்த உரைநடை ஆசிரியரும் பிற்காலத்தில் கல்லூரிக்கல்வி நெறியாளருமாகவும் விளங்கிய டாக்டர். பாஸ்கரன் நாயர், புகழ் பெற்ற நாவலாசிரியர் தகழி சிவசங்கர பிள்ளை, ஆகியோர் இந்த நண்பர்கள் குழுவில் இடம் பெற்றிருந்தனர். இந்த இளைஞர்கள் பத்திரிக்கை ஆசிரியருக்கு கட்டுரைகளைத் தரம் பிரித்துத் தந்தும், தனியாகக் கட்டுரைகள் எழுதித் தந்தும் உதவினர். பத்திரிக்கை ஆசிரியரும் இந்த இளைஞர்கள் உதவியின்றித் தாமே கட்டுரைகளை எழுதுவர்.

மேற்கூறிய நபர்களில் எம்.என். கோவிந்தன் நாயரும், தகழி சிவசங்கர பிள்ளையும் தற்போது உயிருடன் இருக்கின்றனர். மலையாள நாவல், சிறுகதை எழுத்தாளர்களில் மிகவும் புகழ் பெற்றவர் தகழி சிவசங்கர பிள்ளை. கே.பி. சங்கர மேனன் எழுதிய "கேசரியூடகதா" (கேசரியின் கதை – 1981) என்ற பாலகிருஷ்ண பிள்ளையின் வாழ்க்கை வரலாற்று நூலுக்கு முகவுரை எழுதிய தகழி சிவசங்கர பிள்ளை பின்வருமாறு உளமாறக் கூறுகிறார்:

"கேசரி பாலகிருஷ்ண பிள்ளையின் தொடர்பு இல்லாதிருந்தால் எழுத்தாளர் தகழி சிவசங்கர பிள்ளை இந்த அளவுக்கு உயர்ந்திருக்க மாட்டார். இதை நான் பல இடங்களிலும் கூறியிருக்கிறேன்.

ஈ.எஸ்.எல்.ஸி. முடித்தவுடன் "பிளீடர் ஷிப் கோர்ஸில்" சேர்ந்து படிக்கத் திருவனந்தபுரம் வந்தபோது தகழிக்கு வயது பதினெட்டுதான். உடனே அவர் பாலகிருஷ்ண பிள்ளையைச் சந்தித்துத் தனக்கு கதை எழுதுவதில் உள்ள விருப்பத்தைத் தெரிவித்தார். அவர் வரவேற்கப்பட்டு கேசரி குழுவில் சேர்த்துக் கொள்ளப்பட்டார். முதற்படியாக அவருக்கு, சில புத்தகங்களின் பெயரைச் சொல்லி அவற்றைப் படிக்குமாறு கேசரி கூறினார். தகழி கூறியது போலவே அந்தக் குழுவைச் சேர்ந்த பலரும் கூறி, ஒப்புக் கொண்டுள்ளார்கள். கேசரி பாலகிருஷ்ண பிள்ளை இந்த வகையில் ஓர் உயர்ந்தரக ஆசானாக அந்தக் குழுவைச் சார்ந்தவருக்கு இருந்தார்.

போதேஸ்வரன் போன்ற கவிஞர்களும், ஈ.வி. கிருஷ்ண பிள்ளை போன்ற எழுத்தாளர்களும், ஈ.வி. ராமன் நம்பூத்ரி போன்ற அறிஞர்களும் கேசரியை அடிக்கடி சந்தித்து அவருடன் தங்கள் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்வார்கள். அரசாங்கம் அல்லது மகாராஜாவைப் பற்றி விமர்சனம் செய்வதில் சற்று மிதமாக இருக்க வேண்டும் என்று ஈ.வி. கிருஷ்ண பிள்ளை, கேசரியிடம் அடிக்கடி கூறுவார். ஆனால் கேசரியோ உறுதியாக இருந்தார்.

கேசரி தமது பத்திரிக்கை ஆசிரியர் பதவியை விட்டு விட்ட போதும், நண்பர்கள் குழுவில் கருத்து பரிமாற்றம் தொடர்ந்தது. பாலகிருஷ்ண பிள்ளை தகுதிவாய்ந்த திறமையான இளைஞர்களுக்கு உதவுவதில் குறியாயிருந்தார். அவரது பரந்த அறிவும் புரட்சிக் கருத்துக்களும் இளைஞர்களுக்கு முன்னேற்ற உணர்ச்சியூட்டுபவைகளாக இருந்தன. ஒரு வழியில் பார்க்கப் போனால் அவர்களது சொந்தக் கருத்துக்களும், புது நோக்கங்களும், விந்தையான எண்ணங்களும், அவர்களுக்கு வழிகாட்டியான ஆசிரியருக்குப் புத்துணர்ச்சியை அளித்தன எனலாம். தங்களுடைய கருத்துக்களைச் சுதந்திரமாக எடுத்துச் சொல்லவும், விவாதிக்கவும் பிள்ளையவர்கள் அவர்களுக்கு உரிமையளித்திருந்தார். அவர் அவர்களது கருத்துக்களையும், விவாதங்களையும் புன்முறுவலுடன் கேட்டு பின்பு அவைகளை சீரிய முறையில் வகைப்படுத்திக் கூறுவார். ஆனால் அதே சமயத்தில், விவாதங்கள் சரியான முறையில் அமையாது போனாலோ அல்லது உற்சாகமிழந்த சூழ்நிலை ஏற்பட்டாலோ அவர் குறுக்கிட்டு அவர்களுக்குப் புதுபலத்தைக் கொடுத்து ஊக்குவிப்பார். அந்தக் கூட்டங்களில் அநேக இலக்கிய நூல்கள் படிக்கப்பட்டு, விவாதிக்கப்பட்டுள்ளன. போதேஸ்வரனின் புரட்சிக் கவிதைகளும்,

கே.ஏ. தாமோதர மேனனின் அரசியல் கட்டுரைகளும், சி. நாராயணப் பிள்ளையின் எழுத்துக்களும், தகழியின் ஆரம்பகாலக் கதைகளும் அந்தக் கூட்டங்களில் விருந்தாகப் படைக்கப்பட்ட கனிகளாகும்.

பாலகிருஷ்ண பிள்ளைக்குத் தாம் எழுதிய கட்டுரைகளையும், இலக்கியப் படைப்புகளையும் தம்முடைய நண்பர்களிடமே விவாதிக்கும் சந்தர்ப்பமும் தானாகவே ஏற்பட்டது. அவருடைய எழுத்துக்கள் அவருக்கு வருமானத்தை அளித்தன. அவருடைய கட்டுரைகள் அநேகமாக எல்லாத் தினசரிப் பத்திரிக்கைகளிலும் ஏற்றுக் கொள்ளப்பட்டன. குறிப்பாக, மாத்ரு பூமி, மலையாள மனோரமா, மங்களோதயம் என்ற மலையாளப் பத்திரிக்கைகளும், ஆங்கில நாளிதழ் இந்துவும், அவரது படைப்புகளை வரவேற்றன. அவர் சில நூல்களையும் பதிப்பித்தார். அவைகளுக்கு நீண்ட அறிமுக உரைகளையும் எழுதினார். அதனால் அவைகளின் அந்தஸ்து உயர்ந்தது. அவரது பழைய நண்பரும், கமலாலய அச்சகத்தின் உரிமையாளருமான பி. நாராயணன் நாயர் அவரை இம்மாதிரியான வேலையில் ஊக்குவித்தார். எனவே அவர் பல விஷயங்களைப் பற்றி நூல்கள் எழுதினார். சில முக்கிய ஃபிரெஞ்சு, ஆங்கில நூல்களை மொழி பெயர்த்தார். அவரது கற்றுத் தெளிந்த திறத்தால் அநேக மலையாள மொழி நூல்களுக்கு முகவுரை எழுதினார். இதனால் மலையாள இலக்கியம் வளர்ச்சியடைந்தது. அவரது பலதரப்பட்ட மலையாளப் படைப்புகள் மிகவும் கவர்ச்சியாக இருந்தன. இங்கு நாம் குறிப்பிட்ட சில நூல்களைப் பார்ப்போம்.

**நவலோகம்:**

நவலோகம் என்றால் 'புது உலகம்' என்று பொருள்படும். இது 1935–ல் வெளிவந்தது. இதில் நான்கு நீண்ட கட்டுரைகள் இருக்கின்றன. அவைகளெல்லாம், மாத்ரு பூமி, மலையாள மனோரமா போன்ற இதழ்களின் வருடாந்திர மலர்களிலும், மாப்சானின் "பெல் – அமி", 'காமுகன்' என்ற தலைப்பில் மொழி பெயர்க்கப்பட்ட நூலின் முன்னுரையாகவும் வெளிவந்தவை.

1) கேரளக் கலைகளும் புரட்சி இயக்கமும்,

2) ஃபிரெஞ்சு நாவலும் மாப்சானும்,

3) மனோதத்துவ நாவலும், மார்ஸெல் புரௌஸ்டும்,

4) மேற்கத்திய, கிழக்கித்திய நுண்கலைகள்,

ஆகிய தலைப்புகளில் அவை ஆங்கிலத்தில் தரப்பட்டன. இவைகளெல்லாம் வித்தியாசமான விஷயங்களைப் பற்றி இருந்த போதிலும், அவைகளுக்கிடையே ஒரு பொதுவான தொடர்பு இருப்பதால் 'நவலோகம்' என்ற தமது நூலின் தலைப்பை ஆசிரியர் நியாயப்படுத்துகிறார்.

அவைகளெல்லாம் நன்கு விமர்சனம் செய்யப்பட்டாலும், புத்துலகக் கலைகளுக்கு வழி கோலிகளாகவும் இருக்கின்றன. உலகக் கலைகளின் மறுமலர்ச்சியில் மேற்கத்திய அறிஞர்கள் செய்த பெரும் மாற்றங்களை மலையாள எழுத்தாளர்களும் வாசகர்களும் அறிய வேண்டும் என்று பாலகிருஷ்ண பிள்ளை விரும்பினார். கேரளக் கலைஞர்களின் பழைமையை விரும்பும் குணத்தையும் மாறுதல் ஏற்படும் போது உண்டாகும் அவர்களது எதிர் நடவடிக்கை பற்றியும் அவர் அறிவார். கலைகளில் முன்னேற்றம் இல்லையென்றால் அவைகளின் வெளிப்பாடுகளில் மாற்றம் தேவை என்பதை ஒத்துக் கொள்ள வேண்டும் என்று அவர் வாதிப்பார். ஏனென்றால் கலைஞர்கள் வெளிப்படுத்தக் கூடிய கருத்துக்கள் மாறிக் கொண்டேயிருக்கின்றன. கலைகளுக்குத் தேவையான மூலப் பொருள்களும், அவைகளை உபயோகிக்கும் முறைகளும் மாறிக் கொண்டே இருக்கின்றன. பிரிட்டிஷ் எழுத்தாளர்களின் யாரும் 'ஏன்' என்று கேட்க முடியாத பூஜிக்கும் குணம் அவைகளில் ஒன்றாகும். பாலகிருஷ்ண பிள்ளையும், சிருஷ்டி கர்த்தாக்களான கேரளக் கலைஞர்கள் தங்களது போக்கை காலத்திக்கேற்ப மாற்றிக் கொள்ள வேண்டும் என்று விரும்பினார். அதேபோல் ஃபிரெஞ்சு இலக்கியமும், ரஷ்ய இலக்கியமும் அநேக வழியில் மிக்க அழகுடனும், அறைகூவலுடனும் இருப்பதைக் காட்ட அவர் விரும்பினார். இரண்டாவதாக மலையாளத்தில் அவர் காலத்திய படைப்புகள் முற்காலப் படைப்புக்களுக்குத் தாழ்ந்தவை என்ற எண்ணம் அப்போதிருந்தது. பிள்ளை, இது ஓர் ஆரோக்கியமான போக்கு அல்ல என்பதை உணர்வார். ஆனால் தட்டிக் கேட்க வாய்ப்பு அவருக்குக் கிடைக்கவில்லை. எனவே கேரளத்துப் படைப்பிலக்கிய கர்த்தாக்களுக்கும், கலைஞர்களுக்கும், அவரது கண்களைத் திறப்பதில் நவலோகம் சிறந்த பங்காற்றியது எனலாம். அதிலிருந்த நான்கு கட்டுரைகளில், அவர் ஃபிரெஞ்சு எழுத்தாளர்களுக்கு முன்னுரிமை தந்திருந்தார். இது சராசரி ஆங்கிலக் கல்வி கற்ற உயர்தர கேரள எழுத்தாளர்களுக்கு, அவரது கண்களைத் திறக்கும் உபாயமாக இருந்தது. ஏனென்றால் அவர்கள் ஆங்கில இலக்கியந்தான் உயர்ந்தது என்று எண்ணியிருந்தார்கள். அறிஞர்கள் இது மாதிரி காலனி ஆதிக்கத்தை நம்பியிருப்பதை உடைத்தெறிய கேசரி முயன்றார்.

**ரூபமஞ்சரி:**

ரூபமஞ்சரி முதலில் 1937–ல் வெளியிடப்பட்டது. அது பாலகிருஷ்ண பிள்ளையின் மிக முக்கியமான இலக்கியப் படைப்பாகும். "ரூப" என்றால் வடிவம் என்றும் 'மஞ்சரி' என்றால் மலர்களின் தொகுதி அல்லது கொத்து என்றும் பொருள்படும். இங்கு வடிவம் என்பதற்கு இலக்கிய நடை என்று கொள்ள வேண்டும். ஏ.ஆர். ராஜராஜ வர்மாவின் "சாகித்ய ஷாயம்" (1911) என்ற உரை நடை எழுத்தாளர்களுக்கான முக்கிய புத்தகத்தின்

தொடர்ச்சி என்று இதைக் கூறலாம். எல்லாரும் ஒப்புக் கொள்ளும்படி உரைநடையில் எழுதுவது கவிதை எழுதுவது போன்று கடினமான வேலையாகும். ராஜராஜ வர்மா தனது நூலில் நல்ல உரைநடை எப்படி எழுதுவது என்பது பற்றியும் அதற்கு வேண்டிய தேவைகள் என்ன என்பது பற்றியும், அவற்றை எப்படி சுருக்கமாகவும், அழகாகவும், ஆணித்தரமாகவும் எழுதுவது எப்படி என்பது பற்றியும் விளக்கியிருக் கிறார். அவர் மலையாள எழுத்தாளர்கள் ஆங் கிலத்திலிருந்து பலவற்றைக் தெரிந்து கொள்ள வேண்டும் என்பது பற்றியும் கூறியுள்ளார். ராஜராஜ வர்மாவின் சீடரான பாலகிருஷ்ண பிள்ளை, தனது குரு போட்ட அஸ்திவாரத்தின் மீது கட்டடம் கட்டலானார். (கே.எம். ஜியார்ஜ் எழுதிய ஏ.ஆர். ராஜராஜ வர்மா – பக்கங்கள் 42–43– பார்க்கவும்). இலக்கிய நடையின் பிரிவுகளான, கட்டுரை, விமர்சனம், நாவல், காதல்கதை, சிறு கதை, வேடிக்கை நாடகம், வாழ்க்கை வரலாறு, சுய சரித்திரம் முதலியவற்றின் தன்மைகள் பற்றி தனது நூலில் அவர் விளக்கியுள்ளார்.

இந்த நூலுக்கு அவர் விரிவான முகவுரை எழுதியிருக்கிறார். இலக்கியத்தைக் கற்றல் இரண்டு நோக்கங்களைக் கொண்டது. முதலாவது இலக்கியத்தை ரசிக்க உதவுகிறது. அடுத்தது, இலக்கியத்தை உருவாக்க உதவுகிறது. இது சம்பந்தமான முடிவுகளை மனதில் கொண்டு, அவர் ஒன்பது கட்டுரைகளை எழுதியிருக்கிறார். "கவிஞர் பிறக்கிறான் ஆக்கப்படுவதில்லை," என்ற பழமொழி ஒன்று உண்டு. இம்மாதிரியே, வலுவான உரைநடை எழுத்தாளனும் பிறக்கிறான். ஒரு படைப்பாளிக்கு இரண்டு விஷயங்கள் ஒன்றுக்கொன்று பின்னிக் கொண்டு இருக்கின்றன. முதலாவது தீர்க்கமாகக் கவனிக்கும் திறமை.

இது தெய்வத்தன்மையுள்ளது. அடுத்தது கவனித்த விஷயங்களின் அழகையும், பலத்தையும் படிப்பவர்களுக்குக் கொடுக்கும் திறமை. இரண்டாவதாகச் சொல்லப்பட்ட திறமையை ஒருவன் பயிற்சியால் வளர்த்துக் கொள்ளலாம். எழுதும் திறமையும் எழுத்து நடையும் இதற்கு மிகவும் உதவும் என்று கேசரி தமது முன்னுரையில் கூறியுள்ளார். "சாகித்ய ஷாயம்", ஒருவருக்கு நல்ல நடையில் எழுதப் பயிற்சியளிக்கும் என்று அவர் நம்பினார். உரைநடை இதன்படி நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்படும். அவை, கதையாகச் சொல்லப்படுபவை, வர்ணித்துச் சொல்லப்படுபவை, விளக்கமாகச் சொல்லப்படுபவை, தர்க்கரீதியில் சொல்லப்படுபவை என நான்கு வகைகளாகும். நூலின் இரண்டாம் பாதி, விளக்கங்களின் தூய்மை, மொழி, மரபுகள், நிறுத்தற்குறிகள் முதலி யன பற்றி விளக்குகிறது. இலக்கியத்தை நல்ல முறையில் படைத்திட ஒவ்வொரு நடையைப் பற்றிய விளக்கங்களைத் தருவதுதான் இந்த நூலின் நோக்கமாகும். அதே சமயத்தில் புகழ்பெற்ற இத்தாலிய விமர்சகரான "பெனடெட்டோ குரோஸ்" என்பவரது கருத்தைக் குறை

கூறியிருக்கிறார். ஏனென்றால் இத்தாலிய விமர்சகர் கையாண்ட இலக்கிய வழிமுறைகள் சரியில்லை என்பது இவரது வாதம்.

நூற்றுக் கணக்கான ஆண்டுகளுக்கு முன் மலையாளத்தில் ஒருவிதமான உரைநடை இருந்ததைப் பிள்ளையவர்கள் ஒப்புக் கொள்கிறார். ஆனால் தற்போதைய உரைநடை மிகவும் நாகரிகமானதாயும், ஆங்கில உரைநடையின் ஆதிக்கம் பெற்றதாயும் இருக்கிறது. எப்படி இருந்தபோதிலும் ஒவ்வொரு மொழிக்கும் தனிப்பட்ட நடையென்று ஒன்று இருக்கிறது. அதை, உரைநடை, கவிதை ஆகியவற்றில் காணலாம். ஆனால் இலக்கியத்தைப் படைக்கும்போது வேற்று மொழி நடையைப் பின்பற்றலாம் என்கிறார் பிள்ளை.

ரூபமஞ்சரி, இலக்கியத்தின் பலவகைப்பட்ட நடை பற்றியும், அவைகளின் அமைப்புப்பற்றியும் விளக்க வந்த சிறுநூல் அல்ல. ஆனால் மலையாள மொழியில் கிடைக்கக் கூடியவற்றை எடுத்த அவைகளுக்கிணையானவற்றை ஐரோப்பிய மொழிகளிலின்று எடுத்து ஒப்பிட்டுக் காட்டுகிறது. உதாரணமாக மலையாளத்தில் கட்டுரைகளை எடுத்துக் கொண்டார். அவர் இரண்டு வகையான கட்டுரைகளை விளக்குகிறார். ஒருவரைப் பற்றித் தனிப்பட்ட முறையில் எழுதப்படும் கட்டுரைகளை அவர் சிறப்பாகக் கொள்ளவில்லை. அவைகள் "பெல்–லெட்டர்ஸ்" என்ற வகையைச் சார்ந்தவை. அவைகளில் தனிப்பட்ட விஷயங்கள் முக்கியத்துவம் பெற்றிருக்கும். இப்படிப்பட்ட தனிப்பட்ட கட்டுரைகளை எழுதிய ஃபிரெஞ்சு எழுத்தாளர் "மான் டேய்ன்" என்பவர் பற்றி அவர் கூறுகிறார். அந்தப் ஃபிரெஞ்சு எழுத்தாளரைப் பின்பற்றி ஆங்கிலத்தில், கோல்ட் ஸ்மித், சார்லஸ் லாம்ப், போன்றோர் எழுதினார்கள். அப்பன் தம்புரான் எழுதிய "சமஸ்ரிஷ்திகள்" என்ற மலையாள நூலை இதற்கு உதாரணமாகக் கூறலாம். மற்றொரு வகையான கட்டுரைகளுக்கு, ஆங்கிலத்தில் 'பேகன்' என்பவர் மூலகர்த்தாவாக இருக்கிறார். அவர் தர்க்கரீதியில் விஷயங்களைச் சொல்லும் முறையை வளர்த்தவர். ஒரு கட்டுரையை எந்த முறையிலும், சுமூகமாகவும், கவர்ச்சியாகவும் அமைக்க வேண்டும். இதே போன்று ஒன்பது வகை நடைபற்றித் தேவையான உதாரணங்களுடன் விளக்கியிருக்கிறார்.

### ராஜராஜ்யம்:

மற்றொரு முக்கிய நூல் "ராஜராஜ்யம்" ஆகும். அதில் "சந்தேச காவ்யா" (செய்திக் கவிதைகள்) 'பாஷா' வின் நாடகங்கள். "அட்டக்கதாஸ்" (கதக்களி இலக்கியம்) ஆகியவை பற்றி எழுதியுள்ளார். இந்த மூன்று கட்டுரைகளும் ராஜராஜவர்மாவின் நூலிலிருந்து எடுக்கப்பட்டு, பாலகிருஷ்ண பிள்ளையால் கட்டுரை விஷயங்களுக்கேற்ப தலைப்புகளும், முகவுரையும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. எனவே தான், நூலுக்கு

"ராஜராஜ்யம்" என்று பெயரிடப்பட்டுள்ளது. ராஜராஜவர்மா ஓர் இலக்கண ஆசிரியரும், அலங்கார சாஸ்திரத்தை விளக்க வந்தவரும்மாவார் என்று பாலகிருஷ்ண பிள்ளை கூறுகிறார். ஆனால் வர்மா இலக்கிய விமர்சகரும், உரையாசிரியருமாக இருக்கத் தகுதி பெற்றவர் என்றும் பிள்ளையவர்கள் கூறுகிறார்.

அவரது எழுத்துக்களின் தரம் மூன்று முக்கியமான கட்டுரைகளில் கூறப்பட்டுள்ளது. அப்படிக் கூறும் போது பிள்ளையவர்கள், ஐ.ஏ. ரிச்சர்ட்ஸ், வால்டர் பீட்டர், டி.எஸ். எலியட், ஹென்றி ஜேம்ஸ், பாடிலியர், மார்ஸல் புரௌஸ், ஆகியோரது படைப்புகளிலிருந்து தேவையான உபமானங்களை எடுத்துக் காட்டுகிறார். அறிவு பூர்வமான, எளிதில் பதியக் கூடிய, ஒருவரையும் சுட்டிக்காட்டாத, தனிப்பட்டதுமான, நடைமுறைக்கு ஏற்றதுமான, வராற்று சம்பந்தமான, கலையுணர்வுடன் கூடிய, பகுத்தறிகிற, விஞ்ஞான நுட்பமான விமர்சனங்கள் என்று, பலதரப்பட்ட இலக்கிய விமர்சனங்களை அவர் விளக்குகிறார். இருந்தாலும் பகுத்தறிகின்ற தன்மையும் விஞ்ஞான நுட்பத் தன்மையும் கொண்ட விமர்சனங்களுக்கு அதிகமான கவனம் தரப்பட்டுள்ளது. ராஜராஜவர்மா ஒரு விஞ்ஞான நுட்ப விமர்சகர்.

### நாவல் பிரஸ்தானங்கள்:

நாவல்கள் எழுதப்பட வேண்டிய நடைகுறித்து வெளிவந்த "நாவல் பிரஸ்தானங்கள்" என்ற அவரது நூல் படிப்பதற்குச் சுவையானது, அது 1947–ல் மலையாள இலக்கிய அடிப்படையில் பிரசுரிக்கப்பட்டது. அந்த நூலில் இருக்கும் பன்னிரண்டு அத்தியாயங்களில் முதல் அத்தியாயம் சுருக்கமாயும், விஷயத்தை ஆணி அறைந்தாற்போல் கூறுவதாயும் உள்ளது. அந்த நூலின் முக்கிய நோக்கம் மேற்கத்திய நாவல் துறையின் தன்மைகளைக் குறிப்பிடுவதேயாகும். செய்யுள் நடைக்கும், உரைநடைக்கும் கவிதை பொதுவாக இருக்கிறது. செய்யுள் நடையும், உரைநடையும், படைப்பிலக்கியம் என்ற பகுதிக்குள் அடங்கும். செய்யுளுக்கும் உரைநடைக்கும் உள்ள வித்தியாசத்தைப் பிள்ளையவர்கள் பின்வருமாறு விளக்குகிறார். உரைநடை என்பது உணர்ச்சிபூர்வமான வார்த்தைச் சீர்களின் கோர்வை. ஆனால் செய்யுளோ சீர்களின் அமைப்பில் ஒழுங்குமுறையும், சொற்களின் வெளிப்பாடும் கொண்டது. எனவே நாவல் இலக்கியம் ஆக்கபூர்வமாகவும் இருக்க வேண்டும், அதோடு உணர்ச்சி பூர்வமாகயும் அமைய வேண்டும் என்று அவர் கூறுகிறார்.

இரண்டாவது அத்தியாயத்தில், மலையாள நாவல் இலக்கியம் வருந்துகிற நிலையில் இருப்பதைப்பற்றிக் கூறுகிறார். இந்த நிலை மலையாள நாவல் வளர்ச்சிக்குப் பிரதிகூலமானதாகும். ஐரோப்பிய மொழிகளில் நாவல் இலக்கியத்தில் பலதரப்பட்ட விஷயங்கள் பற்றிக்

கூறப்பட்டிருப்பதைச் சுட்டிக் காட்டுகிறார். வாழ்க்கையின் எல்லா விஷயங்களும் நாவல் இலக்கியத்துக்கு ஏற்றவையே. உயர்குடும்பத்து மக்களைப் பற்றிதான் நாவல் இருக்க வேண்டும் என்பதில்லை. சாதாரண குடிமக்கள் – தொழிலாளிகள், திருடர்கள், கொள்ளையடிப்போர், அநாகரிகமான மக்கள், ஏழைகள், கஷ்டப்படுபவர்கள் – பற்றியும் நாவல்கள் எழுதப்படலாம் என்கிறார். நாவலாசிரியருக்கு வாழ்க்கையைப் பற்றிய விஷயங்கள்தான் தேவை. பிறகு ஐரோப்பாவில் பிரபல்யமாகிவரும், பாட்டாளி மக்களைப் பற்றிய நாவல்கள் பற்றியும் கூறுகிறார். லயோனல் பிரிட்டன் எழுதிய *"பசியும் காதலும்"* என்ற நாவலுக்கு இங்கிலாந்தில் ஏற்பட்ட நிலை பற்றியும் குறிப்பிடுகிறார். பிறகு கௌரவமான தொழில்கள் பற்றியும் அவைகளுக்கு மாறுபட்டவை பற்றியும் எழுதப்பட்ட நாவல்களையும் ஒருமுகப்படுத்திக் காட்டுகிறார்.செக்ஸ் வாழ்க்கையை இயற்கை நியதிக்கு அப்பாற்பட்ட விரும்பத் தகாத விளக்கங்களால் கூறப்படும் நாவல்களை எடுத்துக் கூறுவதில் பிள்ளையின் ஆர்வம் தெரிகிறது. ஃபிரெஞ்சு நாவலாசிரியர் மார்செல் பிரௌஸ் எழுதிய மனோதத்துவ நாவல்களில் காணப்படும் மனிதரின் பாலுணர்வு விளக்கங்களை எடுத்துக் காட்டியுள்ளார். புகழ்பெற்ற ஜெர்மானிய நாவலாசிரியர் தாமஸ்மான் பற்றியும் இந்த இடத்தில் கூறப்பட்டுள்ளது. தற்காலத்தில் பெண்களின் அணுகுமுறைபற்றியும் , குறிப்பாக மேற்கத்திய நாடுகளில் உள்ள பெண்கள் பற்றிய விஷயங்களையும் பயமின்றிக் குறிப்பிடுகிறார்.

அவர் நாவல் இலக்கியத்தின் பலதரப்பட்ட கொள்கைகள் பற்றியும் அவைகளின் வித்தியாசங்கள் பற்றியும் விளக்கமாகக் கூறுகின்றார். மனித மனோதத்துவப் பகுப்பறிதல் பற்றியும், நடத்தை பற்றியும் எழுதப்பட்ட நாவல்களைப் பற்றிய செய்திகளைக் கூறும் அத்தியாயம் ஒன்று காணப்படுகிறது. சிறந்த ஆசிரியர்களான ஜேம்ஸ் ஜாய்ஸ், வர்ஜனியா உல்ஃப், ஆந்த்ரே ஜைட், மார்சல் பிரௌஸ், இன்னும் மற்ற நாவலாசிரியர்கள் பற்றிய குறிப்புகளும் நாவல் விளக்கங்களும் காணப்படுகின்றன. சமூகநாவல், தனிப்பட்டவர்கள் பற்றிய நாவல் ஆகியவற்றைப் பற்றிய குறிப்புகளும் உள்ளன. நாவலை எழுதுபவர்களுக்கும், நாவலைப் படிப்பவர்களுக்கும் இந்த நூல் வரவேற்கக்கூடிய வரப்பிரசாதமாகும்.

## சாஹித்ய – விமர்சனங்கள்:

"சாஹித்ய விமர்சனங்கள்" என்ற இலக்கிய விமர்சன நூல் 1959–ல் அவரால் வெளியிடப்பட்டது. அந்த நூலில் ஒன்பது கட்டுரைகள் உள்ளன. அவைகள் கீழை நாடுகள், மேற்கத்திய நாடுகளின் இலக்கிய விமர்சனங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டவை. முதல் கட்டுரை கற்பனை வளம், இலக்கியச் சிறப்பு ஆகியவற்றைக் கொண்ட நூல்களை ஒப்பிட்டுப் பேசுகிறது. ஃபிரெஞ்சு, ஜெர்மனி, ஆங்கிலம்

ஆகிய மொழிகளில் காணப்படும் இத்தகைய நூல்களை ஆழமாகவும், சாதுர்யமாகவும் விளக்கியுள்ளார். மலையாளத்தில் காணப்படும் இப்படிப்பட்ட நூல்களை ஆராய்ந்து ஒப்பிட்டுக் காட்டியிருக்கிறார். இறுதியில் கற்பனை வளம் பொருந்திய நூல்கள், இலக்கிய வளம் பொருந்திய நூல்கள் ஆகியவற்றின் தன்மைகளை ஆராய்ந்து ஒவ்வொன்றிலிருந்தும் எட்டு உதாரணங்களை எடுத்துக் காட்டியிருக்கிறார். மற்றொரு கட்டுரையில், இலக்கியச் செயல் நுணுக்கம் பற்றியும், விஞ்ஞானம் பற்றியும் எழுதியிருக்கிறார். இதனால் இயற்கை விஞ்ஞானங்களையும், சமூக விஞ்ஞானங்களையும் மக்களுக்குக் கற்பிக்க ஏதுவாகிறது. இதன் மூலம் இலக்கியமும் தற்கால ஓட்டத்துக்கு ஏற்றாற்போல் அமைக்கப்பட முடியும் என நம்புகிறார். இன்னொரு கட்டுரையில் இலக்கியத்தைத் திட்டமிடுதல் எப்படி என்று விளக்குகிறார். அடுத்தவொன்றில் சமூகத்தில் உள்ள, "விஷகுழுக்கள்" பற்றி விளக்கியுள்ளார். இதில் இலக்கிய ஆராய்ச்சியைத் தொடர்ந்து செய்வதில் தங்கள் உயிரை விட்டவர்கள் பற்றியும், அதே போன்று முற்போக்கு எழுத்தாளர்கள் இக்காலத்தில் இலக்கியத்துக்காக உழைப்பது பற்றியும் கூறுகிறார். இவை மட்டுமின்றி, கலை, உண்மைக் கதை, கவிஞர் சங்கம் புழாவின் தத்துவங்கள், மற்ற இலக்கிய கர்த்தாக்களின் உண்மையான அனுபவங்கள் முதலியன பற்றியும் குறிப்புகள் இருக்கின்றன. இந்தக் கட்டுரைகள் எல்லாம் மிக்க விவரங்கள் அடங்கியதாயும் ஆவலைத் தூண்டுபவனவாயும் எழுதப்பட்டுள்ளன.

பிரபந்தங்கள்:

'பிரபந்தங்கள்' என்ற நூலில் இருபது ஆழ்ந்த கருத்துள்ள, பலவகைப்பட்ட கட்டுரைகள் உள்ளன. இவைகள் கலை, காதல், முற்போக்கு இலக்கியம் ஆகியவைகளைப் பற்றி எழுதப்பட்டுள்ளன. இந்த நூல் 1984–ல் வெளிவந்த "கேசரியுட சாஹித்ய விமர்சனங்கள்" என்ற நூலின் ஒரு முக்கிய பகுதியாகும். அதிலுள்ள தலைப்புகள், பாலகிருஷ்ண பிள்ளை பலதிறப்பட்ட விஷயங்களை எப்படிக் கையாண்டுள்ளார் என்பதை விளக்குகின்றன. உதாரணத்துக்குச் சில தலைப்புகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

இப்சென்
இப்சென்னும் தற்கால ஐரோப்பிய நாடகமும்
மதமும் கலையும்
சங்கீத நாடகம்
ஜீவத் சாஹித்யம் (முற்போக்கு இலக்கியம் – மூன்று கட்டுரைகள்)
கலையும் அவலட்சணமும்
காளிதாசர்

மலையாளத்தில் மர்ம ஆன்மீகக் கவிதைகள்
வெளிப்படுத்தும் கலை
குறியீடுகள்

இந்தக் கட்டுரைகள் மாத்ருபூமி வார இதழிலும் மற்ற இதழ்களிலும் வெளிவந்தவை. இவைகள் கட்டுரை ஆசிரியரின் பரந்த அறிவையும், இலக்கிய நுண்ணறிவையும், மேற்கத்திய விமர்சனங்கள் இந்திய இலக்கியம் ஆகியவற்றில் அவருக்கிருந்த பிடிப்பையும், குறிப்பாகத் தமது மொழி மீதிருந்த பிடிப்பையும், அவரது நவீன புரட்சிகரமான நோக்கையும், தெளிவாக விளக்குகின்றன. இதைப் படிப்பவர்கள் ஆழ்ந்த சிந்தனையின் உச்சத்துக்கே கொண்டு போகப் படுவார்கள்.

## முகவுரைகளும் விமர்சனங்களும்:

பாலகிருஷ்ண பிள்ளை மலையாள இலக்கியத்தில், குறிப்பாக புகழ்பெற்ற நூல்களுக்கு முகவுரை எழுதுவதில் சிறந்தவர் என்று பெயர் பெற்றிருந்தார். பெர்னாட் ஷா தாம் எழுதிய நாடகங்களுக்கு நீண்ட முகவுரை எழுதிப் புகழ் பெற்றிருந்தார். அதுமாதிரியான அறிமுகங்கள் ஒருவிதமான இலக்கிய முக்கியத்துவம் பெற்றிருந்தன. சமூகச் சிந்தனையையும் தூண்டி விட்டன. ஆனால் பாலகிருஷ்ண பிள்ளை தமது நூல்களுக்குச் சிறு முகவுரைதான் எழுதுவார். அதுவும் எப்போதாவது ஒரு நூலுக்கு எழுதுவார். மற்ற நூலாசிரியர்களின் புத்தகங்களுக்கு அவர் எழுதிய முகவுரைகள் நல்லதோர் உயர்தரமான விளக்கக் கட்டுரைகளாக ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளன. சில சமயங்களில் அவர் முகவுரை எழுதும் நூல்கள் அவரது முற்போக்குக் கொள்கைகளை மாட்டி வைக்க உதவும் ஆப்புமுனைகளாக இருக்கின்றன. அவர் வழக்கமாக மேற்கத்திய ஆசிரியர்களையும் மலையாள எழுத்தாளர்களையும் ஒப்பிட்டு எழுதுவதில் மிகுந்த மகிழ்ச்சி கொள்வார். இதனால் சில நூல்கள் புகழ் பெற்றன எனலாம். கலை, இலக்கியம், விஞ்ஞானம், அரசியல் அல்லது சமூக சிந்தனை, எதுவாக இருந்தாலும் பொது விஷயங்களைத் தற்கால முற்போக்குக் கொள்கைகளுக்கு ஏற்ப எழுதுவதில் பாலகிருஷ்ண பிள்ளைக்கு நிகராக இப்போது எந்தவொரு எழுத்தாளரும் இருக்கவில்லை. அவர் காரல் மார்க்ஸ், ஃபிராய்டு போன்ற தற்காலச் சிந்தனையாளர்களின் புரட்சிக் கொள்கைகளால் கவரப்பட்டார்.

இம்மாதிரியான பதிமூன்று இலக்கிய விமர்சனங்களை இணைத்து "கேசரியுடே சாஹித்ய விமர்சனங்கள்" என்ற நூலாக வெளியிடப்பட்டது. அவைகளில் முதலாவது "சாண்டில்யா" என்ற தலைப்பில் , அவரது நூலுக்கு அவர் எழுதிய முன்னுரையாகும்.இந்த நூல் ஃபிரெஞ்சு நாவலாசிரியர் பால்ஸாக் எழுதிய "யூஜின் கிராண்டே" என்ற நாவலின் தழுவலாகும். இதில் பால்ஸாக், ஒரு முக்கியமான நவீன நாவலாசிரியர் என்பதைப் பிள்ளையவர்கள் விளக்கியுள்ளார்.

பாலகிருஷ்ண பிள்ளையால் எழுதப்பட்ட நான்கு அல்லது ஐந்து முன்னுரைகள் உயர்தர இலக்கிய அந்தஸ்தைப் பெற்றுள்ளன. ஜி. சங்கர கரூப் எழுதிய "நிமிஷம்" சங்கம்புழாவின் கவிதை நூலான "ஸ்பான்திக்குன்ன அஸ்திமாடம்" கேத்தமங்கலம் பப்புக்குட்டியின் கவிதைத் தொகுப்பான "கடாத்து வாஞ்சி" இடப் பள்ளி ராகவன் பிள்ளையின் குறுங்கவிதையான "மணிநாதம்" ஆகிய நூல்களுக்கு அவர் எழுதிய முன்னுரைகள் குறிப்பிடத்தகுந்தவை. நிமிஷம் என்ற நூலின் முகவுரை மொழி விமர்சகர்களுக்கு ஒரு வழிகாட்டி, அதில் கூறப்பட்டுள்ள குறியீடுகளும், மனித நேயத்தன்மையும், வேறு எந்த நூலிலும் காணப்படவில்லை. சங்கம் புழாவின் கவிதை பிள்ளையவர்களுக்கு "ரொமான்டிஸம்" "ரியலிசம்" போன்ற மேற்கத்திய இலக்கியத் தத்துவங்களை விளக்க ஒரு வாய்ப்பளித்தது. மனப்பகுப்பாய்வு கொள்கையில் ஈடுபட்டுள்ள விஞ்ஞானி போன்ற ஒரு கவிஞனின் மன இறுக்கத்தைச் சிக்கலிலிருந்து இது விடுவிக்கிறது.

"கடாத்து வாஞ்சி" என்ற நூலுக்கு எழுதிய முகவுரையானது மலையாள இலக்கியத்துக்கு சமூகப்புரட்சி, கவிதைப் புரட்சி, ஆகியவற்றை அறிமுகம் செய்து வைக்கும். இலக்கிய ஆவணமாக விளங்குகிறது. பப்புக்குட்டியைப் பிள்ளையவர்கள் ஒரு "மஹா கவி" என்றே வர்ணிக்கிறார். பிள்ளையவர்களின் பாராட்டுக் குறிப்புகள் நூலாசிரியரை மிகவும் உயர்த்துகிறது. என்றாலும் அவைகள் முழுமையாக நியாயப்படுத்தப்படவில்லை!

பழங்காலக் கலையான "கதக்களி, தோல்வாத்தியக் கருவிகள்" ஆகியவற்றைப் பற்றிப் பிள்ளையவர்களின் கருத்துக்கள் வழக்கமானதாக இல்லை. அவர் கலையிலும், இலக்கியத்திலும் நிபுணராக இருந்தார். அவரது எழுத்துக்கள் கற்ற அறிவுடன் நின்று விடவில்லை. சமூகச் சீர்திருத்தந்தான் அவரது பேராவல். தற்கால இலக்கியங்கள் புரட்சிக் கருத்துக்களையும், செயல்களையும் விடவேண்டும் என்றும் அவர் விரும்பினார்.

அவரது முகவுரைகள் எழுத்தாளர்களுக்கும் விமர்சகர்களுக்கும் பேருதவியாக இருந்தன. சாதாரண வாசகர்களுக்கு அவை ஏற்றதல்ல. அவர் பலதரப்பட்ட விஷயங்களின் விமர்சகராகக் கருதப்பட்டார். மேற்கத்திய பாணியில், பாராட்டுகளும் விமர்சனங்களும் அமைய வேண்டும் என்பது அவரது அவா. எனவே பிள்ளையவர்கள் மலையாள இலக்கியத்தின் முன்னேற்றத்துக்கு "சமஸ்கிருத" மொழியை நம்பியிருக்காமல், ஆங்கிலம் போன்ற ஐரோப்பிய மொழிகளைச் சார்ந்திருக்க வேண்டும் என்று தைரியமாகக் கூறினார்.

# சில முக்கிய நூல்களின் விமர்சனங்கள்

## ஐந்து நாவல்களுக்கு அறிமுக உரைகள்

கேசரி தமது கற்றாய்ந்த அறிமுக உரைகளை தகழி சிவசங்கர பிள்ளையின் மூன்று நாவல்களுக்கு எழுதியுள்ளார். அவைகள் "பரமார்த்தங்கள் (உண்மைகள் 1946) "தலையோடு" (1948) "ரண்டிடன்கழி" (இரண்டு நாழிகள் – 1949) என்ற நாவல்களாகும். மலையாள இலக்கியத்தில் தோன்றிய புதிய உத்திகள் பற்றி விவாதிக்கும் போது கேசரியவர்கள் தகழியை மலையாளக் குறுநாவல் இலக்கியத்தில் "டிஃபீடிஸ்ட் ரியலிஸ்ட் மூவ்மென்ட்" கொள்கைகளை முதலில் புகுத்தியவர் என்ற நிலையில் வைக்கிறார். "பரமார்த்தங்கள்" என்ற நாவலின் முன்னுரையில் பிள்ளையவர்கள் தகழியை, மனோதத்துவ நாவலை மலையாளத்தில் அறிமுகப்படுத்தியவர் என்று புகழ்கிறார். ஆங்கிலம் ஃபிரெஞ்சு, ரஷ்ய மொழி ஆகியவற்றில் வெளிவந்துள்ள முக்கியமான மனோதத்துவ நாவல்கள் சிலவற்றையும் எடுத்துக் காட்டாகக் குறிப்பிடுகிறார். "ஸ்டென்தால்", "டோஸ்டோ வாஸ்கி" போன்றோர் உபயோகித்த வழிமுறைகளைத் தகழியும் உபயோகித்துள்ளார் என்று அவர் கூறுகிறார்.

"தலையோடு" என்ற நாவலில், திருப்தி உணர்வை ஏற்படுத்தியதற்கு தகழி, சமூக அணுகுமுறை உத்திகளுக்குக் கடன்பட்டுள்ளார். "ஃபியூசரிஸம்" என்ற புதிய கொள்கைக்காக பழைய முறைகளை ஒதுக்கிவிடும் உத்தியை இந்த நாவலில் அவர் புகுத்தியுள்ளார். மண்டையோடு ஒரு குறியீடு, அவ்வளவுதான். "ரொமான்டிக் நாவல்" என்ற நாவல் வரிசையில், சரித்திர நாவல், துப்பறியும் நாவல், விநோதரசமான நாவல் என்று மூன்று தலைப்புகளிலும் விவாதிக்கிறார். அதுபோலவே "ரண்டிண்டன் கழி" என்ற நாவலை "எக்ஸ்பிரஷனிஸ்ட் நாவல்" என்ற வகையில் சேர்த்து விளக்குகின்றார். இம்மாதிரியான விளக்குமுறை நாவல்களுக்கு சமூக–அரசியல் பின்னணி இருக்கவேண்டும். அவரைப் பொறுத்தவரையில் தகழியின் "தோட்டியூட மகன்" என்ற நாவல்தான் மலையாள மொழியில் "எக்ஸ்பிஷக்ஷனிஸ்ட் நாவல்" வகையைச் சார்ந்த முதல் நாவல் என்று விளக்குகிறார். கேசரியின் கருத்துப்படி இந்த இரண்டு நாவல்கள் தான் "எக்ஸ்பிரஷனிஸ்ட் நாவல்" வகையில் உலகத்திலேயே சிறப்பான நாவல் வரிசையில் வைத்து எண்ணப்படுபவை. ஃபிரெஞ்சு நாவலாசிரியர் "பால்ஸாக்" அவர்களின் தாக்கம் தகழியிடம் இருந்தது என்று பிள்ளையவர்கள் குறிப்பிடுகின்றார்.

பொன்ஜிக்கரா ராபி எழுதிய "பாபிகள்" (1950) என்ற நாவல் பாலகிருஷ்ண பிள்ளையின் அங்கீகாரத்தைப் பெற்றது. இந்த நாவல் மலையாளத்தில் வாழும் கத்தோலிக்க கிறிஸ்தவர்களின் வாழ்க்கை

முறையை விவரமாக விளக்குவதாகும். இதையும் அவர் "எக்ஸ்பிஷனிஸ்ட் நாவல்" வகையைச் சார்ந்தது என்று கூறுகிறார். பாலுணர்வு ஆசைகளைச் சரியாக வடிகால் செய்ய வேண்டிய அவசியம் பற்றியும் பலபேர் விஷயத்தில் இது தோல்வியடைகிறது என்ற விஷயத்தை அடிப்படையாகக் கொண்ட நாவல் இது. இந்த நாவலின் பாத்திரப் படைப்புகளை நன்றாக விவரித்திருப்பதைப் பாராட்டும் பிள்ளையவர்கள், கத்தோலிக்க கிறிஸ்தவர்கள் பற்றி மட்டும் கூறும் கதைக் களத்தைக் குறை கூறுகிறார். ஏனென்றால், கதையில் சொல்லப்படுவது போன்று கேரளத்தில் கத்தோலிக்க கிறிஸ்தவ சமூகத்தார் மட்டும் வசிக்கும் கிராமம் எதுவும் கிடையாது!

"கலித்தோழி" (1946) புகழ்பெற்ற கவிஞரான சங்கம்புழா கிருஷ்ண பிள்ளையின் நாவலாகும். இதற்கு சிறுவயதில் ஏற்பட்ட சிநேகிதி என்று பொருள். இதைப்பற்றிக் கூறும்போது கேசரி இது ஒரு "டிஃபிடிஸ்ட் ரியலிஸ்ட்" வழிவந்த நாவல் என்றும் வர்ணனை முறை உத்தியைக் கொண்டது என்றும் விவரிக்கிறார் "செக்ஸ்" பற்றிய விஞ்ஞான அறிவை விளக்குவதற்கு இந்த விமர்சனத்தைப் பிள்ளையவர்கள் ஒரு வாய்ப்பாக எடுத்துக் கொள்கிறார். அதனை எழுதிய ஆசிரியர் வாசகர்களின் எண்ண ஓட்டங்களைத் தூண்டி விடுவதில் வெற்றி பெற்றிருக்கிறார் என்றும் விவரிக்கின்றார்.

## சிறு கதைகள்

பதினெட்டுச் சிறுகதைத் தொகுப்புகள், பாலகிருஷ்ண பிள்ளையின் விமர்சனத்துக்கு உள்ளாயிருக்கின்றன. அந்தக் கதைகள் எல்லாம் மலையாளத்தில் புகழ்பெற்ற கதாசிரியர்களின் பேனாக்களிலிருந்து வெளிவந்தவையாகும். பி. கேசவன் தேவ், வைக்கம் முகமது பஷீர் (இரண்டு தொகுதிகள்), எஸ்.கே. பொட்டேக்காட் (இரண்டு தொகுதிகள்), உரூப், பொன்குன்னம் வர்க்கி (இரண்டு தொகுதிகள்), ஈ.எம். கோவூர், போன்றோர் கதாசிரியர்களில் சிலர், ஜோஸப் முண்டசேரி நாகவல்லி ஆர்.எஸ். குருப், ஆகியோரின் கதைகள், ஏ. மாதவன் மொழி பெயர்த்த புஷ்கின் அவர்களின் கதைகள், என்.பி. நாராயணன் நாயர் மொழி பெயர்த்த ஆறு ரஷ்யக் கதைகள் மற்றும், ரஷ்ய மொழி, போலிஷ் மொழி, ஜப்பானிய மொழி, சீனமொழிக் கதைகளும், அமெரிக்க நாட்டுக் கதைகளும் இதில் அடங்கும். பாலகிருஷ்ண பிள்ளை கதைகளின் பாத்திரங்களைப் பற்றி விவாதிக்கும் போது அவரது கவனிப்பில் உணர்ச்சி மிகுந்த பார்வை இருக்கும். அடிக்கடி அவர் இந்தக் கதாசிரியர்களை, உலகப்புகழ் பெற்ற கதாசிரியர்களுடன் ஒப்பிடுவார். இதனால் கதாசிரியர்கள் ஏற்றம் பெறுவர். மேலும் அவர் கதைகளின் நுணுக்கங்களை வெகுவாக அலசிப் பார்ப்பார். அவரைப் பொறுத்த வரையில், முண்டசேரி

வஞ்சப் புகழ்ச்சி அணியை உபயோகிப்பத்தில் வல்லவர். பஷீர் தமது கதைகளை இசைக் காவியமாக அமைப்பதில் வல்லவர்; பொட்டேக்காட் வார்த்தை ஜாலம் செய்வதில் வல்லவர்; பொன்னுக்குன்னம் வர்க்கி பாத்திரங்களை சமூகக் கவர்ச்சியுடன் வர்ணிப்பதில் வல்லவர்; என்பது தான் அவர் கருத்து.

**கவிதைகள்:**

"கேசரியூட சாஹித்ய விமர்சனங்கள்" என்ற நூலின் அடுத்த பகுதி ஏழுகவிதைகளை விமர்சனம் செய்கிறது. புகழ்பெற்ற கவிஞர் சங்கம்புழா எழுதிய "திவ்ய கீதம்" என்ற கவிதை விவிலிய நூலில் பழைய ஏற்பாட்டில் உள்ள "சாலமோனின் உன்னதப் பாட்டு" என்பதின் மொழி பெயர்ப்பாகும். மற்றொரு கவிதை பி. பாஸ்கரன் எழுதிய "வயலார் கர்ஜிக்குன்னு" என்பது. இது கேசரியால் மிக கவனமாகச் சீர்தூக்கிப் பார்க்கப்பட்டுள்ளது. பிள்ளையவர்கள், கவிஞரின் புரட்சிக் கருத்துக்களை மிகவும் புகழ்ந்து பேசுகிறார். அவர் இம்மாதிரி புகழ்ந்து எழுதும்போது பாஸ்கரன் முன்னுக்கு வந்துக் கொண்டிருந்த கவிஞராக இருந்தார்.

கேசரி அவர்கள் எடசேரி கோவிந்தன் நாயர் என்ற மற்றொரு கவிஞரை அவரது முற்போக்குக் கருத்துள்ள கவிதைகளுக்காக அறிமுகப்படுத்துகிறார். சங்கம் புழாவின் மற்ற நான்கு கவிதைத் தொகுப்புகள் பால கிருஷ்ண பிள்ளையால் பாராட்டப்பட்டுள்ளன.

**இலக்கியத்தின் மற்ற பிரிவுகள்**

பொஞ்சிக்கரா ராபி எழுதிய "மதாய் மாஸ்டர்" என்ற நாடகத்தை (1945) மங்களோதயம் இதழில் விமர்சனம் செய்யும் போது பாலகிருஷ்ண பிள்ளை – கருத்தரிக்காமல் செய்தல், சிறந்த முறையில் இனவிருத்தி செய்தல் – ஆகியவை சம்பந்தமான விஷயங்கள் பற்றி கூறுகிறார். ஆரம்பப்பள்ளி ஆசிரியர்கள், ஒருவரது முன்னேற்றத்துக்குக் காரணமாக இருக்கிறார்கள். அவர்களது பணி மிகவும் முக்கியமானது. அவர்களைப் போல் முப்பது அல்லது நாற்பது மடங்கு அதிகமாகச் சம்பளம் வாங்கும் பல்கலைக்கழகப் பேராசிரியர்களைவிட அவர்களது பணி மிகவும் முக்கியமானது என்று பிள்ளை விமர்சிக்கின்றார். மதாய் மாஸ்டரின் நிலையை சமூக அமைப்பில் உயர்த்திக் கூட்டுகிறார். இறுதியில் நல்ல நாடகங்களை எப்படி எழுதுவது என்பது பற்றியும் விளக்கியிருக்கிறார்.

இதன் பிறகு ஆழ்ந்த கருத்துக்களுள்ள கட்டுரைகளின் ஐந்து சுருக்கமான விமர்சனங்கள் காணப்படுகின்றன. முதல் இரண்டு தொகுதிகள் புத்தி நுட்பமுடன் சிந்திப்பவரும், உரைநடை எழுத்தாளருமான குட்டிப்புழா கிருஷ்ண பிள்ளை எழுதியவை. முதலவாது, "விச்சார

விப்லவம்" என்பது. இந்தத் தலைப்பு, "எண்ணங்களில் புரட்சி" என்று பொருள்படும். இதில் இருபத்திரண்டு கட்டுரைகள் உள்ளன. அவையெல்லாம் சோவியத் யூனியனில் உள்ள மக்களின் வாழ்க்கை முறைகளைப்பற்றி எழுதப்பட்டவை. அவைகளை எப்படி கேரளத்தில் கொண்டு வரலாம் என்பது பற்றியும் பேசப்பட்டுள்ளது. அவரது போக்கு ஒரு நாஸ்திகரைப் போன்றுள்ளது. இரண்டாவது தொகுப்பு "விமர்சரஷ்மி" எனப்படும். இதன் பொருள் "விமர்சன ஒளிக்கதிர்கள்" என்பதாகும். இதில் பலதரப்பட்ட விஷயங்களைப் பற்றிய கட்டுரைகள் பகுத்தறியும் நிலையிலும் வேதாந்த நிலையிலும் உள்ளன. 1949–ல் எஸ்.கே. நாயர் எழுதிய "கலாசிந்தகல்" டி.சி. கிழக்கேமுறி எழுதிய "எலிவானம்" என்ற வேடிக்கைக் கட்டுரைத் திரட்டு, நளப்பட் நாராயண மேனன் எழுதிய "ரதி சாம்ராஜ்யம்" (1938) ஆகியவற்றை கேசரி விமர்சனம் செய்துள்ளார். "ரதி சாம்ராஜ்யம்" என்றால் "செக்ஸ் ராஜ்யம்" என்று பொருள்படும். இது "செக்ஸ்" பற்றிய விஞ்ஞான பூர்வமான நூல். செக்ஸ், தத்துவம், கலை என்று விஷயம் எதுவாக இருந்தாலும் கேசரி தமது ஆழ்ந்த அறிவை அந்தந்தத் துறையில் நிலைநாட்டிப் பேசுவார். இவைகளைப் படிக்கும் போது அவரது பரந்த அறிவை வியக்காமல் இருக்க ஒருவரால் முடியாது.

## விமர்சகர் என்ற முறையில் அவரது பங்கு

இந்த அத்தியாயத்தில் பாலகிருஷ்ண பிள்ளை எழுத்தாளராகவும், இலக்கிய விமர்சகராகவும் ஆற்றிய பணிகளைச் சிறுசிறு துண்டுகளாகத் தந்தோம். அவர் அநேக உபயோகமான நூல்களை எழுதியுள்ளார். அவைகள் இலக்கிய அமைப்புகள் பற்றியும் செயல்முறை பற்றியும் விளக்குவன. சில முக்கியமான நூல்களுக்கு முகவுரை எழுதியும் அவைகளின் தரத்தை வெளிப்படுத்தியுள்ளார். இதனால் பின்வரும் தலைமுறையைச் சார்ந்தவர்களால் அவர் பத்திரிக்கை ஆசிரியர் என்பதைவிட இலக்கிய விமர்சகர் என்றே அழைக்கப்படுவார். அவர் ஐரோப்பிய மொழிகளிலிருந்து, முக்கியமாக ஃபிரெஞ்சு மொழியிலிருந்து, புதுக் கருத்துக்களையும், உத்திகளையும், மலையாள இலக்கியத்தில் புகுத்தி அதனைச் சிறக்கச் செய்தார் என்றும் பார்த்தோம். ஆனால் அவரது அணுகுமுறை அவருக்கு முன்னோடிகளாக இருந்த சாஹித்ய பன்சன்னன் பி.கே. நாராயணபிள்ளை, ஏ.ஆர். ராஜராஜ வர்மா போன்றவர்களது முறையிலிருந்து வேறுபட்டிருந்தது. அவர் தமக்கென்று ஓர் இலக்கிய நடையை அமைத்துக் கொண்டார். அது உலகப் பார்வையின் கோணத்திலிருந்து தோன்றியது எனலாம். அவர் இலக்கியத்தை மற்ற விஷயங்களிலிருந்து பிரித்துக் கையாளவில்லை. இதனால் அவரது திறனாய்வுக் கட்டுரைகளுக்குப் பலதரப்பட்ட விஷயங்கள் கிடைத்தன.

பாலகிருஷ்ண பிள்ளையின் திறனாய்வு முறைகளைப் பின்வரும் பகுதிகளாகப் பிரிக்கலாம்.

1) வாழ்க்கை வரலாறுகள்
2) சமூகப் பிரச்சினைகள்
3) செயல்முறை சம்பந்தப்பட்டவைகள்
4) உளவியல் சம்பந்தப்பட்டவைகள்
5) ஆராய்ச்சி போக்கு கொண்டவர்கள்

கவிஞர் சங்கம்புழா எழுதிய "ஸ்பான்டிக்குன்ன அஷ்திமடம்", ஜி. சங்கர குரூப் எழுதிய, "நிமிஷம்", கேடமங்கலம் பாப்புக்குட்டி எழுதிய, "கடாத்து வாஞ்சி" சீத்தா ராமன் எழுதிய "ஹாஸ்ய லஹிரி" இடப்பள்ளி எழுதிய "மணி நாதம்" போன்றவைகள், வாழ்க்கை வரலாறு, சமூகப் பார்வை, மனோதத்துவப்பார்வை, ஆகியவைகளின் அடிப்படையில் எழுதப்பட்டவை. அவருடைய "சன் கேட்டிகானி ரூபனங்கள்" என்ற நூலில், தகழி, கேசவ தேவ், பி. பாஸ்கரன், சங்கம் புழா, ஆகியோரது படைப்புக்களைத் தந்து, தொழில் நுணுக்கமான விமர்சனங்களுக்கு ஏற்ற உதாரணங்களையும் தந்து விளக்கியிருக்கிறார். ஆராய்ச்சி நோக்கோடு வெளிவந்தது "ராஜராஜீயம்" என்ற நூல். இது பற்றி முன்னமே பார்த்தோம். பாஷா, குணாத்யா, காளிதாஸா ஆகியோரைப் பற்றி எழுந்த இவரது ஆழ்ந்த நூல்கள் இவரது ஆராய்ச்சி நோக்கினையும், புத்திக் கூர்மையையும் வெளிப்படுத்துகின்றன.

பாலகிருஷ்ண பிள்ளை தனது குருவான, ஏ.ஆர். ராஜராஜ வர்மாவிடமிருந்து கல்வி சம்பந்தமான எல்லாத் திறமைகளைப் பெற்றாலும் அவர் பழைமையை எதிர்க்கும் நோக்கத்தையும் பலதரப்பட்ட விஷயங்களைக் கொண்டு இலக்கியத்தை அணுகவும் கற்றறிந்தார். அவர் ஐரோப்பிய இலக்கியத்தில் ஆழ்ந்த புலமையையும், மேற்கத்திய முறையில் விமர்சனம் எழுதப் பழகிக் கொண்டதும் இதற்குக் காரணங்களாகும். கேரளத்தில் இலக்கியங்களை ஒப்பு நோக்கி விமர்சனம் செய்வதை, ஏனைய விமர்சன கர்த்தாக்கள் எண்ணுவதற்கு முன்பே, பிள்ளையவர்கள் இப்படிப்பட்ட ஒப்பு நோக்கி ஆராயும் முறையைக் கையாண்டார். தற்காலத் தலைமுறையினர் அவரது பழமையை எதிர்க்கும் குணத்தையும், சுயமாக எழுதும் முறையையும் புகழ்கின்றனர். ஓர் இலக்கியப் படைப்பை ஏதோவொரு ஐரோப்பிய கொள்கைப்படி விளக்குவதில் அவர் மிகவும் பிடிவாதமாக இருந்தார். இந்த முறை ஆரம்பகால எழுத்தாளர்களை ஊக்குவிப்பதாக இருந்தாலும் அதில் பல குறைகளும் உள்ளன. இலக்கிய விமர்சகர் என்ற முறையில் அவரை பி.கே. நாராயண பிள்ளை, ஜோஸப் முண்டசேரி, குட்டி கிருஷ்ண மாரார், முதலியோருடன் ஒப்பிடலாம்.

அவர்களில் ஒன்றுக்கு மேற்பட்டவரைப் பிள்ளையவர்கள் தமது பாதைக்கு வரவழைத்தார். தமது தலைமுறையில் வந்தவர்களுக்கு அவர் இலக்கியத்தில் ஒருவிதமான ஈடுபாட்டை ஏற்படுத்தினார்.

## மொழி பெயர்ப்புகள்

பாலகிருஷ்ண பிள்ளையவர்களுக்கு ஃபிரெஞ்சு மொழியில் இருந்த ஆர்வத்தையும், அம்மொழியின் இலக்கியங்களில் அவருக்கிருந்த புலமை பற்றியும் நாம் ஏற்கனவே கூறியுள்ளோம். பால்ஸாக் என்பவரின் "யூஜின் கிரண்டே" என்ற ஃபிரெஞ்சு மொழி நாவலை அவர் "சாண்டில்யா" என்ற தலைப்பில் மொழிபெயர்த்ததைப் பற்றியும் கூறியுள்ளோம். பின்பு அவர் "மாப்சானின்" கதைகளில் ஈடுபாடு கொண்டு அவைகளை மலையாளத்தில் மொழி பெயர்த்தார். அவைகளில் ஒன்றான "ஒரு பெண்ணின் வாழ்க்கை" என்ற நாவல் ஆரம்ப காலத்தில் அவரால் ஏற்பட்ட மாற்றம் குறிப்பிடத் தக்கது. மொழி பெயர்ப்பின் அணுகுமுறையில் சில சங்கடங்கள் ஏற்பட்டன. எனவே "சாண்டில்யா" மொழிபெயர்க்கப்பட்ட நூல் என்று கூறுவதைவிட தழுவல் நூல் என்று கூறுவது பொருந்தும். இந்த நாவலில் வரும் ஐரோப்பிய கதாபாத்திரங்கள் இந்திய உடையில் தோன்றுகின்றனர். இந்த மாற்றத்தால் மலையாள வாசகர்கள் மொழி பெயர்க்கப்பட்ட கதைகளை ரசிப்பார்கள் என்று அவர் நம்பினார். இம்மாதிரியான மொழிபெயர்ப்பு நூல்களை ஆங்கிலத்தில் பார்க்கும் போது அவைகள் புதியதோர் கதையாக, அந்நாட்டுக் கலை, பண்பாட்டுப் பின்னணியில் தோன்றுவதை அவர் வெகுவாக ரசித்தார். அப்போதுதான் பண்பாட்டுப் பரிமாற்றம் ஏற்படும் ஒற்றுமையும் ஏற்படும் என அவர் நம்பினார்.

அவர் மொழிபெயர்த்த நாவல்களில் "பிராஸ்பெர் மெரிம்" எழுதிய "கார்மென்" என்ற நாவலும், "ஸ்டென்தால்" எழுதிய "ஸ்கார்லெட் அண்ட் பிளாக்" என்ற நாவலும் குறிப்பிடத்தக்கவை. இவை இரண்டும் கலையுணர்வு கொண்ட நாவல் படைப்புகள், "காமுகன்" என்ற நூலில் அவர் எழுதிய முன்னுரையில் ஆங்கில நாவல்களைவிட, பிரெஞ்சு நாவல்கள் உயர்ந்தவை என்பதை அவர் விளக்கியுள்ளார்.

"ஸ்டென்தால்" அவர்களின் கூற்றுப்படி நாவல் என்பது வாழ்க்கையின் கண்ணாடி போன்றது. பிள்ளையவர்கள் இந்தக் கொள்கைக்கேற்ற சிறந்த உண்மையான நாவலாசிரியர் "மாப்சான்" என்று கூறுவார். அவர் சுமார் 250 சிறுகதைகளைத் தன்னுடைய வாரப்பத்திரிக்கையில் பிரசுரித்துள்ளார். அதே சமயத்தில் ஒருபகுதி வாசகர்கள் இம்மாதிரியான கதைகளைப் பிரசுரிப்பதன் மூலம் பிள்ளையவர்கள், இளைஞர்களைத் தீயவொழுக்கத்துக்கு வழிபாட்டுகிறார் என்று குறை கூறினார்கள்.

பிள்ளையவர்கள் மலையாளத்தில் நல்ல நாவல்களுக்குப் பஞ்சம் என்பதை உணர்ந்தார். எனவே இம்மாதிரியான மொழிபெயர்ப்பு நாவல்களை வெளியிடுவதின் மூலம், திறமை வாய்ந்த கதாசிரியர்களை இது போன்ற நாவல்களை எழுதத் தூண்டலாம் என்று அவர் எண்ணினார்.

"மாப்சான்னின்டே செரு கதைகள்" பாகம் 1 என்ற தலைப்பில் பதினோரு சிறுகதைகள் வெளிவந்தன. அவைகள் வாசகர்களால் பெரிதும் வரவேற்கப்பட்டன. மொழிபெயர்ப்பாளர் இறந்த பிறகு இரண்டாம் பாகம் வெளிவந்தது. பிள்ளையவர்கள் தமது கட்டுரை ஒன்றில் மூன்று விதமான மொழிபெயர்ப்புகள் இருக்கின்றன என்று கூறுகின்றார். மூலத்திலிருந்து மாறாமல் எல்லாவற்றையும் உள்ளது உள்ளபடியே தருகின்ற மொழிபெயர்ப்பை அவர் சிபாரிசு செய்கிறார். சரியான வார்த்தைகளைத் தேர்ந்தெடுப்பது மொழி பெயர்ப்பாளரின் கடமையாகும். இது அவரது, சிறுகதை நாவல் மொழிபெயர்ப்புகளுக்கு மட்டுமின்றி மற்ற நூல்களுக்கும் பொருந்தும்.

பிள்ளையவர்கள் எழுதிய கதைகளைத் தவிர்த்த மற்ற நூல்களின் மொழி பெயர்ப்பில் முக்கியமானதைச் சொல்ல வேண்டுமானால், ஃபிரெஞ்சு எழுத்தாளர் "ரோமன் ரோலண்ட் எழுதிய" மகாத்மா காந்தியின் வாழ்கை வரலாற்று நூலைக் குறிப்பிடலாம்." "கேசரி" வார இதழில் 1930 முதல் 1932 வரையில் அவர் தொடர்ச்சியாக எழுதி வெளியிட்டார். 1986-ல் மாத்ரு பூமி வெளியீட்டுக் கம்பனி, அதனை நூலாக வெளியிடும் வரையில் அந்த மொழிபெயர்ப்பு ஏறக்குறைய மக்களால் மறந்துவிட்ட நிலையில் இருந்தது. ரோலண்ட் அவர்கள் தமது நூலில் காந்திஜியின் ஆன்மீக ஒளியை எடுத்துக் காட்டுவதில் வெற்றி பெற்றார். அதே போன்று மொழிபெயர்ப்பாளரும் மலையாளத்தில் அதனை அப்படியே வெளிப்படுத்திக் காட்டினார் எனலாம். ஆனால் இந்த மொழி பெயர்ப்பு நூல் அவசரம் அவசரமாகச் செய்யப்பட்டது என்றும், புத்தகமாக வெளியிடுவதற்குமுன் நன்கு ஆராய்ந்து தொகுக்கப்பட்டிருந்தால் நன்றாக இருந்திருக்கும் என்றும் அதனைப் படிக்கும் ஒருவர் எண்ணக்கூடும்.

நாம் அவர் மொழிபெயர்ப்பில் வெற்றிபெற்றார் என்று கூற முடியாது. சில நேரங்களில் மேற்கத்திய மரபு மொழிநடை மலையாளத்தில் புகுந்து அபஸ்வரத்தை ஏற்படுத்தியிருப்பதை நீங்கள் காணலாம். அவர் மொழிபெயர்ப்பில் ஜாக்கிரதையாக இல்லையெனலாம். எப்படி இருந்த போதிலும் பாலகிருஷ்ண பிள்ளையவர்கள், ஃபிரெஞ்சு, இலக்கியத்தையும் ரஷ்ய இலக்கியத்தையும் மலையாளப் புது எழுத்தாளர்களுக்கும், மொழிப் பெயர்ப்பாளர்களுக்கும் அறிமுகம் செய்து வைத்தார் என்பதை யாரும் ஒப்புக் கொள்வர்.

# 5. ஆராய்ச்சியாளரும், சரித்திராசிரியரும்

பாலகிருஷ்ண பிள்ளை தமது இளமைக்காலத்திலிருந்தே பலவிஷயங்களைத் தெரிந்து கொள்வதில் விருப்பங் கொண்டிருந்தார். அவர் புத்தகங்களை ஆர்வமாகப்படிப்பவர். புரட்சிச் சிந்தனையாளர். அவருக்கு குறிப்பாக, சரித்திரம் (சரித்திரக்காலத்துக்கு முன் மிகப்பழைய விஷயங்களையும் சேர்த்து) மானுடவியல், தொல்பொருள் ஆராய்ச்சி, அரசியல், மனோதத்துவம், வானியல், ஓவியக்கலை, ஆகியவற்றில் ஆர்வங் கொண்டிருந்தார். இவை மட்டுமின்றி, உயிரியல், சோதிடம், மருத்துவம், மொழியியல், கைரேகை சாஸ்திரம் ஆகியவற்றிலும், அவருக்கு ஈடு பாடிருந்தது. அவர் பத்திரிக்கை ஆசிரியர் தொழிலை விடும் வரையில் இந்தத் துறைகளில், கற்கவும், ஆராய்ச்சி செய்யவும் அவருக்கு நேரம் கிடைக்கவில்லை. ஆனால் தமது கடைசி 25 ஆண்டு காலத்தில் அவர் தமது வாழ்நாட்களை இவை பற்றி ஆராய்ச்சி செய்வதிலும், எழுதுவதிலும் செலவிட்டார்.

சோதிடமும் கைரேகை சாஸ்திரமும் அவருக்குப் பொழுது போக்கு வேலையாக இருந்தன. அவர் இறந்தகாலத்தையும், நிகழ்காலத்தையும் சமமாக எண்ணினார். அரசியலும் இலக்கியமும் நிகழ்காலத்து விஷயங்கள். அவைகளைப் பற்றி முன் அத்தியாயங்களில் கூறியுள்ளோம். அவரது இறந்த காலத்தைப்பற்றிய விருப்பங்களும், மானுடத்துக்கு அவர் ஆற்ற வேண்டிய கடமைகளும், அவரது தொடர்ந்த ஆழமான ஆராய்ச்சிகளுக்கு அஸ்திவாரமாக அமைந்தன.

அண்மையில் கேரள சாஹித்ய அகாதெமி 1986—ல் வெளியிட்ட "சரித்திரதின்டே ஆதிவேருகள்" என்ற நூலில் உள்ள ஒன்பது கட்டுரைகள் பாலகிருஷ்ண பிள்ளையின் புத்தகக் குறிப்பிலிருந்து எடுக்கப்பட்டவையாகும். இது வாசகர்களுக்கும், ஆராய்ச்சியாளர்களுக்கும் இதுவரை எளிதில் கிடைக்கவில்லை. பழையகால வரலாறுகளையும், மானுட இயல் பற்றிய விஷயங்களையும், பிள்ளையவர்கள் மலையாள இதழ்களில் பிரசுரித்துள்ளார். அப்படிப்பட்ட கட்டுரைகள் மாத்ரு பூமி இதழ்களிலும் இதர ஆண்டு மலர்களிலும் வெளிவந்துள்ளன. ஆங்கிலக் கட்டுரைகள் 'இந்து' பத்திரிக்கையிலும் வெளிவந்துள்ளன. இவைகளைப்

பற்றிய கடுமையான விமர்சனங்கள் பழமையை விரும்பும் அறிஞர்களிடமிருந்து வந்தன. இவருடைய கருத்துக்கள் விநோதமானவை என்றும் அவரது சொந்தக் கற்பனையில் உதித்தவை என்றும் கூறப்பட்டன. இந்தக் கூற்றில் உண்மையும் இருந்தது எனலாம். அவரது கொள்கைகள் தவறானவை உள்ளுணர்வால் எழுதப்பட்டவை. சில சமயங்களில் அவருக்கு அவரே முரண்பட்ட கருத்துக்களைக் கூறுவார். ஆனால் அவ்வப்போது அவருக்குக் கிடைத்த நூல்களை எல்லாம் கற்றறிந்து அதன்பின் தமது கொள்கைகளை விடுத்தார். இந்தியச் சரித்திரக் காலாண்டு இதழ்கள், திருவாங்கூர் அகழ்வாராய்ச்சித் தொடர்கள், மெக்கன்ஸியின் கையெழுத்துப் பிரதிகள், இன்னும் மற்ற ஆவணங்களை அவர் முழுமையாகக் கற்றிருந்தார். அவரைப் பொருத்தவரையில் புராணக்கதைகளும், அவரது ஆராய்ச்சிக்கு உதவின எனலாம். அவர் பல்கலைக்கழகப் பேராசிரியர்கள் செய்யும் ஆராய்ச்சிகள் மீது வெறுப்பு கொண்டிருந்தார். இதற்காக அவர் அபர்டீன் பல்கலைக்கழகப் பேராசிரியர் ஹோக்பென், "பல்கலைக்கழகங்கள் சாகும் நிலையிலுள்ள கொள்கைகளுக்காக ஆஸ்பத்திரியில் படுத்துக் கொண்டிருக்கின்றன" என்று கூறிய கூற்றை மேற்கோளாகக் காட்டுவார். நாம் பல ஆண்டுகள் கழித்துப் பிள்ளையவர்களின் கொள்கைகளை, ஆராய்ச்சி செய்ததில் இந்த இரண்டு பக்கத்துக் கொள்கைகளும் சற்று தாராளமாகவே பெரிதுபடுத்திப் பேசப்பட்டுள்ளன என்ற முடிவுக்கு வரலாம். பாலகிருஷ்ண பிள்ளையின் கொள்கைகள் உண்மையாகவே ஆராய்ச்சியாளர்களுக்கு உதவியாக இருக்கின்றன. சில அறிஞர்கள் கூறுவது போல அவைகள் கட்டுக் கதைகளோ அல்லது அரைப் பைத்தியத்தின் கூற்றோ அல்ல. ஆனால் அவர் வழி இல்லாதக் காட்டில் தனியொரு பயணியாக இருந்தார்.

இந்தச் சந்தர்ப்பத்தில் அவர் எதிர் கொண்ட விமர்சனத்தை அவர் கூற்றாகத் தருவது உபயோகமாக இருக்கும். இது அவரது சஷ்டியாப்தபூர்த்தி விழாவின் போது பேசப்பட்ட உபசார வார்த்தைகளுக்கு அவர் பதிலளித்துப் பேசியதின் மொழி பெயர்ப்பாகும்.

"நான் இந்தச் சுவாரஸ்யமில்லாத பேச்சை, என்னுடைய ஆராய்ச்சி பற்றிய விஷயத்தைக் கூறி முடித்துக் கொள்கிறேன். ஒரு இளைய எழுத்தாளர் இம்மாதிரியான ஆராய்ச்சிகளுக்கு, "சாரமில்லாத தொழில் நுணுக்கங்கள்", "உயிரில்லாதத் தத்துவார்த்தம்" என்று பெயர் சூட்டினார். நூற்றுக்குத் தொண்ணூறு இளைய எழுத்தாளர்கள் என்னுடைய ஆராய்ச்சிகளை விட்டு விலகி நிற்கிறார்கள். அதனை ஒரு தொற்று நோய் போல் கருதுகின்றனர். பல்கலைக் கழகத்தில் விஞ்ஞான ரீதியில் செயல்படும் ஆராய்ச்சியாளர்கள் என்னுடைய எளிய முறை ஆராய்ச்சிகளை வெறுப்புடன் பார்க்கிறார்கள். பாட்டி சொல்லும் புராணக்கதை போல என்னுடைய மூளையில் பைத்திக்காரத்தனமாய் தோன்றியதையெல்லாம்

உளறுவதாகக் கூறுகிறார்கள். தேசிய போர்வை கொண்ட அறிஞர் சிலர் நான் என்னமோ நேற்று தோன்றியது என அவர்கள் கூறும் அரபு மிலேச்சர்களின் நாகரிகத்தை இந்திய நாகரிகத்தின் முன்னோடியாகக் காட்டுவதாக எண்ணிக்கொண்டு, என்னை இந்தித்தாயை எதிர்ப்பவன் என்கிறார்கள். இந்திய நாகரிகமோ உலகம் தோன்றியது முதல் இருக்கும் பழமையான நாகரிகம், எப்போதும் இருப்பது சுதந்திரமானது, தீட்டுபடாதது".

அவர் இது மாதிரி கூறிக்கொண்டு தன்னுடைய ஆராய்ச்சியை நியாயப்படுத்த முயல்கிறார். அவரது ஆராய்ச்சிக்கான விசாரணை முறைகள் சப்பென்று இருந்தாலும் ஆராய்ச்சி பசுமையாக இருப்பதாகக் கூறுகிறார். அணுகுண்டு தயாரிப்பினாலும், அதிவேக ஜெட் விமானங்களாலும், தேசியம் என்ற பழைய கொள்கை சுருங்கிக் கொண்டு வருகிறது. "ஓர் உலகம்" என்ற கோட்பாடு உறுதியாகிக்கொண்டு வருகிறது. அவரது ஆராய்ச்சி இந்தப் புது விளக்கத்தை மக்கள் அறிந்து கொள்ள உதவும் என்று கூறுகிறார். ஆசிய நாடுகள் ஒன்று சேர்ந்து ஒரே மாதிரியான அரசியல், பொருளாதாரத் திட்டங்களை வகுக்க வேண்டும் என்று எதிர்பார்த்தார். "பொதுவில்லாத விஷயங்களை எதிர் நோக்குபவர்களை, பைத்தியக்காரர்கள் என்று அணுகுவது ஒரு பொதுவான விஷயம் என்று அவர் கூறுகிறார். அவர் மேலும் கூறுவதாவது:

> "என்னுடைய அருமையான கொள்கைகள் ஆசிய நாட்டினரையும், வம்சத்தார்களையும் ஒன்று சேர்க்கும், தமக்கென்று குறிப்பிட்ட கலாச்சாரம், பண்பாடு என்று பெருமைப்பட்டுக் கொள்பவரைக் குறைக்கும். சரித்திரக் காலத்துக்கு முன்பிருந்த ஆசிய பொது கலாச்சாரத்துக்கு அழைத்துச் செல்லும்".

ஆசிய நாடுகள் தற்காலத்தில் தமக்குள் இருக்கும் கலாச்சார ஒற்றுமையை உணர்ந்து அவைகள் நெருக்கமாகிக் கொண்டு வருவதை நாம் அறிவோம்.

பாலகிருஷ்ண பிள்ளை மறைந்து கால் நூற்றாண்டு கழிந்த பின்பும் நாம் அவரது கொள்கைகளுக்கு மதிப்பு, அவைபற்றிய முடிவான தீர்ப்பையும் கூறமுடியாத நிலையில் இருக்கிறோம். ஆராய்ச்சி என்ற பார்வையில் பழைய கொள்கைகளை, புது ஆராய்ச்சிகள் மறுக்கும். ஆனால் சில கொள்கைகள் புது ஆராய்ச்சிகளுக்கு வழி வகுத்துக் கொடுக்கும். ஆராய்ச்சியாளர்களைச் சரியான பாதையில் அழைத்துச் செல்லும் தற்கால சமூக மானிடவியல் தோற்றத்தில் இரண்டு கொள்கைகள் உண்டு. அவைகளில் ஒன்று, உலகத்தின் எல்லாப்பகுதிகளிலும் மனிதர்களின் பண்பாடு எல்லாம் ஒரேமாதிரியான அமைப்பைப் பெற்றிருக்கிறது என்று

விளக்குகிறது. தற்கால நாகரிகம், பழைய கால நாகரிகத்திலிருந்து தோன்றியதாகும். பழைய நாகரிகம் எகிப்தில் சுமார் 4500 ஆண்டுகளுக்குமுன் தோன்றியது என்றும், அதிலிருந்து மற்ற உலக நாடுகளுக்கு அதன் கிளையாகத் தோன்றிய கலாச்சாரம் பிரிந்து சென்றது என்றும் மற்ற கொள்கை கூறும். தற்கால நாகரிகம் இதிலிருந்துதான் வந்ததென்று விளக்கும். பாலகிருஷ்ண பிள்ளையைப்பற்றி ஆராய்பவர்கள், அவர் இரண்டாவது கொள்கையை ஆதரிப்பவர் என்று கூறுவார்கள். அவருக்கு எகிப்து என்பது தற்காலச் சரித்திர ஆசிரியர்கள் கூறுவது போன்றதல்ல. இந்த எகிப்து கிழக்கு அரேபியா ஆகும். அதன் கலாச்சாரம் 3100 ஆண்டுகள் பழமையானது. இதைவிடப் பழமையான கலாச்சாரம் உலகின் பல பாகங்களில் பரவி இருந்தது. ஆனால் அவைகள் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமல் போய்விட்டன என்று அவர் கருதுகிறார். இதனால் தான் பழைய புராணக்கதைகள் மறைந்துவிட்டன என்றும் கூறுவார்.

பாலகிருஷ்ண பிள்ளையின் பத்திரிக்கை கட்டுரைகளிலும், தலையங்கங்களிலும், சமூகத்தை நவீன மயமாக்குதல் பற்றிய குறிப்புகள் காணப்பட்டன. ஜனநாயக் கொள்கைகளைப் பரப்பும் குறிப்புகளும் இருந்தன. அவருடைய இலக்கியப் படைப்புகளிலும், மொழிபெயர்ப்புகளிலும், மலையாள இலக்கியத்தின் முன்னேற்றம் பற்றிய புது சூழ்நிலையை எழுத்தாளர்களிடையே உருவாக்கினார். இந்த எழுத்தாளர்கள் பிற்காலத்தில், இலக்கிய—சமூக—அரசியல் மறுமலர்ச்சிக்குக் காரணமாயிருந்தனர். எப்படியிருந்த போதிலும் மிகப்புராதன சரித்திரம், பழைய சரித்திரம், ஆகியவற்றைப் போற்றிய அவரது ஆராய்ச்சிகளை சில சிறந்த அறிவாளிகள் மட்டும் விரும்பினர். அவைகள் இருட்டில் தோன்றிய கலங்கரை விளக்கம் போன்று அவர்களுக்கு அவர்களது ஆராய்ச்சியில் உதவின. பிள்ளையவர்கள் தம்முடைய ஆராய்ச்சிகளின் மீது மிக்க பாசம் கொண்டிருந்தார். மற்றவர்கள் அவரது ஆராய்ச்சிகள், தொடர்பில்லாதன, வழக்கத்துக்கு மாறானவை, பைத்தியக்காரத்தன மானவை, என்று கூறிய போதிலும் அவர் மாறவில்லை. அவரது ஆராய்ச்சிகள் பற்றி இங்கே ஆராயலாம்.

### கல்ப காலக்கணக்கிடும் முறை:

சரித்திரச் சம்பவங்களைக் குறிக்க அவைகள் சரியான காலத்துடன், ஆண்டுகளுடன் சம்பந்தப்பட்டிருக்க வேண்டும். அப்போதுதான் மற்ற சம்பவங்களை சரியானபடி கால நிர்ணயம் செய்ய முடியும். எனவே காலம் சம்பந்தப்பட்ட விஞ்ஞான அறிவு சரியானபடி வளர்ச்சியடைவது என்பது ஒரு புதிய கொள்கை. பழைய காலக் கணக்கீடுகள் சரியாக இல்லாததால் குழப்பங்கள் ஏற்பட்டன. ஏனென்றால் அந்தக் காலக்

கணக்கீடுகள் உலகத்தின் பொது கால அளவாக ஒப்புக் கொள்ளப்படவில்லை. கணக்கிடும் முறையும் பழமையானது. பழைய காலத்தில் அது கால்டியன் சோதிடர்களால் (பாபிலோனியர்) உருவாக்கப்பட்டது. பாலகிருஷ்ண பிள்ளை கல்ப காலகணிதத்தைத் தன்னுடைய சொந்த முறையில் விளக்குகிறார். அவர் தமது முதல் கட்டுரையான "சரித்திரத்தின்டே ஆதிவேருகள்" என்பதில் தமது சொந்தமுறையில் காலத்தைக் கணக்கிடும் முறையை விளக்குகிறார். கேரளத்தின் பழைய சரித்திரத்தை இந்த முறையில் கணக்கிட்டார். இந்தக் கல்ப முறையில் காலத்தைக் கணக்கிடும் முறை அவரது மிகப் புராதன சரித்திரம், பழைய சரித்திரம் ஆகியவற்றை ஆராயும் திறவுகோலாக விளங்கியது.

மேற்கத்திய சரித்திர ஆசிரியர்கள் கல்ப முறைப்படி காலத்தைக் கணக்கிடும் முறையை மத்திய ஆசியாவில் இருந்த பாபிலோனியர்களின் முறை என்பதால் ஒப்புக் கொள்கின்றனர். கி.பி. 50–ல் கேரளத்தில் குடியேறிய யூதர்களால் இந்தமுறை கேரளத்தில் பரவியது. ஒதுக்கப்பட்டதும், மறக்கப்பட்டதுமான இந்தக் காலக்கணக்கு முறையின் மர்மத்தை விடுவித்தது தாம் தான் என்று கேசரி கூறுகிறார். அந்த முறை பற்றிய அவரது விளக்கம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது:—

ஹிம யுகங்கள் (பனியுகங்கள்) கி.மு. 10,000–ல் முடிவுற்றன. கல்ப காலம் எனப்படும் ஒரு லோகம் சுமார் 12,000 வருஷங்கள் வரையில் இருக்கும். இதற்கு முன்பும் அல்லது பின்பும் பிரளயகாலம் இருக்கும். இந்தக் கல்ப காலத்தின் மத்தியில் சிறு பிரளயமும் இருக்கும். பெரிய பிரளயம் ஏற்பட்ட பிறகு புது லோகம் சமகால அளவில் உண்டாகும். கல்ப கால முறையானது சூரியன், சந்திரன் ஆகியவற்றின் அசைவுகளைக் கொண்டு மட்டும் கணக்கிடப் படுவதில்லை. சுக்கிர கிரகத்தின் அசைவுகளும் கணக்கில் கொள்ள வேண்டும். இந்தக் கணக்கின்படி 122 சூரிய ஆண்டுகளுக்கு ஒருமுறை ஏற்படும் கிரகணம், கல்ப காலக் கணக்கில் முக்கியமானதாகக் கருதப்படுகிறது. இந்த முறைப்படி ஓர் ஆண்டுக்கு 260 நாட்கள்தான் உண்டு. சில நேரங்களில் 130 நாட்கள் மட்டும் உண்டு. வருஷம் என்பது நேரம், இடம் ஆகிய இரண்டையும் குறிக்கும். எனவே காலவருஷம் என்பது நேரத்தையும் மனுஷ வருஷம் என்பது இடத்தையும் குறிக்கும். ஒரு லோகம் – 12,000 வருஷங்கள் – 43,20,000 மனுஷ வருஷங்கள். இந்தப் பழைய காலக் கணக்குமுறை, சில தற்கால சரித்திர ஆசிரியர்களால் ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. உபயோகிப்பதில் கொஞ்சம் மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன. பி.எல். பார்கவா போன்ற சில பேர்கள் சரித்திர ஆதாரங்களைத் தேடும் போது, புராணங்களுக்கு முக்கியத்துவம் அளிக்கிறார்கள்.

கல்ப முறைப்படி கணக்கிடும் வழக்கம் ஐரோப்பாவிலும், எகிப்திலும் இருந்தது. பாலகிருஷ்ண பிள்ளை தமது கட்டுரைகளில் அவைகளை எப்படி உபயோகிப்பது என்பது பற்றிய விளக்கங்களைக் கொடுத்துள்ளார். ஆனால் நிபுணர்கள் அல்லாதவர்களுக்கு இதனை புரிந்து கொள்ள முடியவில்லை. சொல்லப்போனால் பிள்ளையவர்கள் ஏழு காரண வருஷங்களைக் கொடுத்துள்ளார். அவைகள் பழைய கேரளச் சரித்திரத்துக்கும் பொருந்தும் என்று நாம் மேல்போக்காகப் பார்க்கும் வகையில் கூறலாம். ஆரம்ப காலம் கி.மு. 3102 ஆகும். மற்றவைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:—

2) கி.மு. 967
3) கி.மு. 148
4) கி.மு. 56
5) கி.பி. 324
6) கி.பி. 444

முதல் காரண வருஷத்தில், பாபிலோனியா, இந்தியா, சீனா, கிரீஸ், ஹீப்ருக்களின் நாடு, ஆகியவற்றின் பிரளயகாலப் புராணங்கள் அடங்கும் விவிலிய நூலின் பழைய ஏற்பாட்டில் கூறப்படும் நோவா என்ற பெயருடன் ஹீப்ருக்களின் வருஷம் சம்பந்தப்பட்டுள்ளது. இந்தமாதிரியான காரண வருஷங்களை விளக்கமாக பிள்ளையவர்கள் கூறுகின்றார். அவைகளில் அறிமுகமான சிலவற்றை நாம் இங்கு குறிப்பிடலாம். மெக்கன்ஸி கையெழுத்துப் பிரதியில் குறிப்பிட்ட 'கலிவருஷம்', கி.பி. 444 ஆகும். இஸ்லாம் மதத்தைத் தழுவி மெக்காவுக்குச் சென்ற இரண்டாம் குலசேகரப் பெருமாள் 55வது அரசர் ஆவார். ஆனால் அவர், சில சமயங்களில் 56வது பெருமாள் ஆதிராஜன் என்பவராகக் குழப்பத்தில் குறிக்கப்படுவார்.

இந்த வருஷக் கணக்கில் உள்ள சில கூட்டல்களும், கழித்தல்களும், மற்ற முறைகளும், சாதாரண வாசகர்களுக்குப் புரியாது. பாலகிருஷ்ண பிள்ளை முக்கியமான சரித்திர நாயகர்களின் காலத்தைச் சரிபார்த்து குறிப்பிட்ட பழைய வருஷங்களைச் சரியென்றோ அல்லது வேறு என்றோ கூறுகிறார். இப்படியாக அவர் தமது ஆராய்ச்சிக் கட்டுரையில், கேரளத்துக்கு கி.பி. 669–ல் வந்த கானா நாட்டு தாமஸ், பல்லிபான பெருமாள், மாணிக்கவாசகர், திருநாவுக்கரசர் போன்றவர்களைக் குறிப்பிடுகிறார். அதேபோல் ஸ்தாணு ரவி (கி.பி. 859–869) என்பவர், கொல்லத்தில் கிறிஸ்துவர்களுக்கு நிலங்கள் வழங்கியதைப் பற்றியும் கூறுகிறார்.

மற்றுமோர் சுவாரஸ்யமான கதை, பழைய ஏற்பாட்டில் வரும் ஆபிரகாம் பற்றியதாகும். அவரது மனைவி சாரா என்பவள் ஐசாக்கைக்

கருதரிக்கும்போது ஆபிராகாமுக்கு 86 வயதாக இருந்தது என்பதாகும். அப்போதிருந்த கணக்கின்படி ஒரு வருஷத்துக்கு 130 நாட்கள் தான் உண்டு. 365 நாட்கள் இல்லை என்று பிள்ளையவர்கள் கூறுகிறார். அது சரியென்றால் ஐசாக்கைப் பெறும் போது ஆபிரகாமுக்கு வயது 30 ஆண்டுகளாக இருக்கும். இந்தக் கணக்கு ஜஹோவா மீது ஆபிரகாமுக்கு இருந்த உறுதியான நம்பிக்கையைப் பலவீனப்படுத்துகிறது; சாதாரணமாகி விடுகிறது. இதுபோன்ற ஒப்புக் கொள்ள முடியாத மாறுபட்டவைகள் பிள்ளையவர்களின் கண்டுபிடிப்பில் உள்ளன. ஆனால் அவர் தமது வழியில் குறியாக இருந்தார். மற்றவர்களின் எதிர்தாக்குதல் பற்றிக் கவலை படவில்ல. ஏனென்றால் அவர் எந்த ஆதாயத்தையும் எதிர்பார்க்கவில்லை.

## பௌராணிக கேரளா

இரண்டாவது கட்டுரையான பௌராணிக கேரளாவில் (புராதன கேரளா), பௌராணிக பாரதத்தின் பின்னணியைத் தருகிறார். பௌராணிக பாரதத்தின் காலம் கி.மு. 3102 முதல் கி.மு. 967 வரையில் ஆகும். பழங்கால பாரதத்தின் காலம் கி.மு. 967 முதல் கி.பி. 1169 வரையில் ஆகும். கேரளத்தின் பௌராணிகக் காலம் எட்டு "மன்வந்த்ரா" அதாவது "சூர்ய சவர்னி"யுடன் தொடங்குகிறது. இவைகளைப் பற்றி ஆரம்பத்திலேயே கட்டுரைகள் எழுதி மாத்ரூ பூமியில் பிரசுரித்தார். ஆனால் சிலபாகங்கள் பின்பு தவறு என்று நிரூபிக்கப்பட்டன. பிள்ளையவர்கள் தமது தவறுகள் சுட்டிக் காட்டப்பட்ட போது, அவைகளைத் திருத்திக் கொள்ள மனம் வருந்தியதில்லை.

இந்தியாவில் தெற்குப்பாகம் பற்றிக் கூறும்போது, பாண்டி நாடு "மதுர்" என்றும் "சல்வர்" என்றும் பல பெயர்களால் அழைக்கப்பட்டது. அதேபோல் கேரளாவும் "விதர்பம்", "மத்ஸ்யம்", "விராடம்", "விதிசா" "கருஷம்" என்ற பெயர்களால் அறியப்பட்டிருந்தது. இந்த மாற்றுப் பெயர்கள் தெரிந்திருந்தால் தான் நாம் கேரளத்தின் பழைய சரித்திரத்தைத் தெரிந்து கொள்ள முடியும்.

புராணத்தில் அரசன் 'கருஷா' என்பவன் 'இட்சுவாகு' அரசனின் தம்பி என்பதை அறிவோம். பாகவதப் புராணத்தின்படி இந்த மாவீரன், வடக்கை, தெற்கத்திய படையெடுப்புகளிலிருந்து காத்தான். 'ஹேமசந்திரன்' என்பவர் தமது "அபிதான சிந்தாமணி" என்ற நூலில் "பிரிஹத் கிரிகம்" என்ற வார்த்தை 'கருஷம்' என்பதற்குச் சரியான வார்த்தை என்று கூறுகிறார். "பிரிஹத் கிரிகம்" செந்தமிழில் "பெ[illegible] படைப்பு" என்று கூறப்படுகிறது. இது கொச்சியின் அரச பரம்பரை[illegible] புராண வரலாறு ஆகும்.

தற்கால கேரள மக்கள் "கொடுங்கல்லூர் காளிதேவியை" வணங்குவதைப் போன்று, முற்கால கேரள மக்கள் "அபிசாரிகா (ரதி) தேவியை" வழிபட்டனர். "அபிசாரா" என்றால் மீன் என்றும் பொருள்படும். "கேரலோல்பதி"யின் படி "கொளத்திர்"மக்கள் "கருஷாக்கள்" என்றும் அழைக்கப்பட்டனர். அவர்களும் மத்ஸ்ய ஸ்வரூபர்களே.

தற்கால கேரளத்தின் யஜுர்வேத நம்பூத்திரிகள், திருமண சமயத்தில் மணமகளும், மணமகனும், "மனத்து கன்னி" என்ற சடங்கின்படி பலவிதமான மீன்களைப் பிடிக்கிறார்கள். தமது பொது கொள்கையை நிலை நாட்ட பிள்ளையவர்கள் இதுமாதிரியான அநேக விசித்திரமான, சுவாரஸ்யமான பழக்கங்களை எடுத்துக் காட்டுகிறார்.

## அவந்தி சுந்தரி கதை

தண்டியால் எழுதப்பட்ட "அவந்தி சுந்தரி கதா" என்ற நூலை கேரளம் கண்டுபிடித்துள்ளது. தண்டி என்பவர் "காவ்யதர்சம்" "தசகுமார சரித்திரம்" என்ற நூல்களின் ஆசிரியர். பிள்ளையவர்கள் "அவந்தி சுந்தரி கதா" என்ற நூலின் ஆசிரியரான தண்டி, புகழ்பெற்ற தண்டி அல்ல, மாறாக அவர் தண்டியின் மாணவரான "அவந்தி சுந்தரி" என்பவர் ஆவார் என்று கூறுவார். பிள்ளையவர்களின் கூற்றுப்படி புகழ்பெற்ற தண்டி, தமிழ் மொழியின் அகராதியைத் தொகுத்தவர் ஆவார்.

"பாசா", "கௌடில்யா", ஆகியோர் முற்கால கேரளத்தில் நூலாசிரியர்களாக இருந்தவர்கள் என்று பிள்ளையவர்கள் கூறுகிறார். பிள்ளையின் கூற்றுப்படி "தூதவாக்யம்", "தூததோல்கச்சம்", "ஊருபங்கம்", ஆகிய துன்பியல் நூல்கள் "பாசா" வால் எழுதப்பட்டவையாகும். இவைகள் "ஸ்போகிள்ஸ்" எழுதிய "ஒடிப்பஸ்" நாடகங்களைப் பிரதிபலிக்கின்றன. "பாசா"வின் நாடகங்களின் கதாநாயகன் "துரியோதனன்" ஆவான். அவன் மிக்க இறுமாப்புள்ளவன். கிரேக்கத் துன்பியல் கதைகளில் வரும் கதாநாயகர்கள் போன்று அவன் புகழின் உச்சியை ஏறக்குறைய அடைகிறான். பிள்ளையவர்களின் கூற்றுப்படி "பாசா" கேரளத்தைச் சார்ந்தவர்.

"பாசா" புகழ்பெற்றதைப் போன்று விஷ்ணுகுப்தரும், 'அர்த்த சாஸ்திரத்தை' எழுதிப் புகழ் பெற்றார். பாசாவும், கௌடில்யாவும், "பிண்டிதடங்கன்" என்ற இடத்தில் பிறந்தவர்கள். "பீமன் சாலிவாகனா" என்ற அரசனது அவையில் இருந்தவர்கள். இவர்கள் "பௌராணிக கேரள" காலத்தில் வாழ்ந்தவர்கள் என்று பிள்ளையவர்கள் எண்ணினார். ஆனால் தற்போது நாம் அறிந்த வரையில் அவர்களைக் கேரளத்து குடிமக்கள் என்று கருதுவது தவறு.

பாலகிருஷ்ண பிள்ளை, பழங்கால கொள்கைகளை மாற்றுவதிலும், பழைய கதாபாத்திரங்களை புது அமைப்பில் வைப்பதிலும், மாற்றுவதிலும், பூகோளம் சரித்திரம் ஆகியவற்றை தமது சொந்த விருப்பப்படி மாற்றியமைப்பதிலும், ஆனந்தம் கொண்டார் எனலாம். அவரைப் பொறுத்தவரையில் மஹாவிஷ்ணு, ஸ்ரீபரமேஸ்வரன், மற்ற கடவுள்கள் எல்லாம் அவதாரங்கள் அல்ல; ஆனால் அவர்கள் சரித்திரக் கதாபாத்திரங்கள் ஆவர். சில சமயங்களில் இரண்டு அல்லது மூன்று கடவுள்கள் ஒன்றாவார். மற்ற நேரங்களில் ஒரு கடவுள் இரண்டு அல்லது மூன்று கடவுள்களாக மாறுவார்கள். இந்தக் கூற்றுகள் எல்லாம் சதியின் பின்னணியில் வந்தவையாகவும், வேடிக்கையாகவும் உள்ளன. ஆனால் அவை தொடர்ச்சியாகவும், நியாயப்படுத்துபவையாகவும் இல்லை.

## ஒரு முக்கிய புராணக்கதை

மூன்றாவது "பறைய பெட்ட பன்திரு குலம்" என்ற நீண்டதோர் கட்டுரையாகும். இது எல்லாருக்கும் தெரிந்த கதைதான். "பறைய" என்ற தாழ்ந்த குலப் பெண்ணுக்கும், "வராருசி" என்ற பிராமண அர்ச்சகருக்கும் பிறந்த பன்னிரண்டு பலதரப்பட்ட சாதிகளைப் பற்றிய கதையாகும் இது. இந்தப் "பறைய" அல்லது பறைச்சி என்ற தாழ்ந்த குலப் பெண்ணுக்குப் பன்னிரண்டு குழந்தைகள்.

1) மேழதோல் அக்னி ஹோத்திரி – வராருசியின் முதல் பிள்ளை, ஒரு நம்பூத்திரி.
2) ராஜகன் – பிரபாகர மிஸ்ராவுக்கு மற்றொரு பெயர் சலவைத் தொழிலாளி
3) வயில்லகுன்னிலப்பன் ( பட்ட நாராயணா)
4) வதுல நாயர் – (வதுல என்பது எர்ணாகுளம் அருகில் உள்ள இடம்)
5) திருவரங்கத்து பாணன் – (இசைவாணர் சாதி)
6) நாராயணத்து பிரந்தன் – (பைத்தியக்காரன்) இந்த ஆறுபேரும் பிள்ளையின் கூற்றுப்படி இந்துக்கள்.
7) அகவூர் சாத்தன்.
8) பக்கனார்.
   இந்த இருவரும் பிள்ளையின் கூற்றுப்படி 'சக்தேய' மதத்தைச் சார்ந்தவர்.
9) உலியன்னூர் தச்சன் (உலியன்னூரில் இருந்த புகழ் பெற்ற தச்சன்)
10) உப்புக் கோட்டன்.
   பிள்ளையவர்களின் கூற்றுப்படி இந்த இரண்டு பேர்களும் கிறிஸ்தவர்கள்.

11) வல்லோன் – புத்தமதத்தினன், ஆற்றுமீன் பிடிப்பவர் குலம்.

12) காலைக்கால் மாதா – ஒரு ஜைனப் பெண்.

பாலகிருஷ்ண பிள்ளை இவைகளை விவரமாக எழுதுகிறார். தற்காலம் கேரளத்தில் வழக்கத்தில் உள்ள கதைகளை அவர் விட்டுவிடுகிறார். உதாரணத்துக்கு 'உலியனூர் தச்சன்' அல்லது 'பெரும் தச்சன்' என்பவர் கி.பி. 639ல் கேரளத்துக்கு தமது குழுவினர்களான வெள்ளைக்கார சிரியன் கிறிஸ்தவர்களுடன் வந்த கானா நாட்டு, 'தாமஸ்' என்பவர்தான் என்று அவர் கூறுகிறார். இந்தப் பெரும் தச்சன் தான் 43ம் பெருமாள் என்பவரை கிறிஸ்தவ மதத்துக்கு மாற்றியவர். அடுத்து வந்த பெருமாள் நல்ல கட்டடக் கலைஞரான தாமஸை தமது பொதுப்பணித்துறையின் மந்திரியாக நியமித்துக் கொண்டார். அவர்தான் அரண்மனைகளையும், கோயில்களையும் கட்டுவதை அந்தக் காலத்தில் மேற்பார்வையிட்டவர். ஆல்வேயிலும் சுற்றுப் புறத்திலும் வசித்து வந்த கிறிஸ்தவர்கள் அவரை ஒரு கடவுளின் அம்சமாகவே கருதினர். அவர்தான் அங்குள்ள மக்களுக்கு மரம் அறுக்கவும், வெட்டவும் கத்தியை உபயோகிக்கக் கற்றுத் தந்தவர்.

பக்கானர், அல்லது பாணன் என்ற பெயர், பாடும் குலத்தவரைக் குறிக்கும், கடந்த 40 ஆண்டுகள் வரையில் கேரளக் கிறிஸ்தவர்கள் வீட்டுக் கல்யாணங்களில் பாணன், கல்யாணப் பந்தலில், பழைய கிறிஸ்தவர்களின் பெருமைகளைச் சொல்லிப் பாடும் பழக்கம் இருந்துள்ளது. அதற்காக அவனுக்கு உணவும், பரிசுப் பொருள்களும் தரப்பட்டன. இந்தப் பாட்டுப் பாடும் சம்பிரதாயம் முடிந்த பின்புதான் விருந்தினர்களுக்கு உணவு பரிமாறப்படும்.

நரநாத்து பிரன்தன் என்றால் நரநாத்து பைத்தியம் என்று பொருள்படும். அவன் உண்மையில் பைத்தியம் அல்ல. அவர் ஒரு சிந்தனையாளர். "கிரகசாரணி பந்தனா" என்ற சோதிட நூலை எழுதியவர். அகவூர் சாத்தன் என்பவரும் புகழ் பெற்ற கல்விமான், மக்களிடையே பரவியிருந்த கதைகள் பற்றி பிள்ளையவர்கள், அந்தக் கதாபாத்திரங்கள் பற்றி தமது சொந்தக் கருத்தைக் கொண்டிருந்தார். வராருச்சி என்பவர் குமரில்ல பட்டர் என்றும், பன்னிரண்டு குழந்தைகள் உண்மையில் அவரது சீடர்கள் என்றும் கூறுவார். அந்தக் கதை கேரளத்தில் அந்தக் காலத்தில் நிலவி வந்த சமூக ஒற்றுமையைக் குறிக்கிறது என்றும் விளக்குவார். இந்தக் கதைக்கு இலக்கிய முக்கியத்துவம் கொடுத்து அவர் பேசுவார்.

மதுரையில் இருந்த தமிழ்ச்சங்கங்கள் கி.பி. 498 – 817 வரையில் இருந்தன என்பது பிள்ளையவர்களின் கணிப்பு. அவர் சில ஊர்களின் பெயர்களையும் அவைகளின் மாற்றங்களையும் குறிப்பிடும்போது அவர் செய்த தந்திர வித்தைகளைக் கண்டு நாம் குழம்பிப்போவோம்.

இதற்கு ஓர் உதாரணம் தரலாம். 'மலையமான் நாடு' என்பதற்கும், 'மலடு நாடு' என்பதற்கும் 'நடு நாடு' என்பது பொதுப் பெயர். கதைகள் கல்வெட்டுகளின்படி அதை 'மகத மண்டலம்' என்றும் குறிப்பிடலாம். இந்த 'மகதநாடு' தற்போதைய தமிழ்நாட்டைச் சார்ந்த "மகத மண்டலம்" தான் என்பது பிள்ளையவர்களின் கூற்று:

## சங்கரரும் காலடியும்

கேரளத்தில் சில இடங்கள், கிராமங்களில் நிலவிய பரம்பரை வழக்கங்களைப் பொறுத்து பெயரிடப்பட்டுள்ளன. இதனால் சில சரித்திர நாயகர்களின் பிறந்த ஊர்களின் பெயர்களைக் குறிப்பிடும் போது குழப்பம் ஏற்படுகிறது. பழைய திருவாங்கூர் ராஜ்யத்தில் இருந்த 'கொல்லம்' என்ற ஊரை இதற்கு உதாரணமாகக் கூறுகிறார். அதே போன்று கொச்சி ராஜ்யத்தில் சேந்தமங்கலம் என்ற இடத்திலும் ஒரு 'கொல்லம்' உண்டு. உண்மையில் 'கொல்லம் ஆண்டு' என்பது பின்னால் கூறப்பட்டதைக் குறிக்கும். முன்னே சொல்லப்பட்டதையல்ல என்று அநேகம் பேர் நம்பினர்.

'காலடி' என்ற பெயரில் இரண்டு ஊர்கள் உள்ளன. காலடி என்பது அத்வைதத்தைப் போதித்த ஆதிசங்கரர் பிறந்த இடம் என்று யாவரும் அறிவர். சங்கரர் பிறந்த 'காலடி' என்ற கிராமம் பெரியார் நதிக்கரையில் உள்ளது என்று நம்பப்படுகிறது. பாலகிருஷ்ண பிள்ளை இது தவறு என்பதை நிரூபிக்கப் பல ஆதாரங்களைக் காட்டுகின்றார். உண்மையில் 'பொன்னை' நதியின் தென்கரையில் உள்ள 'திருநாவே' என்ற ஊருக்கு அருகில் உள்ள 'காலடி' என்ற ஊர்தான் சங்கரர் பிறந்த இடம் என்று அவர் கூறுகிறார். அதேபோல் சங்கரர் 33-ம் வயதில் மோட்சமடைந்தார் என்பதையும் அவர் மறுத்துக் கூறுகிறார். சங்கரர் 'தேவிஸ்தோத்திரம்' எழுதிய போது அவருக்கு வயது 85 என்று பிள்ளையவர்கள் கூறுகிறார். அவர் கணக்குப்படி கி.பி. 976-ல் தான் சங்கரர் மோட்சமடைந்தார்.

சரித்திரப் புகழ் பெற்ற 'காந்தளூர் சாலை' போன்ற ஊர்களின் பெயர்கள் பற்றி ஆராயும் போது ஒரே மாதிரியான பெயருள்ள இரண்டு ஊர்கள் இருந்ததால் உண்மையான சரித்திரப்புகழ் பெற்ற ஊர் எது என்பதையும் பிள்ளையவர்கள் ஆராய்ந்து கூறியுள்ளார்.

அவர் கூற்றுப்படி காந்தளூர் சாலை என்பது திருவனந்தபுரம் நகரத்தில் உள்ளதன்று. சேந்தமங்கலம் அருகில் உள்ள காந்தளூர் சாலை தான் சரித்திரப் புகழ்பெற்றது என்று கூறுவார். அதேபோல் செயிண்ட் தாமஸ் என்பவர் செயின்ட் தாமஸ் மவுண்ட் என்ற இடத்தில் கொல்லப்பட்டு சென்னையில் உள்ள மயிலாப்பூரில் புதைக்கப்பட்டதையும்

அவர் நம்பவில்லை. அவரது கூற்றுப்படி இந்த இரண்டு இடங்களும் உடுமலைப்பேட்டையில் உள்ளன. இதுமாதிரி கட்டுகதைகளைப் பரப்பியதற்கு அவர் போர்த்துக்கீஸிய மக்களைக் குற்றம் சாட்டுகிறார்.

## தாலமியின் தென்னிந்தியா

பதினாறாம் நூற்றாண்டு வரையில் ஐரோப்பிய பள்ளிகளில் தாலமியின் பூகோளபுத்தகங்கள் பாடமாக வைக்கப்பட்டிருந்தன. அவர் பூகோளத்தில் மட்டுமின்றி, கணிதம், வான சாஸ்திரம் ஆகியவற்றிலும் சிறந்தவர். அவர் சூரியனும் மற்ற நட்சத்திரங்களும் பூமியைச் சுற்றி வருகின்றன என்று நம்பினார். இந்தக் கொள்கை கோபர்நிக்கஸ் (1473 – 1543) என்பவரால் தவறு என்று நிரூபணம் செய்யப்பட்டது. தாலமி என்பவர் பூகோள சாஸ்திரத்தில் முக்கியமான வேலை செய்திருந்த போதிலும் அவரை ஒரு பூகோள சாஸ்திரி என்பதைவிட தேசப்படங்கள் வரைவதில் சிறந்தவர் எனலாம். தாலமி தமது கொள்கைக்காக எடுத்துக் கொண்ட இந்தியா, அதிலும் குறிப்பாக தென்னிந்தியா பற்றிய விஷயங்களை, பாலகிருஷ்ண பிள்ளை தமது நீண்டதோர் கட்டுரையில் ஆராய்ந்து எழுதியுள்ளார். அவர் பல பழைய ஆவணங்களையும், மலைகள், ஊர்கள் பற்றிய பெயர்களையும், அவைகளின் மாற்றங்கள் பற்றியும் இதற்காகக் கூறுகின்றார். அதில் வரும் அநேக தவறான விஷயங்கள் தாலமியின் கண்டுபிடிப்பில் நுழைந்துவிட்டன என்பதையும் விளக்குகிறார். பழையகால, 'கேரள புத்திர ராஜ்யம்', தற்கால 'காசர்கோடு' என்ற இடத்திலிருந்து அம்பலப்புழாவில் உள்ள "புறாக்காடு" என்ற இடம் வரை பரவியிருந்தது. இந்தப் பழைய கேரள ராஜ்யம், நீலகிரி, கோயம்புத்தூர், சேலம், திருச்சிராப்பள்ளியின் ஒருபகுதி, மதுரையின் ஒருபகுதி ஆகியவற்றை உள்ளடக்கியது. 'தமிழகம்' என்பது தாலமியால் 'டிமிரைக்' என்று குறிப்பிடப்பட்டது. பாலகிருஷ்ண பிள்ளை இவ்வாறு பல விவரங்களைத் தருகிறார். தமது கருத்தை வலியுறுத்த இவைகளைத் தவறு என்று மற்றவர்கள் கூறினாலும் அவர் அவைகளைப் பயன்படுத்திக் கொள்கிறார். ஆராய்ச்சியாளர்கள் இவரது கொள்கைகளை ஒப்புக் கொண்டாலும், ஒப்புக் கொள்ளாவிட்டாலும் தாம் சேகரித்த பல விஷயங்களைத் தருகிறார். இவைகள் பிற்கால மாணவர்களுக்குப் பயன்படலாம்.

சேர ராஜ்யம் பற்றிய சுவையான கட்டுரை ஒன்று உள்ளது. ஆழ்ந்த ஆராய்ச்சிக்குப்பின் பாலகிருஷ்ண பிள்ளை "சப்த கொங்கணங்கள்" என்ற ஏழு பிரிவுகளை கூறுகிறார். அவைகள், பர்பரா, சௌராஷ்டிரா, கரஹாட்டம், கொங்கணம், கர்நாடகம், துளுவம், கேரளம், எனப்படும். சங்கநூல்கள் (498 – 817) வஞ்சியை சேர ராஜ்யத்தின் (கேரளம்) தலை நகராகக் கூறுகின்றன. பழைய தமிழ் அகராதியில் 'வஞ்சி' என்பதற்கு

ஐந்து அர்த்தங்கள் கூறப்படுகின்றன. இந்த அர்த்தங்களைக் கொண்டு தலைநகரைக் கண்டறியலாம். தலைநகரம், அவ்வப்போது மாற்றப்பட்டிருக்கக்கூடும்.கரவூர் மஹோதயபுரம், திருக்கணமதிலகம், திருவஞ்சிக்குளம் முதலியன ஆராய்ச்சியில் தெரிய வருகின்றன.

மற்றொரு முக்கியமான கட்டுரை, புத்தமதமும் கேரள மக்களும் என்பதைப் பற்றிக் கூறுகிறது. பழைய கேரளத்தில் புத்தமதம் பரவியிருந்தது என்பதற்கான ஆதாரங்களைக் கூறுகிறது. தற்கால கேரளத்தில் உள்ள அநேக தாலுக்காக்களில் புத்தமதத்தின் சின்னங்களைக் காணலாம். நான்கு முக்கியமான புத்தமதக் கோயில்கள் இங்கு இருந்தன. ஒன்று கொடுங்கல்லூர் பகவதி கோயிலுக்கு அருகில் உள்ள புத்த ஸ்தூபி ஆகும். இரண்டாவது சபரிமலைக்கு வடகிழக்கே 18 மைல் தூரத்தில் இருக்கும் குகைக் கோயிலாகும். கொடுங்கல்லூரில் புத்த சைத்திய கிரிஹா (பலிபீடம்) அருகில் ஒரு மசூதி உள்ளது. நான்காவதாக கொடுங்கல்லூர் தாலுக்காவில் ஆழிக்கோடுக்கும், கொட்டிபுரத்துக்கும் இடையே ஒரு கோயில் இருக்கிறது. கொடுங்கல்லூரில் இருக்கும் புத்த ஸ்தூபி பற்றி சீன யாத்திரிகர் 'யுவான் சுவாங்' குறிப்பிட்டுள்ளார். பதனம்திட்டா ஜில்லாவுக்கு வடகிழக்கில் இருக்கும் கரளிமலையில் இருந்த புத்த கோயிலைப்பற்றி விவரிக்கின்றார். புகழ்பெற்ற சபரிமலை கோயில், பௌத்தம், மற்றும் முஸ்லிம் மதத் தொடர்பு கொண்டது. பாலகிருஷ்ண பிள்ளை இப்படிப் பல தகவல்களைத் தருகின்றார். இதனால் புத்தமதத்தின் தாக்கம் கேரளத்தில் இருந்ததை அறியலாம்.

இந்த நூலின் கடைசி கட்டுரை மதுரையில் இருந்த தமிழ்ச் சங்கம் பற்றியது. பாலகிருஷ்ண பிள்ளை, சங்கத்தின் தோற்றம், காலம் ஆகியவற்றைப் பற்றி கூறும் செய்திகள் சர்ச்சைக்குரியவை. பிள்ளையவர்கள், பாண்டிய, சேர, சோழ, பல்லவ நாடுகளில் இருந்த சங்கங்கள், "சாஹித்திய பரிஷத்" என்ற அமைப்பைப் பின்பற்றி தோன்றியவை என்று கூறுகிறார். இந்த "சாஹித்திய பரிஷத்", உஜ்ஜெயினியில் மகாகவி காளிதாசரது, வேண்டுகோளின்படி, விக்கிரமாதித்திய ராஜனால் (கி.பி. 476 – 502) தோற்றுவிக்கப்பட்டது. நாம் முன்பே கூறியபடி தமிழ்ச் சங்கத்தின் காலத்தை கி.பி. 498 – 817 என்று நிரூபிக்க அவர் முயன்றார். வையாபுரிப் பிள்ளை என்ற தமிழறிஞரும் ஏறக்குறைய இந்தக் காலத்தையே குறிப்பிடுகின்றார்.

ஆனால் பல தமிழறிஞர்கள் சங்ககாலத்தைப் பல நூற்றாண்டுகள் பின்னோக்கித் தள்ளியிருக்கிறார்கள். பிள்ளை இதனை ஏன் இப்படி என்று வினாவுகின்றார். அவர் தமது கணிப்பை, 'கல்ப கணித' முறைப்படி கூறுகின்றார்.

மூன்று தமிழ்ச்சங்கங்கள் இருந்தன. "இறையனார் அகப்பொருள்" என்ற நூலிலும் அதன் உரையிலும், இவைபற்றிய பல உண்மைகள் கூறப்பட்டுள்ளன. அதிலிருந்து எடுத்த ஒரு முக்கியமான பாடலை அவர் மலையாளத்தில் மொழிபெயர்த்திருக்கிறார். பல தமிழ்ச் சங்கங்களில் இருந்த புலவர்களின் பெயர்களை அவர் பட்டியலிட்டுக் காட்டுகிறார். அதுபோலவே அப்போது ஆண்ட அரசர்களின் பெயர்களையும் அவர்கள் ஆண்ட ஆண்டுகளையும் ஒரு பெரிய பட்டியலில் அவர் தருகின்றார்.

இத்துடன் "சரித்திரத்தின்டே ஆதிவேருகள்" என்ற இணைப்பையும், பிள்ளையவர்கள் வெளியிட்டுள்ளார். அதில் கி.மு. 170 முதல் கி.பி. 1036 ஆண்ட அரசர்களின் பெயர்களைக் குறிப்பிட்டுள்ளார். அவர் "மெக்கன்ஸி மானஸ்கிரிப்ட்ஸ்" , "மூஷிக வம்ச காவியம்" என்பனவற்றையும் குறிப்பிடுகின்றார். அத்துடன் 58 பெருமாள்கள் பற்றியும் அவர்கள் ஆண்டகாலம் பற்றியும் விவரிக்கின்றார்.

பாலகிருஷ்ண பிள்ளையால் எழுதப்பட்டு மலையாள சஞ்சிகைகள், ஆங்கில பத்திரிக்கைகள் ஆகியவற்றில் வெளியிடப்பட்டுள்ள கட்டுரைகளின் நூல் பட்டியல் மிகவும் உபயோகமாக உள்ளது. மொத்தம் 119 கட்டுரைகள் உள்ளன. அவைகளில் 12 ஆங்கிலத்தில் உள்ளன. அந்த நூலின் இறுதியில் ஐந்து தேசப்படங்களும் உள்ளன. இந்த நூலில் குறிக்கப்பட்டுள்ளவை பிள்ளையவர்கள் எழுதியதில் பத்தில் ஒரு பங்காகும். சில கட்டுரைகளில் கருத்துக்கள் மீண்டும் மீண்டும் கூறப்பட்டுள்ளன. ஆனால் அவைகள் திருத்தியும், மாற்றியமைக்கவும் பட்டிருக்கின்றன.

அவரது காலத்தில் எழுதப்பட்ட கீழ்கண்ட விஷயங்களைப் பற்றிய கட்டுரைகள் அவரது ஆராய்ச்சித் திறனையும் கடின உழைப்பையும் எடுத்துக் காட்டுகின்றன:

சிந்துவின் நாகரிகம்
இலங்கை எங்கே
இந்தியாவின் ஒன்பது தீவுகள்
பழைய இந்தியாவின் சிற்பங்கள்
தீயர்களின் பிறப்பிடம்
பாவபுதியும் கேரளமும்
கேரளம் 8000 ஆண்டுகளுக்கு முன்பு
சிலப்பதிகாரக் காலம்
இரண்டு கேரளங்கள்
செயின்ட் தாமஸ்ஸும் தென்னிந்தியாவும்
தமிழின் பழைய பெண்பாற்புலவர்கள்

பெண்கள் சிறப்பாக ஆண்ட இடம்
மேற்காசியாவில் சக்தி வழிபாடு
மேற்காசியாவில் தாய்வழிவம்சமுறை
பாபிலோனிய நாகரிகம்
கொல்லம் ஆண்டின் ஆரம்பம்
செயின்ட் தாமஸ் – ஒரு சரித்திர பின்னணி
பழைய சீனாவின் கல்ப வருஷமுறை
ஸ்ரீகிருஷ்ணனின் காலம்
பழமையான திராவிட மொழி
இந்தியாவும் அரேபியாவும்
சக்தியாத்ரன்
பழைய கேரளத்தின் தலைநகரம்
காளிதாசனின் பிறப்பிடம்
ஹீப்ரூக்களின் கல்ப கணிதம்.

பழங்காலம் பற்றிய விஷயங்களில் பாலகிருஷ்ண பிள்ளைக்கு இருந்த அறிவு பரந்தும், ஆச்சரியப்படத்தக்கதாகவும் இருந்தது. அவருக்குக் கைரேகை சாஸ்திரத்திலும், பிக்காஸோவின் ஓவியங்களிலும் ஈடுபாடு அதிகம். பிளாஸ்டிக், வரைகலை, பற்றிய பிள்ளையின் கட்டுரைகள் விரைவில் நூலாக வெளிவர இருக்கின்றன. அவருக்குத் தமிழிலும் சமஸ்கிருதத்திலும் புலமை இருந்தது. அவர் பழைய நூல்களையும், ஆவணங்களையும் கையெழுத்துப் பிரதிகளையும் கட்டுரைகள் எழுத மிகவும் பயன்படுத்திக் கொண்டார். நாட்டுப்புறக் கதைகளுக்கும், புராணக்கதைகளுக்கும் முக்கியத்துவம் கொடுத்தார். இவைகள் எல்லாவற்றையும் தமது ஆராய்ச்சிக்குப் பயன்படுத்திக் கொண்டார்.

பிள்ளையவர்களின் தனித்தன்மை, அவரது உள்ளுணர்வாலும், கற்பனையாலும் ஆக்கப்பட்டது எனலாம். அவரது கண்டுபிடிப்புகள் பலதரப்பட்டவை. எனவே அவைகளை ஒருங்கிணைத்து ஒன்றாக்குவது என்பது சிரமமான காரியம். அவரது வாதத்திற்கான விஷயங்களும், கொள்கைகளும் தற்காலத்தில் சோதித்துப் பார்க்காமல் எடுத்துக் கொள்ள முடியாது என்றாலும் அவர் ஆராய்ச்சிக்கான பல பாதைகளை தமது வழித் தோன்றல்களுக்கு ஏற்படுத்திக் கொடுத்துள்ளார் என்பதையும், புராதன சரித்திர நிகழ்ச்சிகளையும், பழைய சரித்திர சம்பவங்களையும் தெரிந்து கொள்ள வேண்டும். இறுதியில் பாலகிருஷ்ண பிள்ளையின் ஆராய்ச்சிகள் விசித்திரமானதாகவும், அசாதாரணமானதாகவும், பலதரப்பட்டனவாயும் இருப்பதோடல்லாமல், ஒரு சாதாரண ஆராய்ச்சியாளருக்கு, ஒரு நூற்றாண்டுக்கான பற்பல ஆராய்ச்சி விஷயங்களைத் தரும் அளவுக்கும் அமைந்துள்ளன என்றும் கூறலாம்.

# 6. முடிவுரை

பாலகிருஷ்ண பிள்ளை போன்ற பல்கலை வல்லுனரின் அறிவாற்றலையும், பண்பாட்டுத்துறையில் அவர் ஆற்றிய அரும்பெரும் செயல்களையும் கூறுவதென்பது சுலபமல்ல. இது வரையிலும் நாம் அவரது வாழ்க்கையில் நடந்தவற்றை மேற்போக்காகவே பார்த்தோம். ஆசிரியராகவும், வழக்கறிஞ ராகவும், பத்திரிக்கை ஆசிரியராகவும், எழுத்தாளராகவும் ஆராய்ச்சியாளராகவும் அவர் ஆற்றிய பணியும் எல்லாவற்றிற்கும் மேலாக இலக்கிய விமர்சகராக அவர் ஆற்றிய பணிகளைப் பற்றியும் கூறினோம். அவர் அநேக முற்போக்கு எழுத்தாளர்களை ஊக்குவித்தார். அவர்களை நல்ல முறையில் வழிநடத்திச் சென்று அவர்களை உருவாக்கினார். பிரச்சினைகளை அணுகி அவைகளுக்கும் பணிந்து போவதைவிடத் தனது கொள்கைக்காகப் போராடும் இதிகாச நாயகராக அவர் விளங்கினார். இவரது மனம், எண்ணம், எழுத்து, காரியம் ஆகியவற்றில் சுதந்திரமாகச் செயல்படுவதில் முனைப்பாக இருந்தது. உண்மையில் அவர் ஒரு கற்றறிந்த அறிவாளி. மக்கள் அவரை ஒரு செயல்வீரர் என்று எண்ணவில்லை. ஏனென்றால் அவர் தமது ராஜ்ஜியத்துக்கும், இந்தியாவுக்கும், விடுதலை வேண்டி காரசாரமாக எழுதினாலும் அவர் தம்மைக் கைது செய்ய வேண்டவில்லை. சிறைச்சாலைக்கும் போகவில்லை. அவர் உடலாலும் பொருளாதாரத்தாலும் மிகவும் கஷ்டப்பட்டார். நோயிலும், பலவீனத்திலும் அவர் தைரியத்தை இழக்கவில்லை. அவர் கேசரி என்ற பெயர் தாங்கிய உடலுடன் சிறிய இடத்தில் வாழ்ந்து வந்தார். ஆனால் கற்பனை மிக்க கேசரியாக மனதால் ஜெட் விமான வேகத்தில் உலகின் பல பாகங்களுக்கு வேகமாகப் பயணம் செய்தார். அவரை நன்றாகவும், நெருக்கமாகவும் அறிந்தவர்களுக்கு அவர் எப்படிக் காட்சியளித்தார் என்பதைப் பார்க்கலாம்.

மெலிந்த தேகம், சிவந்த நிறம், வெண்மையான தாடி தவழும் முகம் இவைகளைக் கொண்ட ஒருவர் துணி நாற்காலியில் அமர்ந்து கொண்டு ஃபிராய்டின் மனப் பகுப்பாய்வு கொள்கை பற்றியும் அதனை எப்படிக் கதைகளில் கொண்டு வருவது என்பது பற்றியும் தம் முன் கூடியிருக்கும் அன்பர்களிடம் பேசிக் கொண்டிருக்கிறார். கூடவே, புராதனக் கண்டுபிடிப்புகள் பழமைக் கொள்கைகள் இலக்கியங்கள் ஆகியவற்றைப்

பற்றியும் அவர்களிடம் பேசுகிறார். நான்காம் அத்தியாயத்தில் "கேசரி குழு" என்பதைப் பற்றிக் கூறினோம். கேசரியின் அறிவு மட்டும் இளைஞர்களைக் கவரவில்லை. அவருடைய நேர்மையும், அறிவு செறிந்த யதார்த்த குணமும், தைரியமான திட நம்பிக்கையும், கவர்ச்சியானத் தோற்றமும், மனிதத் தன்மையும், அவர்களைக் கவர்ந்தன. இத்தனை குணநலன்களைப் பெற்றிருந்த ஒருவர்தான் தலைவராகிறார். அவர் இளைஞர் மத்தியில் அன்பையும், மதிப்பையும் பெறுகிறார்.

**மறுமலர்ச்சியின் வேகம்**

பாலகிருஷ்ண பிள்ளை இலக்கியத்திற்கு ஆற்றிய தொண்டையும், அவரது நவீன கொள்கைகளையும் எடை போட வேண்டுமானால் நாம் அவர் வாழ்ந்த காலத்தில் அவர் வசித்த ராஜ்யம், இந்தியநாடு ஆகியவற்றின் பின்னணியைத் தெரிந்து கொள்ள வேண்டும். ஒருவர் எவ்வளவுதான் பெரியவராக இருந்தாலும், அவரைச் சுற்றியிருக்கும் சமூகம்தான் அவரை உருவாக்குகிறது. சிலர் சமூகத்தின் ஒரு பாகமாகவே இருக்கிறார்கள். அவர்கள் அந்தச் சமூகத்துக்கு நல்ல நோக்கங்களைக் காட்டுகிறார்கள் என்பதும் உண்மை. 19-ம் நூற்றாண்டில் இந்தியக் கல்விமுறை சூழ்நிலைக்கு ஏற்ப உண்டான மாறுதலை ஏற்றுக் கொண்ட முதற் கட்டத்தில், மேற்கத்திய கல்விமுறை இங்கே புகுத்தப்பட்டது. புதுப்பாடத்திட்டங்களும் வகுக்கப்பட்டன. 19-ம் நூற்றாண்டின் பின் இரண்டாம் பாதியில் அநேக இந்திய எழுத்தாளர்கள் ஆங்கிலம், மற்றும் ஐரோப்பிய இயக்கங்களால் கவரப்பட்டார்கள். மலையாளமும் இந்தப் புது எழுச்சியில் பங்கு பெற்றது. இந்தச் சந்தர்ப்பத்தில் பாலகிருஷ்ண பிள்ளையின் குருவான ராஜராஜவர்மா (1863 – 1918) பற்றிக் கூற வேண்டும். (இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசையில் ஏ.ஆர். ராஜராஜவர்மா, என்ற நூலின் பக்கங்கள் 57 – 58 ஐ பார்க்கவும்), உண்மையில் பார்க்கப்போனால், கேரள வர்மா (1845 – 1915) சில குறிப்பிட்ட இலக்கிய மறுமலர்ச்சி கொள்கைகளுக்கு வித்திட்டார் என்றாலும் அவர் பழமைவாதியாகவே இருந்தார். ஆதிகால நாவலாசிரியர்களான, சந்து மேனன் (1847 – 99) ஸி.வி. ராமன் பிள்ளை (1858 – 1922) ஆங்கில ஆதிக்கத்தால் மறுமலர்ச்சியை, இலக்கியம் பண்பாடு ஆகியவற்றில் ஏற்படுத்தினார்கள். மறுமலர்ச்சியை அறிந்தவர்களில் மிகவும் முக்கியமானவர் ஏ.ஆர். ராஜராஜ வர்மா ஆவார். மலையாளத்தில் இலக்கியப் படைப்புக்கும் அவைகளைச் சுவைப்பதற்கும் புதுகோணத்தை அவர் காட்டினார். அவர் கவிதைக்கு ஏற்ற இலக்கணத்தை விட்டுவிடவில்லை. சமஸ்கிருதத்திலிருந்து அந்தக் கவிதை இலக்கண நெறிகள் பெறப்பட்டதால் அவைகளை அப்படியே ஏற்றுக் கொண்டார். உரைநடையானாலும், கவிதையானாலும்

கையாளப்படும் உத்திகள் உணர்ச்சிகளுக்குக் கீழ்ப்பட்டிருக்க வேண்டும் என்று அவர் வற்புறுத்தினார். இந்தக் கொள்கை பண்டிதர்களுக்கும், எதிர்ப்பாளர்களுக்கும் இடையே உண்டாக்கப்பட்ட பனிப்போருக்குக் காரணமாயிருந்தது.

இந்த முறையில் மேலும் ஆராய பாலகிருஷ்ண பிள்ளைக்கு வாய்ப் பளிக்கப்பட்டது. இதற்குள் அவர் கேரளத்தில் முக்கிய எழுத்தாளராகிவிட்டார். மற்ற ராஜ்யங்கள் ஆங்கிலத்தில் உள்ளதைக் கொண்டு திருப்தியடைந்தன. அவர்களுக்கு எல்லாமே ஆங்கில இலக்கியந்தான். அதுவே இந்த நவீன உலகத்தில் எல்லாவற்றையும் பெற்றிருக்கிறது என்றார்கள். நாம் ஏற்கனவே ஃபிரெஞ்சு மொழியில் பிள்ளையவர்களுக்கு இருந்த ஆழ்ந்த ஆர்வத்தைக் குறிப்பிட்டுள்ளோம். அவர் தமது முயற்சியால் ஆங்கிலம், ஃபிரெஞ்சு மொழிகள் மூலம் ஜெர்மனி, ரஷ்ய மொழி நூல்களைக் கற்றறிந்தார். இளைஞர் மகாநாட்டின் தலைமை உரையில் அவர் பின்வருமாறு குறிப்பிட்டார். "ஆங்கிலேயரது இலக் கியம் போல் நமது இலக்கியமும் நவீன மயமாக்கப்பட்டுக் கொண்டு வருகிறது. ஆங்கிலேயர் நாடு ஐரோப்பாவில் மிகுந்த குறைந்தபட்ச கலைமயமான நாடுகளில் ஒன்றாக இருக்கிறது". இந்தக் குறிப்பு அந்தக் காலத்தில் ஆட்சியிலிருக்கின்ற வர்கத்தாரை இழிவுபடுத்திக் கூறப்பட்டதாகக் கருதப்பட்டது, மிகவும் புரட்சிகரமானது. ஆங்கில இலக்கியத்தின் தாக்கத்தால் அநேக மலையாள எழுத்தாளர்கள் மலையாள இலக்கியத்தை உயர்வாக்கினார்கள். அவர்களில், சந்து மேனன், ஸி.வி. ராமன்பிள்ளை, குமரன் ஆசான், உல்லூர் ராஜராஜ வர்மா, பி.கே. நாராயணப்பிள்ளை முதலானோர் குறிப்பிடத் தக்கவர்கள். ஆனால் அவர்கள் ஆங்கிலத்துக்கு அப்பால் தாண்டிச் செல்லவில்லை. பாலகிருஷ்ண பிள்ளைதான் முக்கியமான ஐரோப்பிய மொழிகளின் மீது தமது கவனத்தைச் செலுத்திய முதல் இலக்கியவாதி. அவர் தாராளமான மனப்பான்மை கொண்டவர். அதே பேச்சில் அவர் கூறியதாவது— "கலை தேசிய பார்வை கொண்டது என்றாலும் அதற்கு உலகளாவிய கவர்ச்சி உண்டு. கலை இலக்கியத்தில் "சுதேசி" உணர்வு அழிக்கப்பட வேண்டும்". அவர், ஃபிரெஞ்சு, ஜெர்மனி, ரஷ்ய எழுத்தாளர்களின் முற்போக்குச் சோதனைகளில் அதிகப்பரிச்சயம் கொண்டவர். எனவேதான் கேசரி, புது இலக்கியக் கொள்கைகளை ஈர்க்கும் "ஆன்டினாவாக" இயங்க முடிந்தது. அவர் சக்திகளைச் சேகரித்து வைக்கும், உள்ளடக்கிக் கொள்ளும், "ஜெனரேட்டர்", "டிரான்ஸ்பார்மர்" ஆகியவற்றுடன் ஒப்பிடப்பட்டார். அந்தச் சக்திகள் புதுக் கொள்கைகளையும், தத்துவங்களையும் உற்பத்தி செய்யும் தன்மை கொண்டவை. அவர் அவைகளைச் சரியான நேரத்தில் திறமையுடன் வெளிப்படுத்துவார். அவர் தமது நண்பர்களிடம் பாசம் கொண்டவர்,

அவர்களது அறிவுத் திறனைத் கட்டவிழ்த்துவிடுவார். இதனால் மலையாள எழுத்துலகம் மிகவும் பிரகாசிக்கத் தொடங்கியது. குறிப்பாக 1935க்குப் பிறகு அதிகமாகப் பிரகாசித்தது.

பாலகிருஷ்ண பிள்ளை 'படைக்கும் திறனைக்' கண்டு பிடிப்பதில் யாருக்கும் புரியாத வல்லமையைப் பெற்றிருந்தார். அவரது முகவுரைகளும், விமர்சனங்களும் இளைய எழுத்தாளர்களை ஊக்குவித்தன. அவர்களில் தகுதி வாய்ந்தவர்களை மேற்கத்திய எழுத்தாளர்களுடன் ஒப்பிட்டு அவர் எழுதினார். இதனால் எழுத்தாளர்களிடம் அடங்கிக் கிடந்த திறமை முழுவதும் வீறு கொண்டு எழுந்தது. கேசரி, அவர் விமர்சித்த எந்தவொரு இலக்கியப்படைப்புக்கும் ஒரு முத்திரையைப் பதிப்பார். இதுமாதிரி இலக்கியத்தை தரம்பிரித்துப் பார்ப்பதில் சில சமயங்களில் அவர் வரம்பையும் மீறியிருக்கிறார். அது அவரது தீவிர எண்ணமாக இருந்தது. அவர் ஓர் அதிகாரத் தோரணையில் முத்திரையிடுவதைச் சிலர் ஆட்சேபித்தனர் என்றாலும் அவர் இலக்கியவானில் இணையற்ற பெருந்தகையாளராக விளங்கினார்.

## சகிப்புத் தன்மை

கேரளாவில் உள்ள ஆங்கிலம் கற்ற எழுத்தாளர்களும், வாசகர்களும், இந்த இருபதுகளிலும், முப்பதுகளிலும், மில்டன், ஷேக்ஸ்பியர், ஷெல்லி, கீட்ஸ், ஸ்காட், டிக்கன்ஸ் ஆகியவர்களின் படைப்புகளைப் படித்தறிந்திருந்தனர். ஆனால் மற்ற ஐரோப்பிய எழுத்தாளர்களான மாப்சான், பால்ஸாக், பாடிலியர், ஸ்பென், மல்லாரம், ராம்போ, ஸ்டிரின்ட்பெர்க், ஜோலா, மாட்டர்லிங்க், ஹாப்டன், ஃப்லாபர்ட், போன்றோர் பற்றி உண்மையில் அவர்களுக்கு ஒன்றும் தெரியாது. பாலகிருஷ்ண பிள்ளை தான் தமது சக எழுத்தாளர்களுக்கும்; மற்றவர்களுக்கும் இவர்களைப்பற்றியும், இவர்களது நூல்களைப்பற்றியும் அறிமுகம் செய்து வைத்தார். குரோஸ், ஐ.ஏ. ரிச்சர்ட்ஸ், மற்றவர்களது ஆராய்ச்சி அணுகல் முறைப்பற்றி பிள்ளையவர்கள் தமது நண்பர்களுடன் விவாதிப்பார். இவைகளெல்லாம், கேரள இலக்கியத்தில் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தின. ஐரோப்பிய ஆங்கில எழுத்தாளர்களது படைப்புகளை மட்டும் படித்தறிவது மட்டுமின்றி, மேற்கத்திய எழுத்தாளர்கள் எப்படியெல்லாம் தமது கருத்துக்களைத் தெரிவிக்கிறார்கள் என்பதை அறிந்து கொள்ளவும், வாய்ப்பு ஏற்பட்டது. இதனால் நம்முடைய புதியபடைப்பிலக்கியம் உண்டாக்க நமது மனங்களைப் பழமையின் பிடியிலிருந்து விடுவித்துக் கொள்ளும் முயற்சி உண்டாயிற்று. பழைய கால படைப்பிலக்கிய முறைகளை மாற்றி, எழுத்தாளர்களையும் வாசகர்களையும், புரட்சிகரமான ஃபியூசரிஸம், மனிதநலங்கூறும், ஃபங்ஷனலிஸம் முதலிய புதிய

கோட்பாடுகளை அறிந்து கொள்ள தமது வாசகர்களையும், எழுத்தாளர்களையும் அந்தப் பழைய முறைகளிலிருந்து விடுவித்து அவர் வெளியே அழைத்து வந்தார். இது அடிப்படையில் ஒரு கொள்கை முன்னேற்றமே; கேசரி இதனை விருந்தாக ஆக்கிக் கொண்டார்.

பிள்ளையவர்களுக்கு இலக்கிய மறுமலர்ச்சியில் விருப்பம் இருந்தது போலவே, ஓவியம், சிற்பம் முதலியவற்றிலும் மோகம் இருந்தது. ஏனென்றால் அவைகளில் பழைய முறைகள் மாற்றப்பட்டுப் புதிய உத்திகள் கையாளப்பட்டன. ஆரம்பத்தில் இத்தாலிய முறையில் ஓவியம் முதலியவற்றில் ஏற்பட்ட மறுமலர்ச்சியை அவர் விரும்பினார். "ஃபியூசரிஸம்" இருபதாம் நூற்றாண்டின் வாழ்க்கை, போர், இயந்திர உலகம் முதலியவற்றை உலகுக்கு எடுத்துக்காட்டியது. இந்த "ஃபியூசரிஸ"க் கொள்கை அநேக ஓவியர்களைக் கவர்ந்தது. பிள்ளையவர்கள் இதில் நன்மை இருப்பதாக உணர்ந்தார். "ஃபங்ஷனலிஸம்", பொருள்களின் வடிவம், அமைப்பு, செயல்முறை, முதலியவற்றை விளக்கும் ஒரு நவீனக் கொள்கையாகும். அவர் இப்படிப்பட்ட நவீன முறை மாற்றங்களிலும் வளர்ச்சியிலும் ஆர்வங்காட்டினார். அவரது கொள்கைகளுக்கு முக்கிய அடிக்கல்லாக அமைவது அவரது "புத்துலகக்கொள்கை" (நவலோகம்) ஆகும்.

பாலகிருஷ்ண பிள்ளை தம்முடைய புதிய உலகபடைப்புக் கொள்கைக்கு ஏற்ப, புதிய கேரளத்தை உருவாக்கும் உன்னதப் பணியில் அவர் முன்னேறிக் கொண்டு இருப்பதாக எண்ணினார். உண்மையில் அவர் "புதிய கேரளத்தின்" சிற்பி ஆவார். "நவ கேரள சிற்பிகள்" என்ற தொடர் நூலில், டாட்டாபுரம் சுகுமாரன், பாலகிருஷ்ண பிள்ளையைப் பற்றிய நூல் ஒன்றை எழுதியுள்ளார். அதில் ஒரு குறிப்பிட்ட அத்தியாயத்தில் அந்த நூலின் தலைப்புக்கேற்ப அநேக விஷயங்களைக் கூறுகின்றார். பிள்ளையவர்கள் பத்திரிக்கை உலகின் முக்கியத்துவம் பற்றியும் இலக்கியம் எப்படி மனிதரின் வாழ்க்கையில் உயர்ந்தவர்களையும், தாழ்ந்தவர்களையும், உன்னதமான நிலையில் வைக்கிறது என்பதை விளக்கியுள்ளார். கேரளத்தில் அதிகாரப் போக்கும், "ஆமாம்" போடும் மக்களும் அதிகமாக இருக்கிறார்கள் என்று அவர் கூறுகிறார். அவர் சாதாரண மக்கள் தங்களது உரிமைகளை உணருமாறு செய்தார். அவர் முழு சுதந்திரத்துக்கும், குறைவில்லாத ஜனநாயக உரிமைக்கும் போராடினார். மதம், மொழி, சாதிப் பிரிவுகள் குறுகிய எண்ணங்கொண்ட உண்மைச் சேவகர்கள், அதிகார பலத்தில் நம்பிக்கை கொள்ளுதல், ஆகியவைகளுக்கு அவர் எதிர்ப்பாளராக இருந்தார். கத்தியை விடப் பேனா பலமுள்ளது என்பதை அவர் நிரூபித்தார். அரசியல் அதிகாரத்தில் மூழ்கிப் போனவர்கள் அவரது பேனாவைக் கண்டு அஞ்சினர்.

பாலகிருஷ்ண பிள்ளை இலக்கியம் பண்பாடு ஆகியவற்றில் அதிர்ச்சிவைத்தியம் செய்வதில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டவர். அவரது கொள்கைகள் மரபு வழியில் வந்தவை அல்ல. விமர்சகர் என்ற முறையில் தொழில் நுணுக்கம் அறிந்தவர். விளக்குவதைவிட அறிவுரை கூறுவதில் வல்லவர். இலக்கியத்தில் 'செக்ஸ்' பற்றி எழுதுவதில் அவர் தாராள மனப்பான்மை கொண்டிருந்தார். புரட்சியாளராகவும் இருந்தார். ஆனால் உண்மை வாழ்க்கையில் அவர் ஒரு துறவி போன்று இருந்தார். அவர் 'விருத்த பூஜா', எனும் வயதானவர்களைக் கௌரவிக்கும் பூஜைக்கு எதிர்ப்பு தெரிவித்தார். இதனால் அவர் மூத்தவர்களுக்கு மரியாதை வேண்டாம் என்று கூறவில்லை. நாம் பழைய கொள்கைகளையே பின்பற்றி வந்தால் உயர்ந்த சமூகமாக முன்னேற முடியாது என்றுதான் கூறுவார். அவருடைய நண்பர்களும் ஆதரவாளர்களும் அவரது சஷ்டியாப்தபூர்த்தி விழாவின் போது அளித்த உபசாரத்தில் அவர் பின்வருமாறு பதிலளிக்கிறார். அவரது கொள்கை இதனால் தெளிவாகத் தெரிகிறது.

"இரண்டாவதாக என்னைப் போன்ற வயதானவர்களை மதிக்கும் முறைபற்றி என்னுடைய கருத்தைக் கூறுகிறேன். சாய்ந்து கொண்டிருக்கும் மரத்தின் அடியில் உரம் போட்டு என்ன பயன்? சிறு செடிக்கு உரம் போட்டால் அது வளர்ந்து பழம் கொடுக்கும். என்னுடைய கோரிக்கை என்னவென்றால், என் போன்ற முதிய எழுத்தாளர்களுக்கு காட்டும் மரியாதை முதலியவற்றை இளைய எழுத்தாளர்களுக்கும் காட்டவேண்டும் என்பதே. அவர்களுடன் எனக்கிருந்த நீண்டகால தொடர்புகளால் எனக்கு அவர்களுடைய பிரச்சினைகள் நன்கு தெரியும். பிரசுரகர்த்தாக்கள் அவர்களது புத்தகங்களை எடுத்துக் கொள்வதில்லை. அவர்கள் பெயர் பெற்ற முதிய எழுத்தாளர்களது புத்தகங்களைத்தான் விரும்பி ஏற்கிறார்கள்."

அதிகாரத்தில் ஆசை கொண்டவர்களை அவர் அறவே வெறுத்தார். அது போன்று பழமை விரும்பிகளான பண்டிதர்களையும் அவர் சாடினார். ஏனென்றால் அவர்கள் ரிஷிகள் கூறியதுதான் முடிந்த முடிவு என்று வாதிடுவதும், உலகில் எந்த இலக்கியமும் சமஸ்கிருத இலக்கியத்துக்கு இணையில்லை என்ற கூறுவதும், பிள்ளையவர்களுக்கு பிடிக்கவில்லை.

### கேசரியின் குண நலன்கள்

பாலகிருஷ்ண பிள்ளை, அவர் பத்திரிக்கை ஆசிரியராக இருந்தபோது அனுபவித்தத் தொல்லைகளை முன்பே கூறினோம். அவரிடம் சல்லிக் காசுகூட இல்லாமல் இருந்த போது அவரது நண்பர்கள், அவரது பிடிவாதத்தைக் கொஞ்சம் மாற்றிக் கொள்ளும்படி வேண்டினர். அதனால் அவரது பணக் கஷ்டம் குறையும் என்று அவர்கள் நம்பினார்கள். ஆனால் அவரோ கொஞ்சங்கூட இணங்கிவரவே இல்லை. அவருடைய சுய

சரிதையிலிருந்து ஒரு குறிப்பை இங்கே தருவது ஏற்புடையதாகும். இது ஈ.வி. கிருஷ்ண பிள்ளை அவரது மனதைமாற்ற எடுத்துக் கொண்ட முயற்சியை விளக்குகிறது. கிருஷ்ண பிள்ளை மலையாளத்தில் கட்டுரை, சிறுகதை எழுதுவதில் புகழ்பெற்றவர். கேசரியின் நல்ல நண்பர். இதோ அந்தக் குறிப்பு:

"பத்திரிக்கைத் துறையில் நல்லொழுக்கம் பற்றி ஈ.வி. அவர்கள் குறிப்பிட்டது பற்றி எண்ணும் போது ஒரு சம்பவம் என் நினைவுக்கு வருகிறது. சுகாதாரம் பற்றிய பள்ளிப் பாட புத்தகங்களுக்கு ஆசிரியர் நான்தான் என்று, என் பெயரை அச்சடிப்பதற்கு அனுமதி தருமாறு கேட்டார். இதனால் எனக்கு குறைந்தது நாலாயிரம் ரூபாய்கள் கிடைக்கும் என்றும் கூறினார். அந்தப் புத்தகங்களை டாக்டர். ராமன் தம்பி என்பவரைக் கொண்டு எழுதப் போவதாகவும் அவர் கூறினார். அவருக்கு வேண்டியதெல்லாம் என்னுடைய பெயரை நூலாசிரியர் என்று அச்சிடுவதுதான். அவர் திருப்பி திருப்பிக் கேட்டபோதும் நான் அதற்கு மறுத்துவிட்டேன். நான் அப்போது ராகவையாவின் அரசாங்கத்தை மிகவும் கடுமையாக எதிர்த்து எழுதிக் கொண்டிருந்தேன். இந்தப் பணம் என் கடுமையான எழுத்துக்களைக் குறைத்துக் கொள்ள எனக்குக் கொடுக்கப்படும் லஞ்சம் என்று நான் எண்ணினேன். இதை அப்படியே ஈ.வி. அவர்களிடம் சொன்னேன். அதற்கு அவர் நான் அரசாங்கத்தை எதிர்த்து எழுதுவதை நிறுத்தவேண்டாம், ஆனால் நியாயமான எதிர்ப்பாக இருக்கட்டும் என்று கூறினார். நான் மறுத்துவிட்டேன். ஈ.வி. இதை மனதில் வைத்துக் கொண்டுதான் என்னுடைய நேர்மையைக் கூறும்போது குறிப்பிட்டிருக்க வேண்டும்".

மறைமுகமாகப் பிள்ளையவர்களுக்கு அவரது நண்பர் தமது உத்தியோகத் தோரணையில், லஞ்சம் கொடுக்க முயன்றதைப் பிள்ளையவர்கள் மிக்க எரிச்சலூட்டும் செய்கையாக கருதினார். அநேகம் பேர் இத்தகைய மறைமுகமான தூண்டிலுக்கு இரையாகிப் போயிருப்பார்கள். ஆனால் பாலகிருஷ்ண பிள்ளையோ இம்மாதிரி தமது கௌரவத்தை வாழ்நாள் பூராவும் காத்துக் கடைபிடித்த வந்தார்.

1949–ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 13–ம் நாள் பாலகிருஷ்ண பிள்ளைக்கு வயது அறுபது ஆயிற்று. அவரது நண்பர்களும், அபிமானிகளும் அதைப் பெரிய அளவில் கொண்டாட எண்ணினர். திருவனந்தபுரத்தை விட்டபிறகு, பாலகிருஷ்ண பிள்ளை கொச்சிக்கு அருகில் உள்ள பரூரில் தங்கியிருந்தார். அங்கு அவரது மனைவிக்குச் சொந்தமான சிறு வீடு ஒன்று இருந்தது. 1949ம் வருஷம் மே மாதம் 10–ம் தேதி வடக்கு பரூரில் இருக்கும் ஸ்ரீ கிருஷ்ணா தியேட்டரில் அந்த விழா நடப்பதாக இருந்தது. மலையாளத்தில் புகழ் பெற்ற எழுத்தாளர்களான முண்டசேரி, தகழி,

குட்டிப்புழா, பி.ஸி. குட்டி கிருஷ்ணன், கேசவ தேவ், கே.ஏ. தாமோதர மேனன், எம்.பி. பால் போன்றவர்கள் அந்த விழாவில் கலந்து கொண்டார்கள். கே. கோபாலகிருஷ்ண பிள்ளை, அந்த விழாவில், பிள்ளையவர்களுக்கு ஒரு பணமுடிப்பு கொடுப்பதாக இருந்ததென்றும் ஆனால் அவர் அதை மறுத்துவிட்டார் என்றும் தமது வரவேற்புரையில் கூறினார். தமது தலைமையுரையில் பேராசிரியர், எம்.பி. பிள்ளையவர்கள், கேசரி பாலகிருஷ்ண பிள்ளையின் அசாதாரணமான வாழ்க்கைபற்றியும், அவர் ஆற்றிய தொண்டு பற்றியும் குறிப்பிட்டார். கேரளத்தில் வேறு எந்தவொரு அறிவாளியும், பாலகிருஷ்ண பிள்ளை போன்று அநேக நண்பர்களையும், அபிமானிகளையும் பெற்றிருக்கவில்லை என்றும் குறிப்பிட்டார். உண்மை என்னவென்றால் கேரளத்தில், கலை பண்பாடு ஆகிய துறைகளின் முன்னேற்றத்துக்கு அவரைப் போல் வேறு யாரும் பாடுபடவில்லை என்பதேயாகும். அவர் இம்மாதிரியான புகழ்ச்சிகளை விரும்பவில்லை. ஆனால் நாம் இப்படி விழா நடத்துவது நம்முடைய உரிமையும், கடமையும் ஆகும் என்று நம்புகிறோம் என்று அவர் தமது தலைமை உரையில் குறிப்பிட்டார்.

அதன்பிறகு குட்டிப்புழா கிருஷ்ண பிள்ளை வரவேற்புரை வாசித்தார். அதன்பின் சில பேச்சாளர்கள் கேசரியை வாழ்த்தியும் புகழ்ந்தும் பேசினார்கள். அந்தப் பேச்சின் ஒரு பகுதி இங்கு தரப்பட்டுள்ளது.

"மதிப்பிற்குரிய குரு அவர்களே... தாங்கள் இம்மாதிரியான புகழ்ச்சியையும், விழாக்களையும் நீங்கள் விரும்ப மாட்டீர்கள் என்பது எங்களுக்குத் தெரியும். எங்களுடைய சொந்த திருப்திக்காக இதனைச் செய்கிறோம். நாங்கள் உங்களுக்குக் கடமைபட்டவர்கள். நீங்கள் இதனை ஏற்றுக் கொள்ள வந்திருப்பதைக் கண்டு மகிழ்ச்சியடைகிறோம். கேரளத்தில் இருக்கும் சுதந்திரச் சிந்தனையாளர்களும், முற்போக்கு எழுத்தாளர்களும் தங்களுக்கு மிகவும் கடமைப்பட்டுள்ளார்கள். தாங்கள் மற்ற யாவரையும் விட பண்பாடு, அறிவு முன்னேற்றத்துக்கு மிகவும் பாடுபட்டிருக்கிறீர்கள். இது மறுக்கமுடியாத உண்மை .... தாங்கள் உலக நூல்கள் பலவற்றை எங்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்தீர்கள். அவைகளால் நமது எழுத்தாளர்கள் உந்தப்பட்டார்கள்.

அதுமட்டுமின்றித் தாங்கள் படைப்பிலக்கியத்துறை, விமர்சனத்துறை, ஆகியவற்றில் புதுப்பாதையை ஏற்படுத்தி, புதுவெளிச்சத்தைக் காட்டினீர்கள் .............".

பாலகிருஷ்ண பிள்ளை இதற்களித்த பதிலுரை நீண்டதோர் சொற்பொழிவாகும். அது ஒரு முக்கியமான ஆவணமாகக் கருதப்படுகிறது. இதைப்பற்றி பலமுறை கூறியுள்ளோம். இங்கு இன்னுமோர் பகுதி பற்றிக் கூறுகிறோம். இதில் அவர் இலக்கியத்தைத் தரம் பிரிப்பதுபற்றிக்

கூறியுள்ளார். இங்கு அவர் கிரேக்கப்புராணத்தில் வரும் "புரோகிரஸ்டியன் படுக்கை" பற்றிக் குறிப்பிடுகிறார். இந்த இரும்புப் படுக்கையில் பிரயாணி கட்டப்படுவான். அவன் உயரம் அந்தப் படுக்கையின் நீளத்துக்குக் குறைவாக இருந்தால் அவன் கால்கள் இழுக்கப்படும். அவன் இறந்து போவான். அதேபோல் அவன் உயரமாக இருந்து கால்கள் வெளியே தெரிந்தால் அவனது கால்கள் வெட்டப்படும். அப்போதும் அவன் கொல்லப்படுவான். "இலக்கிய முன்னேற்றத்துக்கு இம்மாதிரியான படுக்கை தேவையில்லை. ஆனால் சந்தர்பத்துக்கு ஏற்ப வேண்டும்போது நீளமாக்கவும் அல்லது சிறியதாக்கவும் ஒரு ஸ்பிரிங்கட்டில் தேவை. இது மாதிரியான கட்டிலைத் தயாரிப்பதுதான் இலக்கிய உலகில் எனது தாழ்மையான வேலை" என்று அவர் கூறினார். ஒரு நூலைத் தரம் பார்க்கும்போது அவர் அந்த ஆசிரியரின், மதம், குலம் நாடு, வயது, ஆகியவற்றைக் கவனிப்பதில்லை என்று ஒப்புக் கொள்கிறார். இலக்கியத்தில் எல்லாவிதமான அசாதாரணங்களையும் அவர் வரவேற்கிறார். உலகில் இலக்கிய முக்கியத்துவம் அடைந்துள்ள இலக்கியங்கள்தான், அவரது சிறந்த அளவு கோல்கள். காளிதாசனின் படைப்பாயினும் சரி, அல்லது பக்கத்திலுள்ள இளைய படைப்பாளி கேதமங்கலம் பாப்புக்குட்டியின் படைப்பாயினும் சரி அவர் ஒரே விதமான அளவு கோலைத்தான் உபயோகிப்பார். உண்மையில் காளிதாசனின் உன்னதத்தைக் குறிப்பிடும்போது அவர் காரசாரமாக விமர்சிப்பார்.

எப்படி இருந்தபோதிலும், வெளிநாட்டு இலக்கிய நுணுக்கங்களையும், இலக்கிய இயக்கத்தையும் வரவேற்பதில் அவர் தம் விருப்பத்தையும் தேர்ந்தெடுக்கும் முறையையும், அவ்வளவாகக் கடைபிடிக்கவில்லை என்றே குறிப்பிடலாம். அதேபோன்று அவரது காரசாரமானக் கட்டுரைகள் வழக்கமான அதிகச் சுமையாகவும், நுணுக்கங்கள் பற்றிய பிதற்றலாகவும் இருந்தன என்றும் சொல்லலாம்.

இச்சிறு நூலின் ஆசிரியர் பாலகிருஷ்ண பிள்ளையுடன் தொடர்பு கொண்டவர். சென்னையிலிருந்து வெளிவந்த 'லோகவாணி' என்ற மலையாள இதழுக்கு ஆசிரியராக 1948–54–ல் இருந்தபோது பாலகிருஷ்ண பிள்ளை அந்தப் பத்திரிக்கைக்கு அநேகக் கட்டுரைகளையும், சில புத்தக விமர்சனங்களையும் தந்துள்ளார். பிள்ளையவர்கள் எப்போதும், புத்தகங்கள் அவைகளின் ஆசிரியர்கள் பற்றிய நியாயமான விமர்சனங்களையே எழுதியிருக்கிறார். அவருடைய சொந்த நம்பிக்கைகள் இதில் தலையிட்டதில்லை. அவர் புத்தக ஆசிரியரின் மனோநிலையைப் புரிந்து கொள்ளும் திறம் பெற்றவர். எப்போதும் அதில் உள்ள மனோதத்துவப்போக்கை ஆராய்வார். இந்நூலாசிரியரின் ஆரம்பகால புத்தகமான "சாது கொச்சூஞ்ஜு" என்ற வாழ்க்கை வரலாற்றை பிள்ளையவர்கள் மிக ஜாக்கிரதையாகப் படித்து விமர்சனம்

செய்தார். கேரளத்தில் யாரும் செய்ய முடியாத அளவுக்கு இந்த நூலை மனோதத்துவ அடிப்படையில் மதிப்பீடு செய்தார். கிறிஸ்தவ மத சம்பந்தமான மறைபொருளையும், மனதையும் முழுமையாகப் புரிந்து கொள்ளும் அவரது அறிவு இந்த நூலாசிரியருக்கு மகிழ்ச்சியையும் ஆச்சரியத்தையும் அளித்தது. "லோகவாணி"யின் ஆசிரியர் என்ற முறையில் இந்த நூலாசிரியர் பாலகிருஷ்ண பிள்ளையைத் தமது சுயசரிதை பற்றிய விவரங்களைத் தொடர்ந்து எழுதுமாறு வேண்டிக் கொண்டார். பிள்ளையவர்கள் திறந்தமனங் கொண்டவராதலால் இது மாதிரியான தொடர்களை எழுத ஒப்பவில்லை. ஆனால் "எனது இளமை நினைவுகள்" என்ற தலைப்பில் ஒரு கட்டுரை மட்டும் எழுதினார். அதனைப் பத்திரிக்கை ஆசிரியருக்கு அனுப்பும் போது அவர் கீழ்க்கண்டவாறு எழுதினார்.

"இதைப் பார்த்ததும் எனது சுயசரிதக் கட்டுரைகளில் முதலாவது, இது என்று எண்ணிவிட வேண்டாம். நான் அதுமாதிரி ஒன்றை எழுதமாட்டேன். வாழ்க்கைச் சரித்திரம் எழுதுபவர்களுக்கு, தாங்கள் எடுத்துக் கொண்ட விஷயத்தின் முக்கிய குறிப்பை, உடல் கூறு, தனிப்பட்ட அனுபவங்கள், சமூகச் சூழ்நிலை ஆகியவற்றிலிருந்து எப்படி எடுக்க வேண்டும் என்பதை அறிவிக்கவே நான் இதை எழுதினேன். மலையாள இலக்கியத்தில் நீங்கள் எழுதிய "சாது கொச்சூன்ஜு" என்ற நூல்தான் இதில் வெற்றி பெற்றது."

கேரளத்தில் உள்ள அநேக எழுத்தாளர்கள் இதற்குச் சாட்சியம் அளிக்கக்கூடும். அவரால் உற்சாகப்படுத்தப்பட்டவர்களும், ஊக்கம் அளிக்கப்பட்டவர்களும் அநேகம். பலர் அவருக்குக் கடமைப்பட்டுள்ளார்கள். ஜி. சங்கர குரூப், சங்கம்புழா கிருஷ்ண பிள்ளை, போன்ற புகழ்பெற்ற கவிஞர்கள், தகழி, வைக்கம் முகமது பஷீர் எஸ்.கே. பொட்டேக்காட், கேசவதேவ் போன்ற நாவலாசிரியர்கள், குட்டிப்புழா கிருஷ்ண பிள்ளை, முண்டசேரி போன்ற விமர்சகர்கள் என்ற பலபேர் அவர்களில் அடங்குவர்.

பாலகிருஷ்ண பிள்ளை தமது சஷ்டியாப்தபூர்த்தி விழாகண்டு மகிழ்ந்தார். அதனை விழாவாக ஏற்பாடு செய்தவர்களுக்கு நன்றி கூறினார் என்றாலும் அவர் வெகுநேரம் பேசியதாலும் அதிகநேரம் கூட்டத்தினருடன் கழித்ததாலும் அவரது உடல்நலம் பாதிக்கப்பட்டது. அவரது தோழனான ஆஸ்துமாவும், அவ்வப்போது வரும் "புளூரஸி" நோயும் புதிய தொந்தரவான பல்வலியும் அவரைக் கஷ்டப்படுத்தின என்றாலும் அவர் விருந்தினர்களை வரவேற்றார். பிரச்சனைகளை விவாதித்தார். அவர்களுடன் ஆராய்ச்சியும் நடத்தினார். இந்தக் கடினமான உழைப்பு அவரது தொந்தரவுகளை அதிகமாக்கியது. இந்தக் கஷ்டங்களுக்கு வட்டியாக அவரது மனைவியும் நோய்வாய்ப் பட்டார்.

அவரது நிதிநிலை திருப்திகரமாக இல்லை. மங்கறோதயம், கோட்டையத்திலிருந்த எழுத்தாளர் கூட்டுறவு சங்கம், ஆகியவற்றிலிருந்து அவருக்குக் கிடைத்த சிறு தொகையும் அவரது வாழ்க்கைக்குப் போதவில்லை. அவரது நல்ல நண்பர்கள் இந்தச் சூழ்நிலையைப் புரிந்துக்கொண்டு அவருக்குப் பரிசுகளையும், வெகுமதிகளையும் தந்து உதவ முயன்றார். ஆனால் அவர் அவைகளை வெளிப்படையாக மறுத்துவிட்டார். அவரது வகுப்புத் தோழர் பட்டம் தாணுபிள்ளை திருவாங்கூரின் முதன் மந்திரியானபோது, பாலகிருஷ்ண பிள்ளைக்கு, அவர் இலக்கியத்துக்கும், பண்பாட்டிற்கும் செய்த பெருஞ்சேவைக்காக நிதியுதவி செய்வதற்கானத் தீர்மானம் ஒன்று இருந்தது. ஆனால் அவர் அதையும் மறுத்துவிட்டார். ஏனென்றால் அந்த நிதியுதவியை ஏற்றுக் கொண்டால் அவரது சுதந்திரமான போக்கை அது தடுக்கும். அவரது உயர்ந்த எண்ணங்களுக்குத் தவறான அபிப்பிராயத்தை ஏற்படுத்தும் என்று அவர் நினைத்தார். இப்படியாகக் காலம் நகர்ந்தது.

## இறுதிக்காலம்:

1956–ம் ஆண்டு ஜூலை மாதம் 5–ம் தேதி திருமதி பாலகிருஷ்ண பிள்ளையின் சஷ்டியாப்தபூர்த்தி நாளாகும். பிள்ளையவர்கள் அந்த விழாவை சிறு அளவில் திட்டமிட்டு நடத்தப்பிரயாசைப்பட்டுக் கொண்டிருந்தபோது, ஜூலை 4–ம் தேதி லண்டனில் இருந்து அவரது தம்பி டாக்டர் ஏ.பி. பிள்ளை அங்குள்ள ஆஸ்பத்திரியில் காலமானார் என்று தந்தி வந்தது. தம்பதிகள் இருவரும் கொஞ்ச நேரம் அதிர்ச்சியில் மௌனமானார்கள். பாலகிருஷ்ண பிள்ளையின் கன்னங்கள்மேல் கண்ணீர் வழிந்தது. அவர் கண்களில் கண்ணீரை இதற்குமுன் பார்த்ததில்லை என்று அவரது மனைவி கூறினார். இப்படியாக அந்த விழா கைவிடப்பட்டது.

பாலகிருஷ்ண பிள்ளை சற்றும் இரண்டம் நினைப்பே இல்லாமல் தமக்கு வந்த பண உதவிகளையும், வெகுமதிகளையும் மறுத்தாலும் அவரது நெருங்கின நண்பர்கள் வேறு ஒரு திட்டத்தை வகுத்தனர். 1957–ல் கே.பி. கேசவ மேனன், கேரள சாஹித்ய அகாதெமியின் தலைவராகவும், பேராசிரியர் ஜோஸப் முண்டசேரி, கேரளத்தில் கல்வி அமைச்சராகவும் இருந்தனர். சாஹித்ய அகாதெமியின் செயல்குழு 1957 செப்டம்பரில் கூடியது. பாலகிருஷ்ண பிள்ளை தயாரித்த ஆராய்ச்சிக் கட்டுரைக்காக ரூ. 5,000,– கௌரவ ஊதியமாகத் தருவதென்று ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. இதற்கு எஸ்.கே. பொட்டேகாட், பிள்ளை அவர்களது சம்மதத்தைப் பெற்று வர நியமிக்கப்பட்டார். அவர் பிள்ளையிடம் அந்தத் தொகை அவரது ஆராய்ச்சி கட்டுரைக்கான ராயல்டி என்றும் பண உதவி அல்ல என்றும் கூறி அவரது சம்மதத்தை பெற்றார். 1957 நவம்பர் 12–ம் தேதி ஒரு சிறப்பு விழா நடத்தி அதில் 5000,– ரூபாயைப் பிள்ளையிடம்

கொடுத்து விட்டு, அவரது கையெழுத்துப் பிரதியை அகாதெமி பெற்றுக் கொண்டது. அது பிறகு 1986–ல் "சரித்திரத்தின்டே ஆதிவேருகள்" என்ற நூலாக அகாதெமியால் வெளியிடப்பட்டது. அந்த விழாவுக்கு அவரது நண்பர்களும், அபிமானிகளும் ஏராளமாக வந்திருந்தனர்.

அகாதெமி ஏற்பாடு செய்த சிறப்பு விழாவின் இனிய நினைவுகள் சில நாட்கள் தான் நீடித்தன. முதுமை, நோய் ஆகியவற்றின் வலிய தாக்குதல் கேசரியின் முகத்தில் தெரிந்தது. அவரது மனைவி செல்லம்மா அவருக்கு அருகிலிருந்து பணிவிடை செய்து வந்தார். அவர்களும் உதவியின்றி மிக பலவீனமாக இருந்தார்கள். எனவே நிலைமை மிகவும் கவலைக்கிடமாகிக் கொண்டிருந்தது. இரண்டு நோயாளி முதியவர்கள் யாருடைய துணையுமின்றி தனியே இருந்தால் எப்படி இருக்கும் என்று கற்பனை செய்து பாருங்கள்! அவ்வப்போது சில உறவினர் வந்து உதவி செய்தனர். ஆனால் அது திருப்திகரமான ஏற்பாடு அல்ல. செல்லம்மாவின் சகோதரியும் அவளது கணவர் திரு. கைமால் அவர்களும் கோட்டயத்தில் இருந்தனர். அவர்கள் இந்த வயதான இருவரையும், வடக்கு பரூரை விட்டுத் தங்களுடன் வந்து வசிக்கும்படி கேட்டுக் கொண்டனர். அல்லது தங்களது வீட்டிற்கு அருகில் ஒரு தனி வீட்டில் வசிக்கக் கேட்டுக் கொண்டனர். இந்த ஏற்பாடு ஒப்புக் கொள்ளப்பட்டது. எனவே 1959 மார்ச் 29–ம் தேதியன்று தம்பதிகள் இருவரும் கோட்டயத்துக்கு வந்து ஒரு வீட்டில் தங்கினர். கோட்டயத்தில் நல்ல மருத்துவ உதவி கிடைத்தது. இது மாற்றம் கண்டு மகிழ்ந்தார். ஏனென்றால் அவர் இப்போது துணையுடன் இருக்கிறார் அல்லவா? கோட்டயத்தில் அவருக்கு அநேக நண்பர்களும், எழுத்தாளர் கூட்டுறவு சங்கத்தின் ஊழியர்களும் உதவ இருந்தனர். குறிப்பாக கதாசிரியர் கரூர் நீலகண்டபிள்ளை, டி.ஸி. கிழக்கேமுறி, பத்திரிக்கை ஆசிரியர் வர்கீஸ் கலதில், பழைய நண்பரும் வழக்கறிஞருமான எம்.என். கோவிந்தன் நாயர், ஆகியோர் அவரை அடிக்கடி வந்து பார்த்துச் சென்றனர். அந்தச் சிறிய வீட்டில் பிள்ளைக்கும் அவரது மனைவிக்கும் எல்லா நவீன வசதிகளும் இருந்தன.

இப்படித் திருப்திகரமாக சில மாதங்கள் சென்றதும், ஒரு துன்ப நிகழ்ச்சி ஏற்பட்டது. 1960 ஆகஸ்டில் கைமால் திடீரென்று இருதய ரத்தக்குழாய் அடைப்பு நோயால் இறந்துபோனார். டாக்டர் ஏ.பி. பிள்ளையின் இறப்பு மாதிரி இதுவும் அதிர்ச்சியைத் தந்தது. பாலகிருஷ்ண பிள்ளை துன்பத்தால் செயலற்றுப் போனார். அவருடைய எண்ணங்கள் அவருடைய இறப்பைப்பற்றிச் சுற்றி வந்தன. அவரது ஆஸ்துமாவும் புளூரஸியும் மோசமாயின. 1960 டிசம்பர் 18–ல் மருத்துவ சிகிச்சையை மீறி முடிவு ஏற்பட்டது. புரட்சிகரமான எண்ணங்களையும், கொள்கைகளையும் கொட்டிய எரிமலை அணைந்துவிட்டது.

ஆயிரக்கணக்கானோர் அவருக்காக அழுது கண்ணீர்விட்டனர். கேசரியின் தொண்டு பற்றியும், கேரள சமூகத்தை நவீனப்படுத்த அவர் செய்த சேவை பற்றியும் எல்லாப் பத்திரிக்கைகளும் எழுதின. தென்னிந்தியாவில் அவரது மறைவுக்கு அநேக இடங்களில் இரங்கற்கூட்டங்கள் நடந்தன. அநேகம் பேர் அவரது இடத்தை வந்து பார்த்தனர். அவரது உடல் வடக்கு பரூருக்குக் கொண்டு செல்லப்பட்டது. அங்கு மாதவனப்பரம்பு எனும் இடத்தில் கேசரி முன்பே கேட்டுக் கொண்டபடி எந்த விதமான மதச் சடங்குகளின்றி எரியூட்டப்பட்டது.

இப்படியாக ஓர் அசாதாரணமான, பிரகாசமான வாழ்க்கை முடிவுக்கு வந்தது. சுதந்திர உணர்வும், எழுத்தாளர்களை ஊக்குவிக்கும் பண்பும் கொண்ட அந்த வாழ்க்கை துன்பத்தையும் தியாகங்களையும் ஏற்றுக் கொண்டிருந்தது. இலக்கியத்திற்கும் பண்பாட்டிற்கும் சேவை செய்தது. இதனால் மக்களின் தரம் உயர்ந்தது. பாலகிருஷ்ண பிள்ளை வாழ்க்கையைப்பற்றி ஆரம்பத்தில் எழுதிய பி. ஸ்ரீதரன் பிள்ளை (புனைப்பெயர் சீதாராமன்), அவரது வழக்கத்துக்கு மாறான வாழ்க்கையைப்பற்றி விவரிக்கின்றார். அவரது வாழ்க்கையின் முக்கிய அம்சம் என்ன வென்றால், அவரது தகுதிக்கேற்ப எதையும் கேசரி பெறவில்லை என்பதேயாகும். எவ்வளவு உண்மையான கூற்று! இவைகள் எல்லாவற்றையும் விட ஒரு எழுத்தாளன் எதிர்ப்பார்ப்பதெல்லாம், மதிப்பீடு செய்யப்பட வேண்டும் என்பதேயாகும். பொதுவாக தலைமுறையாக எழுத்தாளர்கள் பாலகிருஷ்ண பிள்ளைக்கு மரியாதை செய்த போதிலும், அவரது படைப்புகள் தகுதி பெற்றிருந்தும், சரியாக மதிப்பிடப்படாமலும், பாராட்டப்படாமலும் போயின என்ற எண்ணம் இருந்து வருகிறது. அவர் 71 ஆண்டுகள் வாழ்ந்தார். அவைகளில் பின் நாற்பது ஆண்டுகள் சிறப்பானவைகளாக இருந்தன. 1923–ம் ஆண்டிலிருந்தே அவர் கேரளத்தில், சமூக அரசியல் வாழ்க்கையில் பின்னித்திளைத்தார். 1930–ம் ஆண்டு அவர் கேசரியின் ஆசிரியர் பொறுப்பை ஏற்றது முதல் அவர் வளரும் எழுத்தாளர்களுக்கு ஒரு கலங்கரை விளக்கமாக இருந்தார். வாசகர்களைத் தட்டி எழுப்பினார். அவர் ஐரோப்பிய இலக்கியங்களையும் எழுத்து நடையையும், இலக்கிய விமர்சனத்தையும், படைப்பிலக்கிய எழுத்தாளர்களுக்குக் கற்பித்தார். விஷயங்களைப் புதுமையாகவும் தைரியமாகவும் எழுதினதால் சமூகத்தில் ஒருவிதமான புரட்சி நோக்கு ஏற்பட்டது. அவரது தீர்மானங்களிலும் எண்ணங்களிலும் மிக்க நம்பிக்கை வைத்திருந்தனர். இப்படியாக இலக்கிய வளர்ச்சியில் ஒரு புதுயுகம் ஏற்பட்டது. அது அசாதாரண கற்பனையாளர் ஒருவரால் ஆரம்பிக்கப்பட்டது. பாலகிருஷ்ண பிள்ளையால் சமகால மலையாள இலக்கியத்தில் கொண்டு வரப்பட்ட மாற்றங்களை இலக்கிய வரலாற்று ஆசிரியர்கள் அங்கீகரிக்கவில்லை.

பாலகிருஷ்ண பிள்ளை எண்ணங்களின் தொகுப்பு புரட்சி எண்ணங்களின் வடிவம், அவர் சிறந்த படிப்பாளி, அவர் உடனே செயல்படும் மனிதர் அல்ல. அவர் நூற்றுக்கணக்கானவர்களை எண்ணவும், எழுதவும், செயல்படவும் தூண்டினார். நான் இந்தச் சிறு நூலை பாலகிருஷ்ண பிள்ளை தன்னைப்பற்றிக் கூறும் மதிப்பீட்டின், கடைசி பத்தியிலிருந்து எடுக்கப்பட்ட "என்னுடைய மனோத்தத்துவ இயல்பு" என்ற குறிப்புடன் முடிக்கிறேன்.

"செயல் வீரர்களும், சிந்தனையாளர்களும் இந்த உலகத்துக்குத் தேவை. ஒவ்வொருவகையும் அதற்கேற்ற அனுகூலத்தையும் குறையையும் பெற்றுள்ளது. நான் இயற்கையால் தீர்மானிக்கப்பட்டேன். எனது உடல்வாகும் (வம்சவழி) சூழ்நிலையும் என்னைச் சிந்தனையாளனாக ஆக்கின."

# முக்கிய நிகழ்ச்சிகளின் தேதிகள்

| | | |
|---|---|---|
| 1889 ஏப்ரல் 13 | – | பிறப்பு, திருவனந்தபுரம் |
| 1890 டிசம்பர் 17 | – | தம்பி பாப்புண்ணியின் பிறப்பு (டாக்டர் ஏ.பி. பிள்ளை) |
| 1897 | – | தந்தையும் தாயும் பிரிதல் – கொல்லத்தில் படிப்பு |
| 1899 | – | மீண்டும் திருவனந்தபுரம் வருதல் – மகாராஜா உயர்நிலைப் பள்ளியில் படிப்பைத் தொடர்தல் |
| 1904 | – | மெட்ரிக்குலேஷன் தேர்வில் வெற்றி பெறுதல். |
| 1908 | – | மகாராஜா கல்லூரியில் பி.ஏ. தேர்வு பெறுதல் |
| 1909–17 | – | திருவனந்தபுரம் பெண்கள் கல்லூரியில் சரித்திர ஆசிரியர். |
| 1913 | – | மாலை வகுப்பில் படித்து பி.எல். பட்டம் பெறுதல். |
| 1917 | – | வீரகுமார் என்ற நண்பர் ஃபிரெஞ்சு புத்தகங்களைப் பரிசளித்தல். |
| 1917 ஏப்ரல் 8 | – | கௌரி அம்மா (செல்லம்மா) வை மணந்து கொள்ளுதல் |
| 1917 ஆகஸ்டு 3 | – | வழக்கறிஞராக ஆதல் |
| 1918 பிப்ரவரி 21 | – | மகள் சாரதா பிறத்தல் |
| 1919–21 | – | ஃபிராய்டு போன்ற மனோ தத்துவ ஆசிரியர்களின் நூல்களைப் படித்தல் |
| 1920–21 | – | ஐரோப்பிய நாடகங்களைப் படித்தல். |
| 1922 மே 14 | – | சமதர்சியின் ஆசிரியராதல் |
| 1926 ஜுன் 19 | – | சமதர்சி ஆசிரியர் பதவியை விட்டு விலகல் |
| 1926 – 28 | – | பத்திரிக்கை ஆரம்பிக்கப் பணம் உதவிகேட்டு கேரளத்தில் பயணம் செய்தல். |
| 1928 நவம்பர் 24 | – | மலேயாவுக்குப் பணம் திரட்டச் செல்லுதல் |
| 1930 ஜுன் 4 | – | 'பிரபோதகன்' வார இதழைத் தொடங்குதல் சாரதா அச்சகத்தில் அச்சடித்தல். |
| 1930 செப்டம்பர் 10 | – | 'பிரபோதகன்' உரிமம் பறிக்கப்படுதல். |
| 1930 செப்டம்பர் 18 | – | அதே கொள்கைகளுடன் 'கேசரி' பிரசுரிக்கப்படுதல் |
| 1931 பிப்ரவரி 19 | – | கேசரியின் ஆசிரியருக்கு உயர்நீதிமன்றம் அபராதம் விதித்தல். |
| 1935 ஏப்ரல் | – | கேசரி வெளியீட்டை நிறுத்த நிர்பந்திக்கப்படுதல் |
| 1936 ஜுலை | – | பட்டகடன்களுக்காக சாரதா அச்சகத்தை விற்றல் |
| 1942 செப்டம்பர் 3 | – | பரூரில் தங்க திருவனந்தபுரத்தை விட்டு நீங்குதல் |
| 1949 மே 10 | – | சஷ்டியாப்தபூர்த்தி விழா. |
| 1956 ஜுலை 4. | – | டாக்டர் ஏ.பி. பிள்ளையின் மரணம். |
| 1960 டிசம்பர் 18 | – | அமரராதல். |

## பாலகிருஷ்ண பிள்ளை எழுதிய நூல்கள்

1916 – திருவிட்டம்கூர் சரித்திர சம்சேஷபம் (திருவாங்கூரின் சரித்திரச் சுருக்கம்).
பாபிலோனும் நினேவாயும் (கிழக்கத்திய கலாச்சாரத்தின் ஆரம்பம்)
லார்ட் ராபர்ட்ஸ்

1918 – லார்ட் கிட்செனர்

1921 – புரதத்வா பிரதீபம் – முதல் தொகுதி
யுவான் சுவாங்,
அலெக்ஸாந்தர் மஹான் (மகா அலக்ஸாந்தர்)
யுலிஸிஸ் கிராண்ட் ரண்டு சாஹசிக யாத்ராகல் (இரண்டு வீரதீரயாத்திரைகள்)
ஆதித்ய தீபிகா
சாண்டில்யா

1922 – விக்ரமாதித்யன் திருபுவன மல்லனும் ஹர்ஷ வர்த்தனனும்

1931 – காமுகன் (மாப்ஸானின் பெ ப் அமி மொழிபெயர்ப்பு)

1933 – கார்மென் (பிராஸ்பெர் மெரிமீ ின் கார்மென் மொழிபெயர்ப்பு)

1935 – நவலோகம் (புது உலகம்)

1936 – பிரேதங்கள் (இப்ஸென்னின் கோஸ்டுகள் – மொழிபெயர்ப்பு)

1937 – ரூப மஞ்சரி

1941 – ஒரு ஸ்திரியுடே ஜீவிதம்

1945 – ஓமனகல்

1947 – ஆப்பிள் பூமொட்டு

1949 – மூனு ஹாஸ்ய கதகள் (மூன்று சிரிப்புக்கதைகள்)

1952 – மோப்ஸான் – ஜின்டே செருகதகள் (மாப்ஸானின் சிறுகதைகள்)

1954 – சாஹித்ய கவேஷணமாலா – முதலாம் பாகம்

1957 – பிரச்சின கேரள சரித்ரா காவேஷணம் (கேரளத்தில் புராதன சங்கேதிக கிரந்த நிரூபணங்கள் ; சரித்திர ஆராய்ச்சி)

1958 – ஒன்பது ஃபிரெஞ்சு கதகள் (ஒன்பது ஃபிரெஞ்சு கதைகள்)
நாலூ ஹாஸ்ய கதகள்.

1959 – சாஹித்ய விமர்சனங்கள் (இலக்கிய விமர்சனங்கள்)
ஆதாம் உர்பாஸ் (ஜேகப் வர்செர்மன்)

1960 – குரேக்கூட்டி சங்கேதிக கிரந்த நிரூபணங்கள்

1961 – எட்டு பஸ்சாதிய கதகள் (எட்டு மேற்கத்திய கதைகள்)

1961 – கேசரியூட முக பிரசனங்கள்.

1984 – கேசரியூட சாஹித்ய விமர்சனங்கள்

1986 – சரித்திரதின்டே ஆதிவேருகள் (சரித்திரத்தின் வேர்கள்)

# குறிப்பிட்ட புத்தக அட்டவணை

## மலையாளம்


கே.பி. சங்கரமேனன் – கேசரியுடெ கதா – வாழ்க்கை வரலாறு (1981)

கேதமங்கலம் பாப்புகுட்டி – நான் கண்ட கேசரி (1961)

எம்.என். விஜயன் – சித்தயிலே வெளிச்சம் (1981)

டாட்டாபுரம் சுகுமாரன் – கேசரி பாலகிருஷ்ண பிள்ளை (1982)

என். கிருஷ்ண பிள்ளை – கைராலியுடெ கதா (1975)

கேரள சாஹித்ய அகாதெமி (பதிப்பு) – சாஹித்ய லோகம் (1980)


## ஆங்கிலம்


கே.எம். ஜியார்ஜ் – எ சர்வே ஆஃப் மலையாளம் லிட்ரேசர் (1968)

கே.எம். ஜியார்ஜ் – வெஸ்டர்ன் இன்புளுவன்ஸ் ஆன் மலையாளம் லாங்குவேஜ் அண்டு லிட்ரேசர் (1972)

கிருஷ்ண சைதன்யா – எ ஹிஸ்டரி ஆஃப் தி மலையாளம் லிட்ரேசர் (1971)

பி.கே. பரமேஸ்வரன் நாயர் – ஹிஸ்டரி ஆஃப் மலையாளம் லிட்ரேசர்.

## சிலவார்த்தைகளின் சரியான உச்சரிப்புகள்

அட்டக்கதா
சிலப்பதிகாரம்
சரித்திரத்தின்டே ஆதி வேருகள்
எலிவானம்
ஹாஸ்ய லஹரி
கடத்து வாஞ்சி
களித் தோழி
கல்பகனிதா
காமுகன்
காவ்ய தர்சம்
குட்டப்பன்
மங்களோதயம்
மணிநாதம்
மித்தாவதி
நவகேரள சிற்பிகள்
நிமிஷம்
பாபிகள்
பாப்புண்ணி
பரமார்த்தன்னல்
பச்சிமோதயம்
பிரளயா
புறநானூறு
ராஜ்ய சமஸ்காரம்
ரண்டிதங்கலி
ரதி சாம்ராஜ்யம்
ரூபமஞ்சரி
சாஹித்ய – சாயம்
சாஹித்ய விமர்சனங்கள்
சமதர்சி
சரவண ஜாதா
சுவேதாபிமானி
ஸ்பன்டிக்குன்ன அஸ்திமாடம்
தலையோடு
உபன்யாசம்

**ஏ. பாலகிருஷ்ண பிள்ளை** (1889–1960) அவர்கள் எல்லாராலும் கேசரி பாலகிருஷ்ண பிள்ளை என்று அழைக்கப்பட்டார். "கேசரி" என்ற பெயரில் வெளிவந்த பத்திரிக்கையின் ஆசிரியராக அவர் இருந்ததால் அப்படி அழைக்கப்பட்டார். அவர் நவீன மலையாள இலக்கியத்தில் புகழ்பெற்ற கர்த்தாக்களுள் ஒருவர். கவர்ச்சி மிக்க எழுத்தாளர். முன்னாள் திருவாங்கூர் ராஜ்யத்தில் திவானாக இருந்தவரின் வெறுக்கத்தக்க ஏதேச்சாதிகாரப் போக்கை 'கேசரி' பத்திரிக்கையில் பயமின்றி ஒருவராக எதிர்த்து நின்று எழுதினார். அவர் புதிய கொள்கைகளை வரவேற்பவர். பழைய வழக்கங்களை இரக்கமின்றிச் சாடினார். சமூகத்தின் மாறுகின்ற தன்மைகளுக்கேற்ப மக்களைப் புதுயுகத்துக்கு அழைத்துச் செல்ல கடினமாக உழைத்தவர். பிரெஞ்சு, ஜெர்மனி, ரஷ்ய நாடுகளின் இலக்கியங்களை மலையாளத்துக்கு முதலில் அறிமுகப்படுத்திய தலை சிறந்த விமர்சகரும் அவரே. அவரது மனிதாபிமான அணுகுமுறை தனிமனித சுதந்திரத்துக்காகவும், முன்னேற்றத்துக்காகவும். பாடுபடும் வீரராக அவரை ஆக்கியது.

முற்போக்குக் கொள்கைகள் கொண்ட நாவலாசிரியர்கள், கேசவதேவ், தகழி, போன்றவர்களை ஊக்குவித்து எழுதத் தூண்டிய பெருமை கேசரி பாலகிருஷ்ணபிள்ளை அவர்களையே சாரும்.

இந்த நூலின் ஆசிரியர் டாக்டர் கே.எம். ஜியார்ஜ், புகழ்பெற்ற படிப்பாளி, விமர்சகர், படைப்பிலக்கிய கர்த்தா, பத்திரிக்கை ஆசிரியர், ஆவார். இவர் சோவியத் நாட்டின் நேரு விருதையும், பத்மஸ்ரீ விருதையும் பெற்றவர். மலையாளம், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் நாற்பது நூல்களுக்கு மேல் எழுதியுள்ளார். "கம்பாரடிவ் இன்டியன் லிட்ரேசர்" என்ற வெளியீட்டின் மூலம் டாக்டர் ஜியார்ஜ் அவர்களின் புகழ் நாட்டின் எல்லைகளைக் கடந்து சென்றுள்ளது. அந்த வெளியீட்டின் நெறியாளரும், முதன்மை ஆசிரியரும் அவரே. சிலகாலம் கேரள சாகித்திய அக்காதெமியின் உபதலைவராகவும் அவர் இருந்தார். டாக்டர் ஜியார்ஜ் இச்சிறு நூலில் பிள்ளையவர்களின் வாழ்க்கைபற்றி விரிவாகக் கூறியுள்ளார். அவரது படைப்புகளைப் புரிந்து கொண்டு அவைகளைத் திறமையுடன் எடைபோட்டுள்ளார். மலையாளம் அறியாத வாசகர்களுக்கு பிள்ளையின் தகுதியின் சாரத்தை திறமையுடன் எடுத்துக் கூறியிருக்கிறார்.

இந்நூலைத் திறம்பட தமிழாக்கம் செய்துள்ள சைதை சுந்தரமூர்த்தி, தலைமை ஆசிரியராக இருந்து ஓய்வு பெற்றவர். நல்லாசிரியர் விருது பெற்றவர்.

Kesari Balakrishna Pillai (Tamil) **Rs. 25**
ISBN–81–260–0595–5